
கல்கி
வைரவிழா ஆண்டு
KALKI 19.8.2001
ரூ. 5.00
இலவச இணைப்பைக் கேட்டு வாங்குங்கள்!
அவரே தான்...
...இவர்!
வாரம் ஒரு பட்டுப் புடைவை பரிசுப் போட்டி

# ஜூனியர் பெரியார்!

மணி, ராஜா என பலர் நடிக்கக் கூப்பிட்டும் 'டேக்கா' கொடுத்துக் கொண்டிருந்த பாடகர் ஹரிஹரன், கடைசியில் இயக்குனர் ஜெயதேவி விரித்த வலையில் 'தொபீல்'...!

'பவர் ஆஃப் விமன்'



* லலித் கலா அகாடமியில்...




* டேக் ஒன்...

படத்தில் சின்ன வயசு பெரியாராக நடிக்கிறார் ஹரிஹரன்.

வைக்கம் போராட்டம், பகுத்தறிவுப் பிரசாரம், கறுப்புச் சட்டை... ஸ்டாப்... ஸ்டாப்... நீங்களாகவே ஏதேதோ கற்பனை செய்து கொண்டுவிட வேண்டாம். பெரியார் போன்ற குணசித்திரத்தில் நடிக்கிறார் அவ்வளவே!

"பெரியாரை, வெண் தாடி வைச்ச பெரியவரா, கருத்தாளரா, பேச்சாளராதான் நமக்கெல்லாம் தெரியும். அதுவே அவர் இளம் பிராயத்துல எவ்வளவு துடிப்பா இருந்திருப்பாரு? அந்த இளைஞர், இசைக் கலைஞராகவும், ஓவியராகவும் இருந்தால் எப்படியிருக்கும்?' என்று யோசித்தோம். அந்த காரெக்டரில்தான் ஹரிஹரன் நடிக்கிறார்" என்றார் இயக்குனர் ஜெயதேவி.

ஹரிஹரனைத் தேர்ந்தெடுத்தது ஏன்?

"கதையின் போக்கு அப்படி... இந்தியப் பெண்ணான குஷ்பு, அமெரிக்கா வாழ் இந்தியர் ஒருவரைக்



• ஜெயதேவி

கல்யாணம் செய்து கொள்வதால், ஏற்படும் கலாசாரப் பிரச்னைகளை அடிப்படையாகக் கொண்டது. குஷ்புவுக்கு உதவி செய்யும் 'ஜூனியர் பெரியார்'தான் ஹரிஹரன். அப்படிப்பட்டவர், இயற்கையிலேயே மனிதநேயமும், பரந்த மனப்பான்மையும் உள்ள கலைஞனாக இருக்க வேண்டும் என்று தேடி, முதலில் நடிகர் பார்த்திபனைத்தான் தேர்வு செய்தோம். அவரும் நெகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டார். ஆனால் பட ஏற்பாடுகள் தள்ளிப்போகவே அவர் கொடுத்த தேதிகளை எங்களால் பயன்படுத்த முடியவில்லை. மறுபடி கதாநாயகன் வேட்டை ஆரம்பித்தது. அந்த சமயத்தில்தான் ஒரு புத்தகக் கடையில் ஹரிஹரனின் 'ஆத்மா' இசைக் கேஸட் பார்த்தேன். உடனே என் மனத்தில் இவர் தான் நம்ப ஜூனியர் பெரியார் என்று தோன்றிப் போச்சு! முழுக்கதையையும் கேட்டுவிட்டு ரொம்பவே இம்ப்ரெஸ் ஆயிட்டாரு... உடனே ஒப்புக்கிட்டாரு" என்றார் ஜெயதேவி சந்தோஷமாக.

இயக்குனர் ஜெயதேவி எழுபதுகளில் பிரபலமாக இருந்தவர். 'விலாங்கு மீன்', 'நலம்...நலமறிய ஆவல்', 'மற்றவை நேரில்' படங்கள் தந்தவர். தி.க.காரர். திராவிடக் கட்சியில், கலைத் துறையில் துணைப் பொதுச் செயலாளராகப் பதவி வகிக்கிறார்.

"தமிழ்ப் பற்றுள்ள நீங்களே ஆங்கிலத் தலைப்பு வைக்கலாமா?" என்று கேட்கிறார்கள். இது சும்மா ஃபேஷனுக்காக வைக்கப்பட்ட தலைப்பல்ல. இது சர்வதேச சந்தைக்காகத் தயாரிக்கப்பட்ட படம். கதையில் முக்கால்வாசி கனடா நாட்டில் நடக்கிறது. உலக சினிமா விழாக்களில் திரையிடப்படுவதற்குரிய அம்சங்கள் கொண்ட படமாகத் தயாரிக்கப்படவிருப்பதால், ஆங்கிலத் தலைப்பு சூட்டியிருக்கிறோம்.

"பெண்களின் பிரச்னைகளை அலசும் இந்தப் படத்துக்கு 'சக்தி' என்ற பெயர் தான் பொருத்தமாக இருக்கும். ஆனால் ஒரு பிரச்னையிருக்கு. இதை சாமிப்படம்னு நினைச்சுக்கிட்டு, வேப்பிலை டான்ஸ், அம்மன் அருள், பாம்பு கிராஃபிக்ஸ்னு எதிர்பார்த்துக்கிட்டு வருவாங்க. அப்படி எந்த இமேஜூம் கொடுக்க விரும்பவில்லை" என்கிறார் ஜெயதேவி.

லலித் கலா அகாதமியில் எடுக்கப்பட்ட முதல் காட்சியிலேயே குஷ்புவுடன் போட்டி போட்டுக் கொண்டு நடித்தாராம் ஹரிஹரன்.

"நிறைய வீடியோ ஆல்பங்களில் நடித்திருக்கிறேன். ஆனால் கதாநாயகனாக நடிக்கும் அனுபவம் த்ரில்லிங்தான். காரெக்டருக்காக மொட்டை போடவும், தாடி வளர்க்கவும் கூட தயார்னுதான் சொன்னேன். ஆனால், அமெரிக்க இசைக் கலைஞனாகத்தான் நடிக்கிறீர்கள். இந்தக் குறுந்தாடியும், கடுக்கனுமே பொருத்தமாயிருக்கு என்று சொல்லி விட்டார்கள்" எனும் ஹரிஹரன், பெரியாரின் சரிதையைப் படிக்க ஆரம்பித்திருக்கிறாராம்.

— டாலி

● பட்ஜெட் கூட்டத் தொடரைச் சந்திக்க தொடை தட்டித் தயாராகிறார்கள் தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர்கள். முதல் சட்ட மன்றக் கூட்டத்தின்போது கொஞ்சம் பிர மிப்பு கலந்த 'பயத்துடன்' இருந்த கழக உறுப் பினர்கள், இந்த முறை சீறும் பாம்புகளாக இருப்பார்களாம். பொதுப்பணித்துறை, போக்கு வரத்துத் துறை ஆகியவற்றில் இந்த மூன்று மாத காலத்தில் நடந்த் குளறுபடிகள், கோல்மால்கள் பட்டியல் போடப்படுகின் றன. ஜெயலலிதா கலைஞர் மீதும், தி.மு.க. அரசின் மீதும் தினசரி ஒரு புகாரை எடுத்து விட்டுப் பரபரப்பூட்டுவார் என்று தி.மு.க. எதிர்பார்க்கிறது. அந்தச் சூழ் நிலையில் கழகத்திற்குக் கை கொடுக்க பா.ம.க. உறுப்பினர் கள் தயங்காமல் முன் வருவார் களாம். சட்டமன்றச் செயலாள ராக ஒப்பந்த முறையில் நியமிக்கப் பட்டுள்ள ஜானகிராமனைப் பற்றி யும் பிரச்னை வரும் என்று சொல் கிறார்கள். அதே சமயம், பல புதிய திட்டங்களை, பட்ஜெட்டில் அறி விப்பதன் மூலம் மக்களை தம் பக்கம் தொடர்ந்து தக்க வைக்கும் முயற்சியிலும் இறங்கியிருக்கிறார் ஜெயலலிதா. கரும் புக்கு டன் ஒன்றுக்கு ஆயிரம் ரூபாய், பெண்களுக்கான பல நலத்திட்டங் கள் என்று பட்ஜெட் மக்களைக் கவரும்படி இருக்குமாம்.

● அ.இ.அ.தி.மு.க. மீது கொஞ்சம் சாஃப்ட் கார்னர் உள்ள ஐ.ஏ.எஸ். மற்றும் ஐ.பி.எஸ். அதிகாரிகளின் ரகசியக் கூட்டம் ஒன்று சமீபத்தில் அண்ணா நகரில் நடந்ததாம். ஜெய லலிதா மற்றும் கருணாநிதி இருவரி டையே நடக்கும் அரசியல் பழிவாங் கல்களில் தாங்கள் பலிகடா ஆக்கப் படும் நிலை பற்றி விவாதிக்கப்பட்டதாம். "இனி கொஞ்சம் அடக்கி வாசிக்க வேண் டும்" என்று முடிவெடுக்கப்பட்டதாம். ரமேஷ் கொலை வழக்கு விசாரணையில் தேவையில்லாமல் பதினாறு அடி பாயத் துடித்த காவல்துறை அடக்கி வாசிப்பதன் காரணம் இதுதானாம்.

மத்திய தீர்ப்பாயம், போலீஸ் அதிகாரி களின் மாற்றலுக்குத் தடை ஏதும் விதிக் காததும் படபடப்பை உண்டாக்கியிருக் கிறது. இதற்கிடையில், தேசிய பாதுகாப்புப் படைத் தலைவர் பொறுப்புக்கு நியமிக்கப் பட்ட ராஜகோபாலனை விடுவிப்பதற்கு ஜெ. 'ஓ.கே.' சொல்லிவிட்டாராம். சில 'பெரியவர்கள்' கொடுத்த ஆலோசனைக்குப் பலன் இது என்கிறார்கள்.

● அ.இ.அ.தி.மு.க. கட்சி அமைப்பில் பல அடிப்படை மாறுதல்களைச் செய்ய ஜெ. தீர்மானித்திருக்கிறார். இதற்காக முன்பு செய்ததைப் போல தொண்டர் தரிசனக் கூட்டங்கள், நடக்கவிருக்கின்றன. கோட்டை யில் ரத்தத்தின் ரத்தங்கள், தினசரி நூற்றுக் கணக்கில் திரண்டு, சிபாரிசு, காண்ட்ராக்ட்



## ஒரு டஜன் அமைச்சர்களுக்கு கல்தா?...

என்று வராண்டாக்களில் திரிவதையும் கட்டுப்படுத்த நினைக்கிறாராம் ஜெ. இதற்கிடையில், அமைச்சர்களின் மூன்று மாதச் செயல்பாடுகள் பற்றிய ரகசிய அறிக்கை ஒன்றைப் புலனாய்வுப் பிரிவு முதல்வருக்குக் கொடுத்திருக்கிறது. ஒரு டஜன் அமைச்சர்கள் செயல்படாத அமைச்சர்களாக அடையாளம் காணப் பட்டிருக்கிறார்கள். பட்ஜெட் கூட்டத் தொடருக்குப் பிறகு அவர்கள் மீது கை வைக்கப்படுமாம்.

— சஞ்சயன்

வட்ட முகத்தில் மின்னல் கோடு கிழித்த மாதிரி பளிச் சென்ற பாந்தமான கண்கள். கூர்மையான நாசிக்கும், அகலமான நெற்றிக்கும் ஒரு தொடர்பை ஏற்படுத்துவது போல, புருவ இடை வெளியில் ஒரு கறுப்பு ஸ்டிக்கர் பொட்டு. இது போதாதென்று கிட்டத்தட்ட வழக்கொழிந்து விட்ட பாவாடை தாவணியில்

# ஹாய்ப்பே, ஏன் வாசல் வந்தாய்!



• அவரேதான்...

அடக்கமாய் வந்து நின்று "நைஸ் டு மீட் யூ" என்று நளினமாய்க் கைகூப்பு கிறார்.

'அடடா! இவரை எங்கோ அடிக்கடி பார்த்திருக்கிறோமே! ரொம்ப பரிச்சய மான முகமாக இருக்கிறதே' என்று நினைவு அடுக்குகளில் துழாவிக் கொண்டிருக்கும் போதே, ஞாபகம் வருவது நடிகை ஷோபா வின் முகம். ஆனால் இவர் 'பாண்டவர் பூமி' ஷமிதா. கைகளை நெஞ்சுக்குக் குறுக் காகக் கட்டிக் கொண்டு, ஆசிரியர் முன் அடக்கம் காட்டும் மாணவியைப் போல தாழ்ந்த குரலில் பேசத் தொடங்குகிறார்.

"'பொற்காலம்' பட ப்ரீவியூ காட்சிக்குக் குடும் பத்தோடு போயிருந்தோம். அப்போ இயக்குனர் சேரன் என்னைப் பார்த்துட்டு 'நீங்க நடிக்கிறீங் களா?'ன்னு ஸ்பாட்டிலேயே கேட்டார். எனக்குத் தலைகால் புரியலே. "பொறுமையா வீட்டிற்குப் போய் எல்லோரையும் கலந்து பேசிட்டு அப்புறம் சொல்லுங்க" என்றார். அதற்குப் பிறகு டி.வியிலே பார்க்கிற எல்லா படத்துலேயும், நானே ஹீரோயினா நடிக்கிற மாதிரி ஒரு பிரமை! சேரன் படத்துல வாய்ப்புக் கிடைக்கிறதுன்னா சும்மா இல்லேன்னு, எல்லோரும் போட்டி போட்டுக் கொண்டு எனக்கு அட்வைஸ் பண்ணினாங்க. எனக்கு ஒரு பக்கம் த்ரில்... இன்னொரு பக்கம் பயம். ஏன்னா நடிப்பு பற்றி, எனக்கு அரிச்சுவடி கூட தெரியா தேங்கிற தயக்கம். அந்தக் கவலையே வேணாம். சேரன் உன்னை நடிக்க வைச்சுடுவாருன்னு மறுபடியும் உற்சாகப் படுத்தினாங்க. அதற்குள்ளே 'தேசிய கீதம்' படம் தொடங்கிட்டாங்க. எனக்கு அழுகையே வந்துடுச்சி. ஒருவழியா மனசைத் தேற்றிக் கொண்டு, கல் லூரிக்குப் போக ஆரம்பித்தேன். எஸ்.ஐ.ஈ.டி.யில் பி.ஏ. மனையியல் முதல் வருஷம்" சின்ன சஸ்பென்ஸோடு நிறுத்திவிட்டுத் தொடர்ந்தார்.

"திடீரென்று ஒருநாள் சேரன் சார் அலுவலகத்திலிருந்து தொலைபேசி அழைப்பு வந்தது. உடனே ஸ்கிரீன் டெஸ்டுக்கு வரச் சொன்னாங்க. போனேன். அதில் 'ஓகே'ன்னு தெரிஞ்ச பிறகுதான் உயிரே வந்தது.

"அப்புறம் ஒரு வாரம் கழித்து, 'விண்ணோடும் முகிலோடும்' படத்துக்கு நாளேடுகளில் விளம்பரம் வந் திருந்தது. அதில் நான்தான் ஹீரோயின் என்று இயக்குனர் அறிவித் திருக்க, ஃபைனல் செமஸ்டர்லே, முதல் வகுப்புலே பாஸ் பண்ணின மாதிரி எக்கச்சக்க சந்



தோஷம். வீட்டிற்கு வந்த, தோழிகள், உறவுக்காரங்க எல்லோருக்கும் பால் பாயசம், ட்ரீட்னு ஒரே கொண்டாட்டம்தான். ஆனால் இந்தக் கொண்டாட்டம் ரொம்ப நாள் நீடிக்கலே. 'தவிர்க்க முடியாத காரணங்களால 'விண்ணோடும் முகிலோடும்' படத்திட்டத்தைத் தள்ளி வைச்சிருக்கோம்'னு சொன்னாங்க. எனக்குக் காய்ச்சலே வந்துடுச்சு. ஒரு வாரம் படுத்த படுக்கையாயிட்டேன். படிப்பையும் பாதியிலேயே விட்டுட்டோமேங்கற கவலை வேற இன்னொரு பக்கம், உறுத்த ஆரம்பிச்சது.

"ஒரு ஆறு மாதம் ஓடியிருக்கும். சேரன் சாரே வீட்டுக்கு ஃபோன் பண்ணினார். "என்னை நம்பி படிப்பையும் விட்டுட்டு இவ்வளவு பொறுமையா இருந்த உன்னை, 'பாண்டவர் பூமி'லே கதாநாயகியாக்கப் போறேன். உனக்கு சந்தோஷம்தானே... இனிமே என்னைச் சபிக்க மாட்டியே?'ன்னு இன்ப அதிர்ச்சி கொடுத்தார்..." என்று ஷமிதா ஆனந்தமாய்க் கண்கலங்கினார்.

"ஓ... நீங்க ஹீரோயின் ஆனதன் பின்னணியிலே இவ்வளவு பெரிய ஃப்ளாஷ்பேக் இருக்கா?" என்று ஆச்சர்யம் காட்டியபடி... "அது சரி, சேரனிடம் கதை கேட்டீர்களா?" என்றால்... "அய்யோ...!" என்று வாயில் போட்டுக்கொள்கிறார்.

"இரண்டு முறை தேசிய விருது வாங்கின இயக்குனர்கிட்டே போய் கதை கேட்க எனக்கு என்ன பைத்தியமா..? ஆனால் ஈகோ எதுவும் இல்லாமல் அவரே கதையைச் சொன்னார். என் கேரக்டரைப் பற்றி நிறைய பேசினார். ஒரு டிபிகல் கிராமத்துப் பெண்ணா வெளுத்து வாங்கியிருக்கேன். இப்போ முழுப் படமும் முடிந்து ரிலீஸுக்குத் தயார். 'பாண்டவர் பூமி'யில் நடித்தது, ஒரு ஃபிலிம் ஸ்கூலில் போய்ப் படிச்சுட்டு வந்த மாதிரி இருக்கிறது" சந்தோஷப்பட்டார்.

"இங்கே கவர்ச்சியை நம்பி பிழைப்பு நடத்திக் கொண்டிருக்கும் கதாநாயகிகளுக்கு மத்தியில் 'ஹோம்லி லுக்குடன்' நக்கும் நீங்கள் எப்படி போட்டி போடப் போகிறீர்கள்?" என்றால்...



"நிச்சயமா எனக்குன்னு ஒரு இடம் தமிழ் சினிமாவில் இருக்கு... அது கிடைக்கும்" என்று நம்பிக்கையோடு சொல்கிறார்.

பி.எச். அப்துல் ஹமீதின் தமிழ் உச்சரிப்பு மீது ஷமீதாவுக்குக் காதல். 'அவர் மாதிரி தமிழைத் தமிழாகப் பேச வேண்டும். அவர் கற்றுத் தருவாரா' என்று கேட்கிற ஷமிதாவின் இயற்பெயர் பவானி. 'விண்ணோடும் முகிலோடும்' படத்திற்காக ஷிவானியாக மாறி இப்போது ஷமிதாவாக மாறி இருக்கிறது.

'இனி பெயர் மாற்ற வேண்டிய அவசியம் இருக்காது' என்று தீர்க்கமாய் ஒரு புன்னகை பூத்தார்.

சந்திப்பு : **விஷ்ணுவல்தாசன்**

'... இவர்!

# கிடக்கட்டும் கழுதை!



• மிலிண்ட் சோமன்

**வா**ஜ்பாயியையே கலக்கி விட்டார்களே சிவசேனைக்காரர்கள்? சேனை எம்.பி சஞ்சய் நிருபம், யூ.டி.ஐ ஊழலுக்கும், பிரதமரின் ஆபீசுக்கும் தொடர்பு இருப்பதாக அறிவித்தாலும் அறிவித்தார், வாஜ்பாயி ராஜினாமா நாடகம் அரங்கேற்றும் லெவலுக்குப் போய்விட்டதே! உள்ளூர் பிஜேபிக்காரர்கள் கொதித்தெழுந்து 'நிருபம் மன்னிப்புக் கேட்டாக வேண்டும்... இல்லாவிட்டால்...' என்று ஒரு கையில் சிவசேனைக்கு விவாகரத்து நோட்டீசும், மறுகையில் என்.சி.பிக்கு மஞ்சள் கையிறுமாகப் பிடித்துக்கொண்டு பயமுறுத்துகிறார்கள். தாக்கரேவா பயப்படுவார்? தேஷ்முக் அரசைக் கவிழ்க்க முடியாமல் கழுத்தறுத்துவிட்டார்களே என்று பி.ஜே.பி மீது பழைய காழ்ப்புணர்ச்சி வேறு! "அதெல்லாம் புதிதாக மன்னிப்பெதுவும் கேட்க முடியாது; அன்றே நிருபம் மன்னிப்புக் கடிதத்தை தாக்கல் செய்துவிட்டார். ராஜ்யசபை சேர்மன் அதை ஏற்காததற்கு (ரூல்ஸ் அப்படியாம்!) நாங்கள் என்ன செய்ய முடியும்? காந்தியின் குரங்குகள் போல், கண்ணைக் கட்டி, வாயையும் பொத்திக் கொள்ளச் சொல்கிறார்கள்; காது ஒன்றுதான் பாக்கி; அதை வைத்துக் கொண்டு இவர்கள் பேசுவதை எல்லாம் சும்மா கேட்டுக் கொள் என்கிறார்களா?" என்கிறார் காட்டமாக. டில்லியிலுள்ள சிவசேனை எம்.பிக்கள் மனோகர் ஜோஷி, சுரேஷ் பிரபு போன்றோர் சிக்கலை அவிழ்க்க முயற்சி செய்து கொண்டிருக்கையில், தாக்கரே என்னவோ மன்னிப்பு விஷயத்தை, 'கிடக்கட்டும் கழுதை' என்று நிற்க வைத்திருக்கிறார்.



• திடீர் ஸ்ட்ரைக்

**க**ழுதை விஷயமெல்லாவற்றிலும் அலட்சியமாக இருக்க முடியுமா என்ன? முனிசிபாலிடியில், வாகனங்கள் செல்ல முடியாத குன்றுப் பகுதி குடிசைக் குடியிருப்புகளிலிருந்து, குப்பையைக் கீழே கொண்டு வர, கழுதைகளை உபயோகிப்பது வழக்கம். பழைய காண்ட்ராக்டர், ஒரு கழுதைக்கு 148 ரூபாய் என்ற விகிதத்தில் 32 கழுதைகள் காட்கோபர், பாண்டுப் பகுதிகளுக்கு, சப்ளை செய்து



கொண்டிருந்தாராம். இந்தமுறை காண்ட்ராக்டரை மாற்றி, கழுதை ஒன்றுக்கு 332 ரூபாய் என்று, தேவைக்கு மீறி 60 கழுதைகள் வாங்கி எக்கச்சக்க ஊழல் செய்திருக்கிறார்கள். இது பற்றி எப்போதும் கழுதை சப்ளை செய்யும் நவிமும்பை வதாரி இனத்தினர் புகார் கொடுக்க, கார்ப்பொரேட்டர் தாராசிங், முனிசிபல் கமிஷனருக்குக் 'கழுதை இக்பாக்' விவகாரத்தைக் கவனிக்கும்படி வலியுறுத்தியிருக்கிறார். யாருக்கு உதையோ?

கழுதைக்கு வேண்டுமானால் காதுகள் விறைப்பாக நின்றால் நன்றாயிருக்கும்; மனிதர்களுக்கு...? பிரபல



மாடல் மிலிண்ட் ஸோமனுக்கு தன் காதுகளையே நம்பமுடியவில்லை; நல்ல சர்ஜனாகப் பார்த்து, கொஞ்சம் இப்படி அப்படி வெட்டி, குறுக்கி, காதுகளை உள்ளடக்கி விட்டார். காதும் காதும் வைத்தார் போல் இவர் செய்துகொண்ட ஆபரேஷனை உங்கள் காதில் போட்டாகிவிட்டது!

சரி.... ஏதோ இது மாதிரி விஷயங்களை ரகசியமாகச் செய்துகொண்டால் போனால் போகிறதென்று விட்டு விடலாம். ஆனால் 46,000 BEST பஸ்களையே நம்பி இருக்கும் போது? ஒரு முன்னறிவிப்புமில்லாமல் திடீரென்று 'ஃப்ளாஷ் ஸ்ட்ரைக்' செய்து மக்களை வெறுப்பேற்றி விட்டார்கள். அதுவும் 'யூனிட் டெஸ்டு'கள் துவங்கிய நாளன்று இப்படிச் செய்தது பல பெற்றோர்களைக் கொதித்தெழச் செய்தது. "இவர்களுக்கு போனஸூம் வேண்டாம், ஒன்றும் வேண்டாம்; யூனியன் லீடர்கள் மக்களை மாங்காய் மடையர்கள் என்று நினைத்துக் கொண்டு விட்டார்களா? இவர்களிடம் அரசு, தயவு காட்டவே கூடாது" என்று மக்களே கூக்குரலெழுப்பி, கேஸூம் போட்டிருக்கிறார்கள்!

ஆனால் நாம் சொல்வது ஒன்று செய்வது மற்றொன்று; பொதுமக்களை உபத்ரவிக்கக்கூடாது என்று இவர்கள் சொல்லிவிட்டு, இவர்களே ஸ்ட்ரைக் செய்தால்?... பாருங்களேன்... ஹிந்தி வித்யா பவன் பள்ளியில்.. பள்ளிக் கட்டணத்தை 265லிருந்து 830 ரூபாய் ஆக ஆக்கி விட்டார்கள் என்று (அரசு மான்யம் கிடையாது) பெற்றோரும் மாணவர்களும் சாலை மறியலில் ஈடுபட்டு, நெடுநேரத்துக்கு பிஸியான மரீன் ட்ரைவ் ட்ராஃபிக்கை ஸ்தம்பிக்க வைத்துவிட்டார்கள்! போலீஸ் கமிஷனர் சிங் நேரில் வந்து சமாளிக்க வேண்டியிருந்தது!

சமாளிக்க முடியாமல்



• முஷாரஃப்



• வாஜ்பாயி

முற்றுப் பெற்ற விஷயங்களில் ஒன்று ஆக்ரா சம்மிட்! முஷாரஃப் மூட்டையைக் கட்டிக் கொண்டு பாகிஸ்தான் போய்விட்டாலும் அவரை வைத்துக் கொண்டு, எம்.டீ.விக்காரர்கள் அடிக்கும் கூத்து ஓயவில்லை. அண்மையில் MTV.India.Comன் சாட்ரூமுக்கு வந்த பிரச்னைக் கேள்வி - இந்தியர்கள் பாகிஸ்தானியர்களை மணமுடிக்கலாமா? அதற்கு வந்த கிறுக்குத்தனமான பதில்களை மும்பை மசாலாவில் எழுதினால் என்னை மூட்டை கட்டி அனுப்பி வைத்து விடுவார்கள். இந்தியாவில் சர்வாதிகாரச் சாயலுடன் அரசியல் புரியும் பெண்மணிகளின் பெயர்கள் அந்தப் பதில்களில் அடிபட்டன என்பதை மட்டும் சொல்லிக் கொள்கிறேன்!

— ஜெயஸ்ரீ ராஜ்

# அக்னிசர்மா பக்கம்

# நடக்குமென்பார்

## ஆகஸ்ட் 15 முதல் 21 வரை

**மேஷம் :** ஆத்தாடி! முதல்ல திருஷ்டி சுத்திப் போடுங்க. பின்னே இந்த வாரம் முழுவதும் உங்களுக்குக் கலக்கலான வாரமா இருக்கே. உங்க திறமையைப் பார்த்து எல்லாரும் புகழப் போறாங்க. சொந்த பந்தமெல்லாம் 'நானிருக்கேன்'னு ஓடி வருவாங்க. வெளியூர் / வெளிநாட்டுத் தொடர்புகள் டாலர் கொண்டு வந்து சேர்க்கும். எக்ஸ்போர்ட் இம்போர்ட் பிஸினஸ் பண்றவங்களுக்கு யோகமோ யோகம். பார்ட்னர்ஷிப்ல பிஸினஸ் செய்றவங்களுக்கு லாபம் கொட்டப் போகுது. இருந்தாலும் பேச்சில நிதானத்தைக் கடைபிடிக்கத் தவறிடாதீங்க.

**ரிஷபம் :** இலங்கை ஒருதினப் போட்டியில் தொடர்ந்து மூணு மேட்ச்ல ஜெயிச்சு ரசிகர்களைக் குஷிபடுத்திய இந்திய கிரிக்கெட் அணி மாதிரி உங்க செயல்பாடு எல்லாரையும் திருப்திப்படுத்தும். சிலருக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்குச் சான்ஸ் இருக்கு. பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வரவேற்பு அதிகரிக்கும். பெண்கள், புதுசா உடைகள் நகைகள் வாங்கப் போறீங்க. குடும்பத்துல சுப காரியத்துக்கான வேலைகள் நடக்கப் போகுது. சனி ஜென்ம ராசியில 'வாக்' போவதால் நீங்க அலையறதைத் தடுக்க முடியாது. பயணத்தைத் தவிர்த்திடறது நல்லது. முன்ன பின்ன தெரியாதவங்ககிட்ட அடக்கி வாசிங்க.

**மிதுனம் :** உங்க திறமை, அறிவெல்லாம் 'பச்சக்'குனு வெளிவரப் போகுது. எந்தக் காரியத்தைத் தொட்டாலும் 'பளிச்'தான். வீர தீரமான சாதனை புரிவீங்க. இதனால பாராட்டு மழைல நனைஞ்சு ஜலதோஷம் பிடிக்க வாய்ப்பிருக்கு. இந்தியாவும் பாகிஸ்தானுமா இருந்த கணவன் மனைவி உறவு இப்ப சுபமாயிடும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பெயர் புகழ் கூடும். இருந்தாலும் மனசுல சின்ன சின்ன குழப்பம் வந்து உண்டு இல்லைன்னு பண்ணும். அதுக்காக கலங்காதீங்க. எதிர்பாராத செலவுகள் டென்ஷனை ஏத்தும். சிக்கனம் அவசியம். வெளியூர் பயணத்தைத் தவிர்த்துடுங்க.

**கடகம் :** செஸ் விஜயலட்சுமிக்கு அர்ஜுனா விருது கிடைச்ச மாதிரி உங்களுக்கும் பெரிய வெற்றி கிடைக்கப் போகுது. கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ் போன்ற இனங்கள் லாபம் கொண்டு வரும். புதுசா பொருள்கள் வாங்க வாய்ப்பிருக்கு. குரு பன்னிரண்டுல சஞ்சாரங்கறதால இடமாற்றத்துக்கான சூழ்நிலை நெருங்கியிருக்கு. உழைப்பு அதிகமா விட்டே போனாலும் அபிவிருத்திக்கு வழி இல்லை. அரசியல்வாதிகள் அடக்கி வாசிக்கறது நல்லது. ஏடா கூடமா அறிக்கை விட்டு வம்புல மாட்டிக்க வேண்டாம். பதற்றத்தை விட்டுடுங்க.

**சிம்மம் :** குரு 11ல் ராகுவுடன் சஞ்சாரங்கறதால அனுகூலத்துக்குக் குறைச்சலில்லை. எதிர்ப்புகள் பஞ்சரான டயர் மாதிரி 'புஸ்' ஆயிடும். எதிரிகள் பி.டி. உஷாவை விட வேகமா ஓடிப்போய்டுவாங்க. சிலருக்கு அதிர்ஷ்ட காற்று ஜில்லுனு அடிக்கப் போகுது. வியாபாரிகள் இருக்கறதை விட்டுட்டுப் பறக்கறதுக்கு ஆசைப்பட வேண்டாம். கம்ப்யூட்டர் விஞ்ஞானம், எலக்ட்ரானிக்ஸ் துறைகளைச் சேர்ந்தவங்க அதிக பொறுப்போடு வேலை செஞ்சா மேலதிகாரிங்க வசவுகளிலிருந்து தப்பிக்கலாம். உடல் நலத்துல நல்ல கவனம் வைங்க. உஷ்ண சம்பந்தமான உபாதைகள் காத்திருக்கு. உஷார்!

**கன்னி :** அறுபத்தி ஒன்பது பந்துகள்ல செஞ்சுரி அடித்த சேவக் மாதிரி மனசுல புதுத் தெம்போட அலைவீங்க. எல்லாரும் புகழற மாதிரி ஏதாவது செய்யப் போறீங்க. வெளிநாட்டுல இருந்து நல்ல தகவல் வந்து சேரப் போகுது. வீடு, மனை, வாகனங்களில்

கல்கி 19.8.2001

ஓரளவு லாபம் பார்க்கலாம். ஓவியம், சிற்பம், எழுத்து, பத்திரிகைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கெல்லாம் முன்னேற்றம் வெளிச்சம் போடுது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குச் சின்ன சின்னப் பிரச்னைகள் வந்து இம்சிக்கும். ஜாக்கிரதை!

**துலாம் :** இதுவரை கண்டும் காணாம இருந்த பெரியவங்க எல்லாம் உங்களைத் தேடி வந்து உதவுவாங்க. பணம் பல வழிகள்ல இருந்து வந்து பீரோவை நிரப்பும். திடீர்னு ஆன்மிகம் பக்கம் மனம் பாயும். இதுவரை இழுத்தடிச்சிட்டு இருந்த வரவு பணம், இப்ப வந்து தெம்பளிக்கும். பெண்கள் தங்கள் எண்ணங்களை நிறைவேத்திக்குவாங்க. அரசியல்வாதிகளுக்குப் பாராட்டுக் கூட்டம் அது இதுன்னு மதிப்பு பத்து மடங்கு ஜிவ்வுனு ஏறும். பேசும்போது அமைதி அவசியங்க.

# நடக்கும்

**விருச்சிகம் :** 'வருமா? வராதா?' என்று ஏங்கிட்டிருந்த நல்ல தகவல் வந்து சேரப் போகுது. சந்தோஷத்துல துள்ளப் போறீங்க. சட்டம், காவல் இராணுவத் துறைகளைச் சேர்ந்தவங்க வீர தீர சாதனை புரிஞ்சு மெடல் குத்திக்க சான்ஸ் இருக்கு. எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு மாமூலான பலன்ல பாதிப்பு இல்லை. விவசாயிகள் கொஞ்சம் தள்ளாட்டம் காண வேண்டி வரும். பெரியவங்க ஆலோசனைகளைக் கேட்டு நடந்தா நல்லது. புதியவங்ககிட்ட பழகும்போது எச்சரிக்கை அவசியம். நிதானம் அவசியம்.

**தனுசு :** தமிழகத்துக்கு மத்தியத் திட்டக் குழு கேட்டதைவிட கூடுதலா நாற்பது கோடி கொடுத்திருக்கறது மாதிரி தேவைக்கு அதிகமா பணம் வந்து கொட்டப்போகுது. நல்ல செய்தி தேடி வரும். 'டும்டும்'க்கு வழி பிறக்கும். வெளிநாட்டுல இருந்து எதிர்பார்த்த தகவல் வந்து சேரும். அதிர்ஷ்ட வாய்ப்புகள் தேடி வரும். பேச்சாற்றல் அதிகரிக்கும். பன்னிரண்டில் செவ்வாய் நடனமாடுவதால் உஷ்ண சம்பந்தமான நோய்கள் வந்து பாடாய்படுத்த வாய்ப்பிருக்கு.

**மகரம் :** மலேசிய போட்டியில் இங்கிலாந்து அணியை வென்ற இந்திய ஹாக்கி அணி மாதிரி மனசு தெம்பா இருக்கும். எடுத்தக் காரியத்தை எப்பாடு பட்டாவது நிறைவேற்றிடுவீங்க. மனை, நிலம், வீடு, வாகனம் போன்ற இனங்கள் ஆதாயம் கொண்டு வரும். ஏற்றுமதி இறக்குமதி பிசினஸ் பண்றவங்களுக்கு லாபம் கொட்டும். கணவன் மனைவி அடக்கி வாசிக்கறது நல்லது. இல்லேன்னா பிரச்னைகள் வர வாய்ப்பிருக்கு. பொருளாதாரம் சம்பந்தப்பட்ட விஷயங்கள்ல கண்ணுல விளக்கெண்ணெய் விட்டுட்டு செயல்படறது உதவும்.



**கும்பம் :** உங்க திறமையைப் பார்த்து எல்லாரும் வாய் பிளக்கப் போறாங்க. முதல்ல திருஷ்டி சுற்றிப் போடுங்க. புதிய பட்டம் பதவி தேடி வரும். எந்தக் காரியத்திலயும் வெற்றி அடைவீங்க. பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கெல்லாம் முன்னேற்றமான வாரம். போட்டி, வழக்கு, பந்தயங்களில் வெற்றி உண்டு. அலைச்சல் அதிகரிக்கும். பெண்கள் புது நகைகள் வாங்க வாய்ப்பிருக்கு. மத்தவங்ககிட்ட பேசும்போது இனிமையா பேசினா பிரச்னைகள்ல இருந்து தப்பிக்கலாம்.

**மீனம் :** கிரகங்கள் ஜாலியா இருக்கறதால உங்க திட்டங்களுக்கெல்லாம் எந்த குறையும் வராது. கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புதிய ஒப்பந்தங்கள் வரலாம். பெண்கள் புது வகையான பொருட்கள் வாங்க வாய்ப்பிருக்கு. சின்ன சின்ன குறுக்கீடுகள் இருந்தாலும் உங்க திறமையும் மதிப்பும் வீண் போகாது. உடல் நலத்துலயும் கொஞ்சம் கவனம் வையுங்க. பயணம் தவிர்ப்பது நல்லது. பெரியவங்க யோசனைப்படி நடந்தா நன்மை ஏற்படும்.

**மேஷ ராசிக்காரரான மாடல் மகேஷ்வரிக்கு வெளிநாட்டுத் தொடர்புகள் டாலர் கொண்டு வந்து சேர்க்குமென ஜோசியம் கணிக்கப்பட்டுள்ளது.**






2001 ஆகஸ்ட் 19
விஷு ஆவணி 3
மலர் : 60
இதழ் : 3

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## தண்ணீர் விட்டோ வளர்த்தோம்...?

ஏர்வாடியில் நடந்த கொடூரத்தைக் கண்டு மனமும் உடலும் பதறித் துடிக்கின்றன. 'அறியாமையும் ஏழைமையும் மட்டுமே இந்த பாரத நன்னாட்டின் சொத்துக்களாக மிஞ்சி நிற்கப் போகின்றனவா?' என்ற மிரட்டும் கேள்வி எழுந்து நம்மை இருளில் ஆழ்த்துகிறது.

சுதந்தரம் பெற்று 54 ஆண்டுகள் ஓடிவிட்டன. இன்னமும் நம் நாட்டில் கல்வியைப் பரவலாக்கி மக்களின் மூட நம்பிக்கைகளைத் தகர்க்க முடியவில்லை. தங்கள் உரிமைகளுக்காகக் குரல் கொடுக்கும் திறனற்ற மனநோயாளிகள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் திறனற்ற அப்பாவிகள், பிறரது அறியாமையினாலும் அலட்சியத்தினாலும் குரூரமாக வாழ்விழப்பது மாபெரும் அவலம்!

மாண்டவர்களுள் பலர், இறுதிச் சடங்கில் பங்கேற்கக் கூட சுற்றத்தார் இன்றித்தான் கரையேற்றப்பட்டிருக்கிறார்கள்!

மிக நீண்டதொரு அவலப்பட்டியலில் சமீபத்திய அவலமாக இடம்பெற்றிருக்கிறது ஏர்வாடி. நாளை மற்றொரு அதிர்ச்சிதரும் நிகழ்வு ஏற்படுமாயின் மனநோய்க் காப்பகங்கள், மருத்துவமனைகள் குறித்தும் சட்ட-திட்டங்கள் குறித்தும், அவை பற்றிய சமுதாயப் பிரக்ஞை ஏற்படுத்துவது குறித்தும் முற்றிலுமாக மறக்கப்பட்டு, புதிய பிரச்னையின்பக்கம் நாட்டின் கவனம் திசை திரும்பிவிடும்.




கடந்த சில நாட்களாகச் சந்தித்த பிரச்னைகளின் பட்டியலைப் பார்ப்போம்.

ஒரிஸ்ஸாவிலும் பீஹாரிலும் மாபெரும் வெள்ளம் வந்து, நிவாரணப் பணிகள் குறித்து ஏகப்பட்ட புகார்.

முஷாரஃப் வருகை பிசுபிசுத்துப்போய் எதிர்க்கட்சிகளின் கண்டனப் பாய்ச்சல்.

இது நடந்த கையோடு குஜராத்தில் மசூதி ஒன்று தரைமட்டமாக்கப்பட்டு, அதனிடத்தில் கோயில் கட்டப்பட்டது.

இதற்குப் பதிலடிபோல் தோடாவில் முஸ்லிம் தீவிரவாதிகள் அப்பாவி மக்களைக் கொன்று குவித்தார்கள்.

போதும் போதாததற்குப் பங்குமார்க்கெட் ஊழலும் யூ.டி.ஐ. நிறுவன மெகா ஊழலும் நாடாளுமன்றத்தை உலுக்குகின்றன!

கடைசிச் செய்தியாக, கன்யாஸ்த்ரீ ஒருவர், கயவர்களால் முகத்துக்கு நேராகத் துப்பாக்கியால் சுடப்பட்டிருக்கிறார்!

இப்படி ஒவ்வொரு கோரம் நிகழும்போதும் அரசு தலையிட்டு ஒரு விசாரணை கமிஷனை நிறுவி, சிறிது காலத்துக்கு ஊர் வாயை அடைப்பதோடு சரி... அந்தக் குறிப்பிட்டப் பிரச்னை தீர விசாரிக்கப்பட்டதா? அறிக்கையிலுள்ள விஷயங்கள் ஆராயப்பட்டனவா? சீர்திருத்தங்கள் ஏற்கப்பட்டனவா? நடைமுறைப்படுத்தப்பட்டனவா? என்று கவனித்து, நாட்டை முன்னேற்றத்தின் அடுத்த கட்டத்துக்கு எடுத்துச் செல்ல மத்திய-மாநில அரசுகள் தவறிவிடுகின்றன.

இதற்கு என்ன காரணம் என்பது ஆராய்ச்சிக்குரியது.

ஆட்சிப் பொறுப்பென்பது முழுக்க முழுக்க அரசியல் [illegible]ாகசமாக மாறிவிட்டது. நிறைய செலவழித்து ஆட்சியைப் பிடிப்பதும் பதவியிலிரு[illegible]ாதே அதை ஈடு செய்து 'சம்பாதிக்கும்' முயற்சிகள் மேற்கொள்வதும் ஒருபுறம். [illegible]ாரு புறம், எதிர்க்கட்சிகளின் கவிழ்ப்பு முயற்சிகளையும் நிர்வாகம் நடைபெறவிடாமல் ஆகவ செய்யும் இடையூறுகளையும் எதிர்கொண்டு சமாளிக்க வேண்டும்.




ஆக, ஆட்சியில் இருக்கும் காலம், ஆட்சியைத் தக்கவைத்துக் கொள்வதற்கே பெரும்பாலும் செலவிடப்படுகிறது. அதுபோக, எஞ்சிய நேரத்தில் எதிர்பாராத பிரச்னைகளைச் சந்தித்துத் தீர்வு காண வேண்டி வருகிறது. அதற்குப் பிறகுதான் தினசரி நிர்வாகத்தின் பக்கம் கவனம் திரும்புகிறது... போதுமான கவனம் பெறாததால் தினசரி நிர்வாகமே சீர்குலைந்து மேலும் பல சிக்கல்களுக்கு அடிகோலுகிறது.

ஆட்சிப் பொறுப்பில் இருப்போர் இந்த விஷ வட்டத்தைத் தொடர அனுமதித்தால் இந்தியாவின் எதிர்காலம் சர்வநிச்சயமாகக் காரிருளில்தான் மூழ்கும்.

ஆட்சியை ஸ்திரப்படுத்திக் கொள்ள கூட்டணி கட்சிகளின் பங்கேற்புடன் எதிர்க் கட்சிகளின் ஒத்துழைப்பையும் கேட்டுப் பெறுவதுதான் அறிவுடைமை.

அதேபோல், அண்டை நாடுகளுடன் நல்லுறவும் மிக முக்கியம். பாகிஸ்தானுடன் பேச்சுவார்த்தை முறிந்ததற்கு அந்நாட்டின் தீவிரவாத ஊக்குவிப்பே காரணம் என்று நாம் முழங்கலாம். ஆனால், அந்த வெற்று முழக்கத்தினால் காஷ்மீர், பாக் எல்லைப் பகுதிகளில் வாழும் அப்பாவி இந்தியர்களைத் தீவிரவாதிகளிடமிருந்து காப்பாற்ற முடியுமா! ஏவுகணைகளும் அணு குண்டுகளும் தயாரித்து ஆயுத பலத்தைப் பெருக்கிக் கொண்டாலும் காஷ்மீர் மக்களுக்கு நமது அரசால் பாதுகாப்புத் தர முடியவில்லையே! பாகிஸ்தானின் இணக்கமின்றி அதைத் தர இயலாதே!

பிரச்னைகளில்லாத நிர்வாகம் கிடையாது. அதிலும் இந்தியா போன்ற விரிந்த, பரந்த, பல கலாசாரங்களையும் மதங்களையும் உள்ளடக்கிய தேசத்தின் நிர்வாகம் சாமானியமானதல்ல. அதனாலேயே ஆட்சிப் பொறுப்புக்கு வருவோர் மீண்டும் தேர்தல் வரும்வரை அரசியலை மறந்துவிட்டு நிர்வாகத்தில் முழுக்கவனம் செலுத்த வேண்டும். எதிர்க் கட்சியினரும் மக்கள் அளித்துள்ள தீர்ப்பை ஏற்று, ஆளும் கட்சிக்கு ஆக்கபூர்வமாக உதவவேண்டும். அதைவிட்டுவிட்டு கவிழ்ப்புச் சதிகளுக்கும் காலை வாரும் திட்டங்களுக்கும் மட்டுமே காலத்தைச் செலவிட்டால் தோடா மரணங்களும் ஏர்வாடி சோகங்களும் தொடர்கதைகளாகிவிடும்! ○

# ஏர்வாடி கொடூரம்!

துக்க விடியலுக்குக் கொள்ளி வைத்துக்கொண்ட அதிகாலை 5.00 மணி.

இன்னும் சிறிது நேரத்தில் எரியும் தீயில் கருகப் போகிறோம் என்ற அடிப்படை உணர்வுகள் கூட மழுங்கிப் போன மன நோயாளிகள் அவர்கள். ஓடித் தப்பிவிடுவார்கள் என்பதற்காக காலில் போடப்பட்ட சங்கிலிப் பிணைப்பு, 26 அப்பாவி



• முகைதீன் பாட்சா

உயிர்களை ஒட்டிக் கொண்டு போய்விட்டது. உணவுத் தேவைகள், உடை தேவைகள் உணராத அந்த மனநோயாளிகள், உயிர்த் தேவை என்பதையும் மறந்து மரித்துப் போயிருந்தார்கள் கரிக் கட்டைகளாக...

இராமநாதபுரத்திலிருந்து கிழக்கே 20 கி.மீ தொலைவில் உள்ள கடற்கரை ஊர் ஏர்வாடி. அங்குள்ள புகழ் பெற்ற தர்காவில், மனநோயாளிகள் தங்கி பிரார்த்தனை செய்தால், மன நோய் அகன்றுவிடும் என்ற கடந்த கால மரபுகள் – நம்பிக்கைகள் இன்னும் வறண்டு போகாமல் இருக்கின்றன.

மக்களின் அந்த நம்பிக்கையையே மூலதனமாக்கிக் கொண்டு சேவை மனப்பான்மை இல்லாத, வியாபாரத் தன்மை கொண்ட, தனியார் மனநலக் காப்பகங்கள் பெருகிவிட்டன.

இப்படி முறையான அனுமதி பெறாத மனநலக் காப்பகங்களுள் ஒன்று, தீக்கிரையான பாதுஷா மன நலக் காப்பகம்.

"எனக்கு திருநெல்வேலிதான் சொந்த ஊர். சில வருஷங்களுக்கு முன்னால், என் மனைவிக்கு மனநோய் இருந்தது. அதற்காக இங்கு வந்தேன். அதற்குப் பிறகு சொந்த ஊருக்குத் திரும்பாமல் இங்கேயே தங்கி பல மனநலக் காப்பகங்களில் வாட்சமேன் வேலை பார்த்தேன். அதற்குப் பிறகு சில ஆண்டுகளாக நானே இந்தக் காப்பகத்தைத் தொடங்கினேன்'' என்று சொல்லும் மனநலக் காப்பக உரிமையாளரான முகைதீன் பாட்சா, தற்போது கைது செய்யப்பட்டுள்ளார்.

தீ பற்றி எரியும்போது மனநல நோயுடையவர்கள் எதையும் கண்டு கொள்ளவில்லை. ஆனால் மனநல நோயிலிருந்து விடுபட்டவர்களின் கூக்குரல்தான் தீ விபத்தை உணர்த்தியுள்ளது என்கின்றனர் பொது மக்கள்.

"திங்கள்கிழமை அதிகாலை தீ பரவி எரிந்தபோது நான் அருகில் மனையில் படுத்திருந்தேன். சப்தம் கேட்டு எழுந்தபோது தீ பரவி, முற்றிலுமாக எரிந்து போனதால் கொட்டகைக்குள் சென்று யாரையும் காப்பாற்ற முடியவில்லை'' என்கிறார் முகைதீன் பாட்சா.

ஆனால் இவர் குடி போதையில் இருந்ததால் இவரால் உடனடியாகச் செயல்பட முடியாததாகப் பேசிக்கொள்கின்றனர். இரவு நேரங்களில் மன நோயாளிகள் பாலியல் பலாத்காரத்திற்கு உட்படுத்தப்படுவதாகவும், அப்படி வந்தவர்களால் அணைக்காமல் வீசியெறியப்பட்ட பீடி அல்லது சிகரெட் துண்டுகளால் தீ விபத்து ஏற்பட்டிருக்கலாம் என்றும் காப்பகங்களுக்கிடையிலான தொழில் போட்டியாகக் கூட இருக்கலாம் என்றும் பல்வேறு காரணங்கள் பேசிக்கொள்கிறார்கள்.

இதைவிட கொடுமை என்னவென்றால் மன நோயாளிகள் ஒழிந்தால் சரி என்று போலியான முகவரியை உறவினர்கள் கொடுத்ததுதான். அரசு பணம் கொடுக்கிறது என்ற நிலையில் இப்போது ஒரிஜினல் முகவரியுடன் வந்து காத்து நிற்கிறார்கள் இறந்துபோன மனநோயாளிகளின் உறவினர்கள். அதிலும் ஒரே மனநோயாளிக்கு மூன்று நான்கு பேர் சொந்தம் கொண்டாடுகிறார்கள் என்பதால் குழப்பத்தில் இருக்கிறது போலீஸ்!

— கி. சிங்காரவடிவேல்





# வளர்ப்புப் பிள்ளைக்குப் பரிசு!

"என்னுடைய வளர்ப்புப் பிள்ளைக்குப் பரிசு கிடைத்திருக்கிறது. சொந்தக் குழந்தைக்கு இன்னும் பரிசு கிடைக்கவில்லை. மொழி பெயர்ப்புக்குத்தான் கிடைத்திருக்கிறது. இலக்கியவாதிகளுக்கு, அவர்களது படைப்பு இலக்கியத்திற்குப் பரிசு கிடைத்தால்தான் மகிழ்ச்சி ஏற்படும். அது கிடைக்கவில்லையே என்ற வருத்தம் எனக்கு உண்டு.

"நான் எழுதிய நூல்கள், சென்ற ஆண்டு தவிர, கடந்த சில ஆண்டுகளாகக் கடைசித் தேர்வு பட்டியல் வரைக்கும் வந்திருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட ஆண்டு மிகவும் சிரமப்பட்டு என்னுடைய நூலை நீக்கினார்கள். அதனால் படைப்பிலக்கியத்திற்கு சாகித்திய அகாதெமி விருது தொலைவில் இல்லை."

- நம்பிக்கையுடன் நம்மிடம் பகிர்ந்து கொண்டார், 2000ஆம் ஆண்டிற்கான சாகித்ய அகாதெமி மொழி பெயர்ப்பு விருது பெற்ற கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம்.

**கோ**வை பாரதியார் பல்கலைக் கழக முன்னாள் தமிழ்த்துறை தலைவரும், வானம்பாடி. கவிதை இயக்கக் கர்த்தாக்களில் ஒருவருமான சிற்பி, இதுவரை பதினொரு கவிதைத் தொகுப்புகள் உள்பட நாற்பது நூல்களை எழுதியுள்ளார். நான்கு மலையாள நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

மறைந்த மலையாள பெண் எழுத்தாளரான லலிதாம்பிகா அந்தர் ஜனம் எழுதிய ஒரே நாவல் 'அக்னி சாட்சி' ஏற்கெனவே மலையாள மொழிக்கான சாகித்ய அகாதெமி விருது வாங்கியுள்ள இந்த நூலை தமிழில் 'அக்னி சாட்சி' என்ற பெயரிலேயே மொழி பெயர்த்துள்ளார். நம்பூதிரி குடும்பத்துப் பெண்களின் பிரச்னைகள் பற்றிய உணர்ச்சிகரமான நாவல் அது.

அந்தக் குடும்பத்துப் பெண் மிகவும் போராடி சமூகப் பணிகளில் ஈடுபடுகிறாள். பிறகு தேச விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு, இறுதியில் துறவியாகிவிடுகிறாள். இதை மிக நேர்த்தியான நடையில் சொல்லியிருக்கும் நாவலாசிரியை லலிதாம்பிகா அந்தர்ஜனம், மலையாள எழுத்தாளர் மோகனனின் தாயார்.

**பொ**ள்ளாச்சியில் 'கவிஞர் சிற்பி அறக்கட்டளை'யை நிறுவி, வாழும் கவிஞர்களுக்கு 'சிற்பி விருது' வழங்கும் 65 வயது கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியத்துக்கு 'சிற்பி' என்பது புனை பெயர்.

"திருமணம் ஆன காலத்திலிருந்தே குடும்பப் பொறுப்பு முழுமையும் நானே பார்த்துக் கொள்வதால் அவங்களுக்குக் கவிதை எழுதுவதுதான் வேலை. வேற வேலை இல்லை. கவிதை சிறப்புப் பெறும்போது என்னிடம் படித்துக் காட்டுவாங்க. பரிசு வாங்குகிறபோது விழாவுக்கு அழைத்துக் கொண்டுப் போவாங்க" என்கிறார் திருமதி ரெங்கநாயகி பாலசுப்பிரமணியம்.

**- சி. சிங்காரவடிவேல்**

கல்கி 19.8.2001

# நடுத்தர வருவாய் உள்ள அன்பர்களுக்கும் இல்லத்தரசிகளுக்கும் ஓர் அரிய வரப்பிரசாதம்

**SWETHA walker**

HEALTH FITNESS MACHINE

இந்த நவீன கம்ப்யூட்டர் காலத்தில் உடற்பயிற்சி செய்வதற்கு சிறிதும் நேரம் கிடைப்பதில்லை. அலுவலகம் செல்லும் சகோதர, சகோதரிகள் தினமும் 8 மணி நேரமும் நாற்காலியில் உட்கார்ந்து வேலை செய்வதால் உடல் தசைகளுக்கு வேலை இல்லாமல் எடை கூடவோ, பருமனாகவோ வாய்ப்புகள் அதிகம். நிறைய பேருக்கு காலையில் walking போக நேரம் கிடைப்பதில்லை. அப்படியே நேரம் கிடைத்தாலும் சென்னை போன்ற பெரு நகரங்களில் எந்தவித இடையூறும் இல்லாமல் நடந்து போகக் கூட சாலைகளில் இடமில்லை. எனவே இதை நாங்கள் மனதில் கொண்டு உங்களுடைய வீட்டில், தோட்டத்தில், முக்கியமாக அடுக்கு மாடி குடியிருப்புகளில், மாடியில் எங்கு வேண்டுமானாலும் ரிலாக்ஸ்டாக எந்த தொந்தரவும் இல்லாமல் ஹாயாக நடப்பதற்கு ஒரு புதிய இயந்திரத்தைச் சாதாரண நடுத்தர மக்கள் வாங்கும் விலையில் உருவாக்கியுள்ளோம். இதில் காலை (அ) மாலை சுமார் 10 நிமிடம் பயிற்சி செய்தால் சுமார் 3 கிலோ மீட்டர் தூரம் நடந்த பலன் கிடைக்கும். தினம் தொடர்ந்து செய்து வந்தால் உடல் எடை நிச்சயம் குறையும். இதை உபயோகிப்பது மிகவும் சுலபம். பயிற்சி முடிந்த பின் இயந்திரத்தை மடித்து வீட்டில் எங்கும் வைத்துக் கொள்ளலாம். இந்த இயந்திரத்தை நாங்கள் தயாரிப்பு விலைக்கே கொடுப்பதோடு ஒரு வருடம் உத்தரவாதம் தருகிறோம்.





நடுத்தர மக்களின் வசதிக்கேற்ப இந்த
இயந்திரம் ரூ. **1900 (Economy model)**
மற்றும் ரூ **2700/-** ஆகிய விலைகளில்
கிடைக்கும். (வரிகள் உட்பட).
சென்னை நகருக்குள் இலவச டெலிவரி.
தொடர்பு கொள்ள தொலைபேசி 4847701
(காலை 9 மணி முதல் மாலை 6 மணி வரை)

**CONTACT**

## ASIAN ENTERPRISES

**Mfrs of: Health Fitness Machine &**
**Office Filing Systems**
**# 25 (Old, #16), Perumal Koil South 1st Cross Lane,**
**Vadapalani, Chennai - 600 026. Ph: 484 7701**

## பேருந்து வாசகம்

சென்னையிலிருந்து திருவண்ணாமலை செல்லும் அரசு பேருந்து ஒன்றின் முகப்புக் கண்ணாடியில் பயணிக்கும் ஊர்களைக் குறிப்பிட்டு ருசிகரமாக இவ்வாறு எழுதி யிருந்தார்கள்.

'எழில்மிகு சென்னை - அருள்மிகு திருவண்ணாமலை'

- வே. தெய்வேந்திரன், தூத்துக்குடி




அழகுக்கலை என்பது மனிதர்களுக்கு மட்டுமல்ல. செல்லப்

# சென்னை



பிராணிகளுக்கும் உண்டு. இந்த அழகுக் கலைப் பயிற்சியில் தேர்ச்சி பெற்றவர்கள் என்ன சம்பாத்தியம் எதிர்பார்க்கலாம் (வெளிநாடுகளில்தான்)?

ஒரு நாய்க்கு ஹேர்கட் செய்து, நகம் வெட்டி, குளிப்பாட்டிக் கொடுத்தால் $23, அதாவது சுமார் ஆயிரம் ரூபாய்!

- கலா, சென்னை

## நடையழகர்

பீஹாரிலிருந்து நடந்து சென்றே பல மாநிலங்களைக் கடந்து தமிழகம் வழியாகக் கேரளாவுக்குள் வெற்றி நடை போடும் 53 வயது சுரேஷ்சிங், மக்கள் தரும் எந்த உணவையும் சாப்பிடுகிறார். நடைபாதை யோரங்களில் படுக்கிறார். ஒரு செட் உடை, ஜோல்னா பை இவரது உடமை. பீகாரிலுள்ள பாகஸ்புரா கிராமத்துப் படிப்பாளி. டாடா கம்பெனியில் செய்து வந்த பணியை உதறி விட்டு, மனைவி, மகள், பேரக் குழந்தைகளிடம் விடை பெற்று, சமுக விழிப்புணர்வுப் பிரசாரத்தைச் செய்தபடி இதுவரை 4000 கி.மீ. நடந்து விட்டார்.

- கல். முத்துமாரியம்மாள், மதுரை -9

## சாதனை சபாநாயகர்!

நம் நாட்டிலேயே மிக அதிக காலம் சட்டசபை சபாநாயகராகப் பதவி வகித்து சாதனை புரிந்து வருகிறார் மேற்கு வங்க சட்டசபை சபாநாயகர் ஹாசிம் அப்துல் ஹாலிம். 66 வயதாகும் இவர், 1982லிருந்து தொடர்ந்து சபாநாயகராக இருந்து வருகிறார். 1977ல் ஜோதிபாசு அமைச்சரவையில் நீதித்துறை அமைச்சராக இருந்தவர் இவர். 2006ம் ஆண்டு வரை இவருக்குப் பதவிக்காலம் உள்ளது. இதைப் பூர்த்தி செய்துவிட்டாரானால் 24 ஆண்டுகள் தொடர்ந்து சபாநாயகராகப் பணி புரிந்த சாதனையை இவர் செய்து விடுவார்.

- ஆர். மார்க்கண்டன், சென்னை - 78




### பதிவுகள் மறைவதில்லை!

**இ**சிஜி எடுத்தவுடன் அதற்கு ஒரு ஜெராக்ஸ் நகல் எடுத்து வைத்துக் கொள் ளுங்கள்.

கம்ப்யூட்டர் இசிஜியில் பதிவுகள் கொஞ்ச நாட்களுக்குள் மங்கலாகி மறைந்து விடும்.

ஆனால் ஜெராக்ஸ் நகலில் உள்ள பதிவுகள் மறைவதில்லை.

- கஸ்தூரி, திருவாரூர்

**ஹி**ட்லரின் நான்கு அந்தரங்கப் பெண் செயலாளர்களில் முதன்மையானவர் ஜோகன்னா உல்ஃப். ஹிட்லரின் கதை முடிந்தபிறகு, இரு பதிப்பகத்தார் அவரை நேரில் அணுகி, ஹிட்லரின் இரகசியங்களைத் தங்களிடம் வெளியிட்டால், 2,50,000 இங்கிலிஷ் பவுண்ட் வெகுமதி தருவதாக வாக்களித்தனர். ஆனால் அவள், அந்தரங்கக் காரியதரிசியின் கடமையிலிருந்து தான் என்றும் நழுவ முடியாது என்று மறுத்துவிட்டாள்!

- வேலூர், எல்.கோபாலகிருஷ்ணன்

**ஒ**ரு மரத்தை மதிப்பிடுவது, அதன் இலைகளால் அல்ல, அதன் கனிகளால்தான்.

- லத்தின் பழமொழி

மனிதனுடைய வலிமையை அழிப்பன மூன்று : அச்சம், கவலை, நோய்.

- ஹீப்ரு பழமொழி

நடக்காதவன் கால்களிலே சிலந்தி கூடு கட்டும்.

- எகிப்திய பழமொழி

- பா. குணா, சேத்துப்பட்டு

### எழுத்தில் அழகு!

"**எ**ழிலுடைய அன்னையீர்! என்னரங்கத்தின்னமுதர், குழலழகர், வாயழகர், கண்ணழகர், கொப்பூழில் எழுகமலப் பூவழகர், எம்மனார் என்னுடைய கழல் வளையைத் தாமும் கழல்வளையே ஆக்கினாரே"

- இது நாச்சியார் திருமொழியில் ஆண்டாள் பாசுரம், தமிழில் 'ழ' என்ற எழுத்து தனி அழகுடையது. பிறமொழிகளில் அதைக் காண்பது அரிது. அதை மனத்தில் கொண்டே நாச்சியார் இந்த 'ழ' கரத்தை ஒருமுறைக்கு பத்து முறை இப் பாசுரத்தில் உபயோகித்து அழகு படுத்தினார் போலும்.

- சீதா கார்த்திக், கோவை

**சி**லப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் 'கழஞ்சு' என்று குறிப்பிட்டுள்ளார். திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களில் 'கழஞ்சு' என்ற சொல் இன்றும் வழக்கில் உள்ளது. அங்கு உள்ள பெண்கள் 'எத்தனை கழஞ்சு நகை பெண்ணுக்குப் போடறாங்க?' என்றே கேட்கிறார்கள். இன்று நடைமுறையில் உள்ள கணக்குப்படி 1½ கழஞ்சு என்பது ஒரு பவுன் ஆகும்.

- எடப்பாடி, மீனா சுந்தர்

# காவிரி: கொள்ளிடத்தில் சங்

**கா**விரியின் தென்கரையில் திருச்சி. காவிரி - கொள்ளிடம் ஆகிய இரு நதிகளிடையே ஸ்ரீரங்கம். இதன் பலன், மிகுந்த தண்ணீர் வசதியுடன் எந்நாளும் குடிநீர்ப் பற்றாக்குறையைத் தொட்டு விடாத திருச்சி மாநகராட்சி. நதிக்கரையோர மாநகர நிர்வாகம், நன்றிக் கடனாக இவ்விரு நதிகளிலும் சாக்கடை மற்றும் கழிவுநீர்ப் பெரு வெள்ளத்தைப் பாய விட்டுக் கொண்டிருப்பதுதான் லேட்டஸ்ட் அபாயம்.



• வடக்குவாசல் சாக்கடைக் குளம்

ஸ்ரீரங்கம் கொள்ளிடம் தென்கரை. அழகிய சிங்கர் கோயிலை அடுத்து வரும் சுடுகாட்டுப் பகுதி. கொள்ளிடக் கரையில், சுண்ணாம்புக் களவாய் அருகில். கரையிலிருந்து கொள்ளிடம் ஆற்றின் உள்ளே மூன்றடி அகலம் பத்தடி ஆழத்திற்கு அரளைக்கல் சிமெண்ட் பூச்சு பூசப்பட்ட கழிவு நீர் வாய்க்கால் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. 'L' வடிவில் வளைந்து செல்லும் கழிவு நீர் வாய்க்காலில், ஸ்ரீரங்கம் நகரப் பகுதியின் மொத்த சாக்கடைக் கழிவு நீரும் பயணித்து, கொள்ளிடத்தில் ஓரமாய் ஓடி வரும் தண்ணீருடன் இரண்டறக் கலந்து விடுகின்றது! ஒரு வினோதம் என்னவெனில், இங்கு எதுவுமே வந்து கலக்காததுபோல பொதுமக்கள் இன்னமும் இதனருகில் குளித்துக்கொண்டிருப்பதுதான்.



• மலட்டாறு

**தி**ருச்சி - சென்னை கொள்ளிடம் பேருந்துப் பாலம். அதனடியில் ஓடி வரும் கொள்ளிடம் நீர் ப்ளஸ் சாக்கடைக் கழிவு நீர் வெள்ளத்தில் ஒரு ஐம்பது அறுபது சலவைத் தொழிலாளர்கள் தினசரி துணிகள் துவைத்துக் கொண்டிருக்கிறார்கள். ''முந்தியெல்லாம் கொள்ளிடத்துத் தண்ணியை ரெண்டு கையிலேயும் அள்ளிப் பார்த்தா.... அப்படியே முழுசா ஒரு இளநித் தண்ணியெக் கொட்டிவிட்ட மாதிரி பன்னீர் மாதிரி இருக்கும்ங்க. ஆனா இப்ப பாருங்க, கொள்ளிடத்துல கருந்தண்ணி மாதிரி



• கழிவுநீர் கலக்கிறது

கிறது. பெருகி வரும் குடியிருப்புப் பகுதிகள் வெளியேற்றும் பெருமளவு கழிவு நீரை வெளியேற்றும் வேகத்திறன் மிகக் குறைவு என்பதே தற்போதைய நிலை.

இந்த மூன்று கழிவு நீரேற்று மையங்களிலிருந்து வெளியேற்றப் படும் சாக்கடைக் கழிவு நீர், கொள்ளிடக் கரையின் உள்ளே சிமெண்ட் கால்வாய் வழியாக அப்படியே நேராகக் கொள்ளிட நீரில் விடப்படுகின்றது.

இது தவிர, திருவானைக்காவல் பகுதியில் ஒரு சினிமா தியேட்டருக்குப் பின்புறம் ஒரு பெரிய வாய்க்கால் அளவுக்கு ஓடி வரும் சாக்கடைத் தண்ணீரும் கொள்ளிட நீரில் கலந்து விடுகின்றது.

ஓடி வருது. எங்க ஆட்களுக்கும் பலருக்கு கை, காலெல்லாம் அரிப்பு வந்து புண்ணாப் போயிடுதுங்க!'' என்று சொல்கிறார் வயது முதிர்ந்த சலவைத் தொழிலாளி ஒருவர்.

ஸ்ரீரங்கம் – திருவானைக்காவல் பகுதிகளில் இருந்து வெளியேறும் சாக்கடை நீரை ஒன்று சேர்த்து, மேற்குறிப்பிட்ட சாக்கடை வாய்க்காலில் கொண்டு

# ிக்கும் சாக்கடைகள்!

வந்து இணைப்பதற்காக மூன்று கழிவு நீரேற்று மையங்கள் இருக்கின்றன. ஒரு மையத்திற்கு ஐந்து ஹெச்.பி மோட்டார்கள் மூன்று வீதம் தலா பதினைந்து ஹெச்.பி. திறனில் செயல்பட்டு வந்தன மூன்று மையங்களும். அவைகள் அனைத்தும் பழுதாகிப் போக, தற்சமயம் பன்னிரண்டு ஹெச்.பி. திறனுள்ள மோட்டார் மட்டுமே ஒவ்வொரு மையத்திலும் செயல்பட்டு வரு

ஸ்ரீரங்கம் கோயிலுக்கும் காவிரிக்கும் இடைப் பட்ட பகுதியில் மேற்கிலிருந்து கிழக்கு முகமாக ஓடி வருகின்றது ஒரு ஆறு. முன்னொரு காலத்தில் அதற்குப் பெயர் திருமஞ்சனக் காவிரி. இப்பொழுது அது முற்றிலும் வழக்கொழிந்து போய் மலட்டாறு எனும் மாறுபெயர் கொண்டு ஓடி வருகின்றது. அது திருமஞ்சனக் காவிரியாய் ஓடி வந்தபோது அத்தனை சுத்தம். ஸ்ரீரெங்க நாதருக்கு பொற்குடம் சுமந்து யானை எடுத்துச் செல்லும் நீர் இந்தத் திருமஞ்சனக் காவிரி நீர்தான். இந்த ஆறு, காலப் போக்கில்



• கருத்தையா பாண்டியன்

நாளடைவில் தன் மீது கழிவு நீரையும் சுமந்து செல்ல நேர்ந்தபோது அரங்கனுக்குத் தண்ணீர் கொண்டு போனது நின்று போய், காவிரியிலிருந்து கொண்டு வருவது என நடைமுறைப்படுத்தப்பட்டு விட்டது. அதன் பின்னர் இந்த ஆற்றுக்குப் புனையப் பட்டப் பெயரே மலட்டாறு என்பதாக இருக்கலாம் என்பது சிலரது கருத்து.

திருச்சி நகரின் கிழக்குப் பகுதிகளில் இருந்து ஓடி வரும் சாக்கடை கழிவு நீர், ஓயாமாரி சுடுகாட்டுப் பகுதியை அடுத்துள்ள பைபாஸ் பாலத்துக்கு அருகில் காவிரி நதியில் நேரடியாக வந்து கலக்கின்றது.

மேலச் சிந்தாமணி பகுதியில் உள்ள பாப்பம்மாள் அன்னசத்திரத்திற்குப் பின்புறம் பெரிய வாய்க்கால் வடிவத்தில் நொங்கும் நுரையுமாக அடித்துக் கொண்டு ஓடி வரும் சாக்கடைக் கழிவு நீர், காவிரியாற்றில் நேரிடையாகக் கலக்கின்றது. மேற்குறிப்பிட்ட இரண்டு இடங்களிலும் பொது மக்கள் பயன்படுத்தும் படித்துறைகள் அருகருகே உள்ளன. இவை அனைத்தும் ஆண்களும், பெண்களுமாய்க் குளிக்க, துணிகள் துவைக்க என மிகவும் அவசியமான பயன்பாடுகள் உள்ள இடங்கள் ஆகும்.

அவர்கள் உபயோகத்துக்கு ஏற்ற வேறு படித்துறைகளோ வசதிகளோ இல்லை என்பதுதான் உண்மை.

இதில் ஒரே ஒரு ஆறுதல். குறிப்பிட்ட (மேலச்சிந்தாமணி) இந்தப் படித்துறை அருகில் கழிவு நீரேற்று மையம் ஒன்று புதிதாக ஏற்படுத்த வேலைகள் துவங்கப்பட்டுள்ளதுதான். பணிகள் நிறைவு பெறும்வரை கழிவு நீர் இந்த வாய்க்கால் வழியாக காவிரியில் நேரடியாகக் கலந்து கொண்டேயிருப்பதும் தடுக்க இயலாததாக இருக்கிறது.

உறையூர்ப் பகுதிவாழ் நெசவாளர்கள் பயன்படுத்தி வெளியேற்றும் சாய நீர்க்கழிவு அப்படியே வந்து குட

• சாக்கடை நீர் + கொள்ளிடம் தண்ணீர்



முருட்டி வாய்க்காலில் கலக்கின்றது.

குடமுருட்டி வாய்க்கால், கோணக்கரைப் பகுதியில் நாம் நேரில் பார்த்த ஒரு கழிவு நீரேற்று மையம் சிறப்பாகச் செயல்பட்டு வருகின்றது. இதுபோல் இதர கழிவு நீரேற்று மையங்களைப் புதுப்பித்து, நவீனப்படுத்தி, செயல் திறனை அதிகரிக்கச் செய்வது நல்லது. மற்ற கழிவு நீரேற்று மையங்கள் பழுது பட்டும், செயல்திறன் குறைவாகவும் உள்ளது குறிப்பிடத் தக்கது.

திருச்சிராப்பள்ளி மாநகராட்சி ஆணையர் கருத்தையா பாண்டியன் அவர்களைச் சந்தித்தோம். "நீங்கள் குறிப்பிடும் நான்கைந்து இடங்களில் காவிரி - கொள்ளிடத்தில் சாக்கடை நீர் கலப்பது உண்மை தான். திருச்சி நகரில் பாதாளச் சாக்கடைத் திட்டத்தில் இணைக்கப்பட்டுள்ள பகுதிகளில் இருந்து வெளியேறும் கழிவு நீர், ஆங்காங்கு உள்ள கழிவு நீரேற்று மையங்கள் மூலமாக ஒத்தக்கடை கழிவு நீரேற்று மையத்திற்குக் கொண்டு வரப்பட்டு அங்கிருந்து பஞ்சப்பூர் ஏரிக்கு கொண்டு செல்லப்படுகிறது. திருச்சி நகரில் சில பகுதிகளும், ஸ்ரீரங்கம் நகரின் முழுமையான பகுதிகளும் பாதாளச் சாக்கடைத் திட்டத்தின் கீழ் இணைக்கப்பட்டு, வெளியேறும் கழிவு நீரை அரியமங்கலம் பகுதிக்குக் கொண்டு செல்லும் திட்டம் ஒன்றும் உள்ளது. அது நிறைவேறினால்தான் இக்குறை நீங்கும்.

இதற்கு தேசிய நதி நீர்ப் பாதுகாப்பு



• மேலச் சிந்தாமணி காவிரியில் கலக்கும் கழிவு நீர்

செயல்திட்டத்தின் கீழ் ஒரு ப்ராஜக்ட் மாநகராட்சி வசம் உள்ளது. மத்திய, மாநில அரசுகளின் உதவியுடன் கூடிய சுமார் நூற்றியிருபது கோடி ரூபாய் செயல்திட்டம் 2004க்குள் நிறைவு பெற்றுவிடும். அப்பொழுது இந்தச் சூழ்நிலை இருக்காது. திருச்சி-ஸ்ரீரங்கம் பகுதிகளிலிருந்து கொள்ளிடம்-காவிரி நதிகளில் கலந்து கொண்டிருக்கும் சாக்கடை மற்றும் கழிவுநீர் அப்பொழுது முற்றிலும் தடுக்கப்பட்டு விடும்!" என்று நம்பிக்கை தெரிவித்தார். இன்னும் மூன்றாண்டுகளுக்கு மூக்கைப் பிடித்துக் கொண்டு காத்திருக்க வேண்டியதுதான்!

கட்டுரை, படங்கள்:

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



"அவர் ஆபீஸைக் கோயிலா மதிக்கறவர்!"

"அதுக்காக டேபிள் முன்னாடி இவ்வளவு பெரிய உண்டியல் தேவை யாக்கும்?"

— புளியரை கணேசன்

## அருணா சரண்யா



முன்னறிவிப்பின்றி முத்துலட்சுமி தன் வீட்டுக்கு வருவாளென்று சிவப்ரியா சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

'வா, வா' என்று உள்ளன்போடு வரவேற்றாள்.

"இருக்கட்டும் ப்ரியா. எனக்கு ஒரு பதில் தெரியணும். அதுதான் வந்தேன்."

சிவப்ரியாவின் மனத்தில் சிறு குறுகுறுப்பு ஓடியது. அன்று காலை நாளிதழின் கிசுகிசு இவளைப் பாதித்திருக்குமோ? கணவனையும் தோழியையும் தொடர்புப்படுத்தி வந்த வதந்தி, ஓரளவாவது இவள் மனத்தில் சலனத்தை ஏற்படுத்தியிருக்குமோ?

தானே விளக்கமளித்து விடலாமென முடிவெடுத்தாள். "நான் கிளினிக் போயிட்டிருந்தப்போ உன் ஹஸ்பெண்ட் டென்னிஸ் பயிற்சிக்கு, காரிலே வந்துக்கிட்டிருந்தாரு.."

"அதையெல்லாம் யாரு உன்னைக் கேட்டாங்க? விட்டுத் தள்ளுவியா" என்றாள். "எனக்கு ஸ்ரீகுமார்கிட்ட முழு நம்பிக்கை உண்டுன்னு சொல்ல மாட்டேன். ஆனா உன்னைப் பத்தி எனக்குத் தெரியும்."

"தாங்க்யூ முத்து" என்றாள்.

அவள் குரல் உடைந்து ஒலித்தது. காலையிலிருந்து அவளைத் துளைக்கும் பார்வைகளிலிருந்து தப்ப முடியவில்லை. சக ஊழியர்களிலிருந்து தெருவில் செல்பவர்கள் வரை கேலி அல்லது பரிதாபப் பார்வையை வீசுகிறார்கள். அறிந்தவர்களில் கூடப் பலரும் 'எந்தப் புற்றில்' பழமொழியைக் கண்களில் தேக்குகிறார்கள்!

"இதுக்கெதுக்கு தாங்க்ஸ் ப்ரியா? சின்ன வயசு சிநேகமாச்சே. உன்னை எனக்குத்



தெரியாதா? நான் இப்ப வந்தது கூட உன்னை இன்னும் தெரிஞ்சுக்கத்தான்."

"கொஞ்சம் காப்பி குடிச்ச பிறகு தெரிஞ்சுக் கலாமா? அல்லது அவசரமாத் தெரிஞ்சுக் கணுமா?'' என்றாள் சிவப்ரியா புன்னகையுடன்.

"அவசரமாத்தான்" என்றாள் முத்து அசராமல். பிறகு சட்டென்று, "நீ எதுக்காக சினிமாவில் நடிச்சேன்னு நான் தெரிஞ்சுக் கலாமா?" என்றாள்.

முகத்தைத் திருப்பிக் கொண்டாள் சிவப்ரியா. "என்ன அவசரமாக இருந்தாலும் காப்பி குடிச்சுதானாகணும்" என்றபடி சமையலறைக்குள் சென்று ஹீட்டரை ஆன் செய்தாள்.

நெருங்கியவர்களிடம் பொய் சொல்வது என்பது அவள் வெறுக்கும் காரியம். ஆனால், 'ஏன் நடிக்க ஒப்புக் கொண்டாய்?' என்ற கேள்விக்கு மாறி மாறிப் பொய் கூற வேண்டியிருக்கிறது.

சமையலறைக்குள் தானும் நுழைந்தாள் முத்துலட்சுமி.

"ஸ்கூல் நாடகங்களிலே நடிப்பதைக் கூட நிறுத்திக்கிட்டவ நீ. 'படிப்பு ஒண்ணுதான் குறி. டாக்டராவதுதான் லட்சியம்'னு தெளிவாக இருந்தவ. எதுக்கு நடிக்க ஒத்துக்கிட்டே? சொன்னா உன் மனப் பாரம் குறையும்னா சொல்லு."

"ஏதாவது இருந்தா சொல்ல மாட்டேனா முத்து. குறிப்பிட்ட காரணம் ஏதோ

இருக்கணும்னு நீ ஏன் எதிர்பார்க்கிறே? நான் என்ன நடிச்சுக்கிட்டேவா இருக்கேன்? என் லட்சியப்படி இப்ப டாக்டராகத்தானே ஆகியிருக்கேன்?"

ஜன்னல் வழியே வெளியே பார்த்தாள் முத்துலட்சுமி. இரு நிமிடங்களுக்குப் பிறகு பார்வையை சிவப்ரியா மீது பதித்தாள். அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு, "எவ்வளவு மனப்பாரத்தைத்தான் சுமந்துக்கிட்டிருப்பே ப்ரியா. டைரக்டர் மணிசங்கர் என்கிட்டே சொல்லிட்டார்."

சிவப்ரியா வெளிறிப் போனாள். "முத்து, நீ என்ன சொல்றே?" வார்த்தைகள் திணறலாக வெளியேறின.

"மணிசங்கர் மாரடைப்புக்காக மருத்துவமனையிலே அட்மிட் ஆனப்போ, நானும் என் புருஷனும் அங்க போனோம். அப்போதான் அவர் நடந்ததைச் சொன்னார். உனக்குத் தவறு செய்துட்டோம்ங்கிற குற்ற உணர்ச்சி நிறைய இருந்தது அவருக்கு. 'நேரடியாகவே சிவப்ரியாகிட்டே சாரி கேக்கணும். ஆனா அதுக்குள்ளே எனக்கு ஏதாவது ஆயிடுமோன்னு பயமா இருக்கு. நீயும் அவளும் நெருங்கின ஃப்ரெண்ட்ஸுன்னு கேள்விப்பட்டேன். அதுதான் நடந்ததைச் சொல்லிடலாமேன்னு பட்டுச்சு'ன்னு சொன்னாரு ப்ரியா."

இரு கைகளாலும் தலையைப் பற்றியபடி நாற்காலியில் சென்று அமர்ந்தாள் சிவப்ரியா. யாருக்கும் கூறமாட்டேன் என்ற விஷயத்தை ஏன் அவர் இவளிடம் கூறினார்! இறக்கும் போது பாவமன்னிப்பா? வேறொரு சந்தேகமும் எழுந்தது.

"முத்து, இந்த விஷயமெல்லாம் ஸ்ரீகுமாருக்கும் தெரியுமா?"

"தெரியாது. அவரை வெளியே அனுப்பின பிறகுதான் என்கிட்ட சொன்னார். ரொம்பப் பாவமாக இருந்துச்சு அப்போ அந்த மனுஷனைப் பார்க்க."

"இல்ல முத்து. இதில் அவரு தப்பு எதுவுமில்ல. அவரு என்ன துப்பாக்கி முனையிலயா என்னை நடிக்க வச்சாரு? நானா தானே நடிக்க ஒத்துக்கிட்டேன்."

"துப்பாக்கி முனையை விட பலமான ஆயுதத்தைப் பயன்படுத்தியிருக்காரே அந்த மனுஷன். ஆனாலும் கூட நீ..."

தலையை உதறிக் கொண்டாள் சிவப்ரியா. "முத்து, அதையெல்லாம் நான் பேச விரும்பலே. ப்ளீஸ் விட்ரு. தயவுசெய்து இதை வேறே யாரிடமும் சொல்லாதே."

"சரி, நான் அப்ப கிளம்பறேன் ப்ரியா."

'காப்பி குடிச்சுட்டுப் போகலாம்' என்று கூடக் கூறாது இயந்திரமாகத் தலையசைத்தாள் சிவப்ரியா.

முத்துலட்சுமி எட்டி நடைபோட்டாள். வாசலில் தங்கள் காரைப் பார்த்துவிட்டு எந்த நிருபராவது 'நடிகை சிவப்ரியா வீட்டுக்கு ஸ்ரீகுமார் வருகை' என்று தொடங்கி,

"லஞ்சத்தைப் பற்றி ஒரு கதை எழுதியிருக்கேன்; என்ன டைட்டில் வைக்கலாம்?"

" 'கவர்ஸ்டோரி'னு வச்சிடுங்களேன்!"

– சீர்காழி ரேவதி





"ஒரு வாரமா கராத்தே க்ளாஸுக்கு ஏன் வரலே?"

"தொண்டை கட்டியிருந்தது!"

"அதுக்கும் கராத்தேக்கும் என்ன சம்பந்தம்?"

"ஆ...ஊ...ன்னு சத்தமா கத்த முடியலையே!"

– மேல்மங்கலம் பத்ரா

''அந்த நடிகர் சுமாரா எத்தனை படத்துலே நடிச்சிருக்காரு?''

''எல்லாப் படத்திலும் சுமாராத்தான் நடிச்சிருக்காரு!''

– தஞ்சை தாமு





"நடிகர் நடிகைகளோட ஜாதகத்தை எல்லாம் வாங்கி அவங்க ஆயுள் ஸ்தானத்தைப் பாக்கறீங்களே ஏன்?"

"நான் எடுக்கப் போறது கொஞ்சம் பெரிய மெகா சீரியல்!"

- அம்பை தேவா

தனது மனச்சாக்கடையைக் கொட்டிவிடக் கூடாதே என்ற பதற்றமும் அந்த நடையில் தெரிந்தது.

கிளினிக்குக்குச் சென்றவுடன் 'சீஃப் எங்கே?' என்று லோவிடாவைக் கேட்டாள். 'அவர் ரூமில் ரெஸ்ட் எடுத்துக்கிட்டிருக்கார்' என்று பதில் வந்தது. இதுதான் தக்க வாய்ப்பு எனத் தீர்மானித்தாள் சிவப்ரியா. உள்ளே நுழைந்தாள்.

"நீங்க அன்னிக்கு செய்தது ரொம்பத் தப்பு டாக்டர்" என்றாள் நேரடித் தாக்குதலாக.

எது என்பது போல் குழப்பத்துடன் புருவங்களை மேலுயர்த்தினார் ராம்ஷேகர்.

"அவசர கேஸ் ஒண்ணு வந்தப்போ நீங்க கவலைப்படாமல் அனுவைப் பார்க்கப் போனது."

"தப்புதான் ப்ரியா. ஆனா..."

"சாரி டாக்டர். என்ன சமாதானம் சொன்னாலும் அது தப்புதான். இனிமே அனு விஷயத்திலே ஓவரா டென்ஷனாக மாட்டேன்னு நீங்களே சத்தியம் செய்துக் குங்க."

அவள் குரல் வெகு கண்டிப்பாக ஒலித்ததில் அவருக்குப் பெருமையாகக் கூட இருந்தது. ஒருவேளை அவளைப் பற்றி அன்று தினசரியில் வந்திருந்த கிசுகிசு அவர் பார்வைக்கு வந்திருந்தால் இந்த அளவுக்கு பெருமைப்பட்டிருக்க மாட்டாரோ என்னவோ!

"ஓக்கேம்மா" என்றார். பிறகு "டாக்டர் ப்ரேம் இன்னிக்கு வர முடியாதுன்னு சொல்லிட்டார். அதனாலே..."

அவர் முடிப்பதற்கு முன்னே பதில் வந்தது சிவப்ரியாவிடமிருந்து. "நைட் ட்யூட்டியும் நானே பார்க்கிறேன் டாக்டர். நோ ப்ராப்ளம்."

அன்றிரவு சாலை விபத்தொன்றில் சிக்கிக் கொண்ட ஒருவனுக்கு அவசர சிகிச்சை அளிக்க வேண்டியிருந்தது. எலும்பு முறிவு மருத்துவரை அழைத்து அவரது ஆலோசனைப்படி எக்ஸ்ரேவுக்கு ஏற்பாடு செய்தாள். வலது காலில் கடும் எலும்பு முறிவும், இடது முழங்காலில் எலும்பு விரிசலும் ஏற்பட்டிருக்கலாமென்று தோன்றியது.

"என்ன டாக்டர் ப்ரியா, ஏன் இப்படி வியர்த்துக் கொட்டியிருக்குது உங்களுக்கு?" என்றார் ஸ்பெஷலிஸ்ட்.

"ஒண்ணுமில்லே" என்று அவள் கூறிய போதுதான் அந்த நோயாளி கண்களை விழித்து அவளைப் பார்த்தான். கடும் வலியையும் மீறி அளவிட முடியாத குரோதம் தென்பட்டது, சிவப்ரியாவை வேணு பார்த்த பார்வையில்.

(தொடரும்)

பேருந்துகளின் பின்னால் 'பிளாஸ்டிக்கைப் பயன்படுத்தாதீர்கள்' என்கின்றன வாசகங்கள். மாசுக் கட்டுப்பாட்டு வாரியத்தின் அறைகூவல் இது.

கதாநாயக அந்தஸ்து பெற்ற பிளாஸ்டிக் திடீரென்று வில்லனாகிவிட்டது.

சூப்பர் ஸ்டாராக பிளாஸ்டிக் மதிக்கப்பட பல காரணங்கள். மற்றெந்தப் பொருளையும் விட விலைகுறைவானது. தூக்கிச் செல்ல எளிது, எடை குறைவானதென்பதால், பெருமளவில் தயாரிப்பது வெகு சுலபம். குறைவான இடத்தையே அடைத்துக் கொள்ளும். சுமார் ஐந்நூறு பிளாஸ்டிக் கவர்களை நன்கு அழுத்தி சிறு பாக்கெட்டாக்கி அனுப்ப முடியுமே! உள்ளுக்குள் இருப்பது என்ன என்பதை வெளியிலிருந்தே காண்பிக்கக் கூடிய தன்மை பெற்றது. நீர்புகாது. பாக்டீரியா போன்றவற்றிற்கு எளிதில் இடம் கொடுத்து விடாது.


• கோதண்டராமன்


• சங்கர்



# பிளாஸ்டிக் பயங்

ஆனால், இத்தனையையும் மீறி, சுற்றுப்புறச் சூழல் ஆர்வலர்களின் வெறுப்பைச் சம்பாதித்து வந்திருக்கிறது பிளாஸ்டிக். பிளாஸ்டிக், அதன் உபயோகம் முடிந்து தூக்கியெறியப்பட்ட பின்னரும் அன்று கண்ட மேனிக்கு அழிவில்லாமல் இருக்கும். இதனாலேயே பல சிக்கல்கள். மலைபோல் குவியும் இவற்றை எப்படி அகற்றுவது என்ற பிரச்னை. தவிர அங்கங்கே சாக்கடைக்குள் அடைத்துக் கொள்கிறது. மொத்த சிஸ்டமும் பணாலாகிறது. போதாக்குறைக்கு போஸ்டர்களையும் தின்று வசம் கண்ட மாநகர மாடுகள் 'பிளாஸ்டிக்குக்குப் பாவமில்லை' என்று அவற்றையும் விழுங்கிவிட்டு அல்லல்படுகின்றன.

உலகெங்கும் பிளாஸ்டிக் மிகப் பெருமளவில் பயன்படுத்தப்படும்போது இந்தியாவில் மட்டும் அங்கங்கே பிளாஸ்டிக்கிற்குத் தடைவிதிப்பது சரியா? சென்னை பல்கலைக்கழகத்தின் 'பாலிமர் மற்றும் சுற்றுப்புறச் சூழல் வேதியல் துறை'யின் தலைவரான ஹெச். கோதண்டராமனைக் கேட்டோம்.

"எனக்குத் தெரிந்து நம் நாட்டில் பிளாஸ்டிக்குக்கு முதலில் தடை விதிக்கப்பட்டது சபரி மலையில்தான்.

அடுத்து மும்பை. அங்குள்ள கடற்கரைகளில் வேர்க்கடலையைத் தின்றுவிட்டு அதன் பிளாஸ்டிக் பாக்கெட்டுகளை கடலுக்குள் அவரவரும் வீசி எறிய, அவை அலைகளோடு மீண்டும் கரைக்கு வந்து சேர்ந்து,

அந்தச் சூழலையே அலங் கோலமாக்கின.




சுற்றிச் சுற்றி வந்தது. அந்த நிலையில் மேற்படி எரிப்பினால் பிளாஸ்டிக்கிலிருந்து வெளிப்படும் 'டையான்'கள் எனப் படும் நச்சுப் பொருள் காற்றில் அதிகமாகச் சேர்ந்து பலருக்கும் உடல்நலக் கோளாறுகளை உண்டாக்கியது. எனவே அங்கும் பிளாஸ்டிக்குக்குத் தடை போடப்பட் டது.

"மேலைநாடுகளைவிட இங்கு பிளாஸ்டிக்கை அதிக அளவில் ரீசைக்ளிங் செய்கிறோம் என்றுதான் சொல்ல வேண்டும். இதற்கு முக்கியக் காரணம் வறுமை. இங்கே ஒரு மினரல் வாட்டர் பாட்டிலை, அந்தத் தண்ணீர் தீர்ந்த பிறகும் தொடர்ந்து பல விதங்களில் பயன்படுத்துகிறார்கள். தெருக்களில் வீசப்படும் பிளாஸ்டிக் பைகள் போன்றவற்றை நரிக் குறவர்கள் போன்றோர் எடுத்து விற்பது எங்கே? ரீசைக்ளிங் செய்யும் இடங்களில்தானே? ஆனால் ஒன்று பிளாஸ்டிக்கை மீண்டும் மீண்டும் ரீசைக்ளிங் செய்யச் செய்ய அதன் தரம் குறைந்து கொண்டே வரும்"என்றார்.




"என்ன இருந்தாலும் பிளாஸ்டிக்கைப் பயன் படுத்தாதீர்கள்' என்ற பொதுவான வாசகத்தைப் பிரபலப்படுத்துவது ஒரு விதத்தில் அநீதியானது. பிளாஸ்டிக் என்றாலே மக்கள் மனத்தில் எழுவது வாளிகள், 'மக்'குகள், குடங்கள் போன்றவை தான். இவற்றால் எந்தப் பிரச்னையும் கிடையாது. ஒருமுறை பயன்படுத்தி வீசியெறியும் பிளாஸ்டிக் கோப் பைகள், மிக மெல்லிய பிளாஸ் டிக் பைகள் போன் றவற்றால்தான் சில சூழ்நிலைச் சிக்கல்கள் உண்டாகின்றன" என்று குறிப்பிட்டார் சங்கர். 'பாலிமர் சொஸைடி'யின் சென்னைப் பிரிவின் தலைவர். தவிர நைலான் பொருள்களைத் தயாரிக்கும் நிறுவனம் ஒன்றையும் நடத்தி வருபவர்.

"இங்கு டயர்களை எரிக் கிறோம் இல்லையா, அது போல டெல்லியில் ஒரு முறை பிளாஸ்டிக் பைகளை எரித்தார்கள். அப்போது குளிர்காலம் என்பதால் காற்று குறை வான பகுதியிலே புகை

"வேறு சில கோணங்களையும் கவனிக்க வேண்டும். தமிழ்நாட்டில் மட்டும் பிளாஸ்டிக் தொழிலை நம்பி பன்னிரண்டாயிரம் பேர் இருக்கிறார்கள். இவர்களின் வேலை வாய்ப்பு என்னாவது? பிளாஸ்டிக் தொழிலினால் மட்டும் ஆண்டுக்கு ஒன்றேகால் கோடி ரூபாய் அரசுக்கு வருமானம் - வரிகளின் மூலமாக. இதையெல்லாம் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல் ஒட்டு மொத்தமாக

பிளாஸ்டிக்கையே ஒழிப்பது போன்ற கருத்தை உருவாக்கக் கூடாது. ஒருமுறை பயன்படுத்திய பிறகு தூக்கியெறியக் கூடிய பிளாஸ்டிக்குகளுக்கு மட்டும் தடை என்றால்கூட ஓரளவு ஏற்றுக் கொள்ளலாம். அவற்றால் சூழ்நிலை பாதிப்பு என்று சொல்வதைவிட, அவற்றைச் சரியானபடி கையாள மக்களுக்குத் தெரியாததால்தான் சிக்கல் ஏற்படுகிறது. இவற்றைச் சரியான முறையில் மக்களுக்கு மாநகராட்சி கற்பிக்க வேண்டும். அதை விடுத்து 'தடை' என்று அறிவிப்பது சரியான போக்கு அல்ல.''

சங்கரின் 'தடை தேவையில்லை' என்ற கருத்தை ஏற்றுக் கொண்டாலும், பிற விஷயங்களில் மாற்றுக் கருத்தைக் கொண்டிருக்கிறார் கோதண்டராமன்.

''மக்களை இந்த விதத்தில் அறியவைப்பது மாநகராட்சியின் கடமை என்று கூறுவது சரியல்ல. பிளாஸ்டிக் தொழிலதிபர்கள்தான் அந்தக் காரியத்தில் ஈடுபட்டிருக்க வேண்டும். அதைச் செய்யாததனால்தான் இப்போது அவர்களுக்குப் பெரும் நஷ்டத்தை விளைவிக்கக் கூடிய சட்டங்கள் உருவாகத் தொடங்கியிருக்கின்றன.

''முன்பெல்லாம் மருத்துவமனைகளில் பயன்படுத்திய பிளாஸ்திரிகள், பஞ்சு போன்றவற்றை அருகிலுள்ள ஏதாவதொரு இடத்தில் மலைபோல் குவித்துவிடுவார்கள். உதாரணமாக, பொது மருத்துவமனை இதையெல்லாம் கூவம் நதிக்கரையில் கொண்டு வந்து கொட்டும். இதனாலெல்லாம் நோய் பெருமளவில் பரவுகிறது என்பதை அறிந்ததும், இதுபோன்ற கழிவுகளையெல்லாம் மருத்துவமனையிலே எரித்துவிட வேண்டும், எரிக்கும்போது விஷவாயு வெளியேறாத வகையிலான இயந்திரங்களைப் பயன்படுத்த வேண்டும் என்று சட்டம் போட்டு நடைமுறைப் படுத்தி வருகிறார்கள். அதேபோல பிளாஸ்டிக் விஷயத்திலும் செய்யலாம்.

''மேலை நாடுகளில் பயனற்ற கம்ப்யூட்டர்களைக் கூட வீசியெறிந்து விடுவார்கள். இவற்றிலுள்ள பல விஷயங்கள் கடும் நச்சுத் தன்மை கொண்டவை. ஆனால் மேலை நாடுகளில் பிளாஸ்டிக்கை எரிப்பதை முறையாகச் செய்து வருகிறார்கள். இதன் மூலம் மின்சாரத்தைக் கூட உருவாக்குகிறார்கள். தவிர, மிக அதிகமான வெப்பத்தில் பிளாஸ்டிக் எரிப்பு நடைபெற்றால் நச்சு வாயுக்கள் காற்றில் கலக்காது. ஐரோப்பாவில் பொருள்கள் அடங்கிய பிளாஸ்டிக் உறையின் மேலேயே 'ரீசைக்ளிங் செய்யக் கூடியது', 'ரீசைக்ளிங் செய்ய முடியாதது' என்று அச்சிட வேண்டியது கட்டாயம்.

''தவிர பிளாஸ்டிக்குகளுக்குப் பதிலாக எதைப் பயன்படுத்த முடியும்? உலோகங்களையா? அவை கனமிக்கவை. தவிர இவை குறைந்து கொண்டே வருகின்றன. எனவே. பேப்பர் கோப்பைகளையா? இதற்காக எவ்வளவு மரங்களை அழிக்க வேண்டியிருக்கும்?... அது மட்டுமல்ல, மிகக் குறைவான எரிபொருளைக் கொண்டு அதிக அளவில் தயாரிக்க முடிவது பிளாஸ்டிக்தான். எனவே இதைத் தடை செய்வதைவிட தெருவில் கண்டபடி இவற்றை மிதக்கவிட்டால் ஏற்படும் அபாயங்களை மக்களின் மனத்தில் பதிய வைப்பதுதான் நடைமுறை புத்தி சாலித்தனம்.''

— ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : ஸ்ரீஹரி



''போலிக் கையெழுத்துப் புகார்ல தினசரி ஸ்டேஷனுக்கு வந்து கையெழுத்துப் போடுறானே... கண்ணுச்சாமி... எப்படி இருக்கான்?''

''அதை ஏன் கேட்கறீங்க. ஜாலியா தினசரி வெவ்வேறு கையெழுத்துப் போடுறான்!''

– அம்பை தேவா

## சிக்கல் 65



சுவையான சமையலுக்கு, நல்ல தரமான சாமான்கள் முக்கியம் தான். ஆனால் அதைவிட முக்கியமான ஒன்று, சரியான செய்முறை. சாமான்கள் சற்று முன் பின் இருந்தாலும் நல்ல செய்முறை இருந்தால் சமாளித்து விடலாம். ஆனால் முதல் தரமான சாமான்கள் இருந்தாலும் செய்முறை சொதப்பல் என்றால் சமையலும் சொதப்பல் தானே. சாமான்களைவிட செய்முறை முக்கியம் என்ற உண்மையைப் பலர் ஏற்றுக் கொள்ளத் தயங்குகிறார்கள்.

தென்னிந்திய ஐட்டங்களைச் சுவையாகத் தயாரித்துப் புகழ் பெற்ற ஒரு மெஸ் நடத்தும் நண்பர் ஒருவர், ஒருநாள் தனது மெஸ்ஸில் வட இந்திய ஐட்டங்களான நான், ரோட்டி, பீஸ் மசாலா போன்றவற்றை அறிமுகப்படுத்தினார்.

"அதற்கான ரெசிபி - செய்முறை உங்களுக்கு எப்படிக் கிடைத்தது? வட இந்திய சமையல் தெரிந்த யாரையாவது நியமித்திருக்கிறீர்களா?" என்று கேட்டேன். "சே! அதெல்லாம் எதுக்கு? நம்ம இட்லி தோசை பண்றது தாங்க கஷ்டம். அவங்க ஐட்டம் படு ஈஸி. சப்பாத்திய கொஞ்சம் கெட்டியாப் போட்டு அதோட தலைல கொஞ்சம் வெண்ணெயப் போட்டு உருக வைச்சா 'பட்டர் நான்'. சீஸ் கட்டியப் போட்டு, மசாலாவை அரைச்சு விட்டா பட்டர் மசாலா. வெங்காயத்தையும் உருளைக் கிழங்கையும் ஒரு மாதிரியா வறுத்துப் போட்டா அது ஒரு சைட் டிஷ்" நண்பர் அடுக்கிக் கொண்டே போனார்.

ஆரம்பித்த சில நாட்களுக்குள்ளேயே வட இந்திய செக்ஷன் மூடப்பட்டது. "சேட்டு போடறதவிட பாதி விலைல 'நான்' போடறேன். அப்படியும் யாரும் சாப்பிட மாட்டேங்கறாங்களே? ஏன்னே புரியல?" சலித்துக் கொண்டார் நண்பர்.

இதற்கு நேர் மாறான ஒரு நிகழ்ச்சி. நண்பர்கள் சிலர் சுற்றுலாவாக உதய்பூர் சென்றிருந்தார்கள். அங்கிருந்த தாஜ் ஹோட்டலில் தங்கியிருந்தார்கள். "வட இந்திய உணவு சாப்பிட்டு, நாக்கு செத்துவிட்டது. கொஞ்சம் தயிர் சாதமாவது போடுங்கள்" என்று கேட்டார்கள்.

"நாங்கள் தயிர் தருகிறோம், சாதம் தருகிறோம். உங்களுக்கு என்ன வேண்டுமோ செய்து கொள்ளுங்கள்" என்று ஹோட்டல்காரர்கள் சொல்லி விட்டார்கள்.

"அந்தத் தயிரையும் சாதத்தையும் கலந்து, தாளித்துக் கொட்டி தயிர் சாதமாகத் தந்தால் என்ன?" அங்கலாய்த்தார்கள் நம்மவர்கள்.



"ஸாரி எங்களுக்கு அங்கீகரிக்கப்பட்ட செய்முறை வேண்டும். அது இல்லாமல் நீங்கள் சொல்வது போல் கலந்துக் கட்டி எங்கள் தாஜ் ஹோட்டல் பெயரைக் கெடுத்துக் கொள்ள முடியாது." என்று சொல்லிவிட்டார்கள்.

பேச்சுவார்த்தை தொடர்ந்து, கடைசியில் சென்னை தாஜ், ஃபேக்ஸ் மூலம் தயிர் சாதம் செய்யும் ரெசிப்பியை, உதய்பூருக்கு அனுப்பி வைத்தது! ஒன்றரைப் பக்கம் இருந்த அந்த செய்முறையின் எழுத்துப் பிசகாமல் தயிர்சாதம் செய்யப்பட்டது. "இப்படி ஒரு தயிர் சாதத்தை நாங்கள் சாப்பிட்டதேயில்லை" என்று துண்டைத் தாண்டி சத்தியம் செய்தார்கள் சுவைத்தவர்கள்.

# ஃபேக்ஸில் தயிர் சாதம்!

**வரலொட்டி ரெங்கசாமி**



✉ 'புதிய மதுபரப்புக் கொள்கை' தலையங்கம் படித்தேன். அரசின் மது விலக்குக் கொள்கை எப்படி மதுபரப்புக் கொள்கையாக மாறி வருகிறது என்பதை, தலையங்கம் மிகத் தெளிவாக விளக்கியிருந்தது. ஜெயலலிதா அரசின் மதுக்கடை லைசென்ஸ் முறையும், அதை தொடர்ந்த மற்ற செயல்பாடுகளும் அ.தி.மு.க. அரசின் தெளிவில்லாத சிந்தனைப் போக்குக்குச் சாட்சி.

**மொரட்டுப்பாளையம்,**
**விஜயஸ்ரீ இராஜேஸ்வரன்**

✉ 'தில்' படத்தை, சும்மா, தெனாவெட்டாக, தெலுங்கு ஆக்ஷன் படம் போல இருக்குதுன்னு சொன்ன உமக்கு ரொம்பவே 'தில்' இருக்குதய்யா!

**மதுரை, வி.பி.காந்திமதி**

# உமக்கும் 'தில்' இருக்கு!




✉ ஹாக்கி வீரர் தன்ராஜ் பிள்ளையின் பேட்டி சுவாரஸ்யம்.

**மதுரை, ஆர்.வேலம்மாள்**

✉ ஒரு பச்சைக் குழந்தையின் பசியைப் போக்க முன்வரும் ஏழையின் பெருந்தன்மையையும், அதிலும், ஏற்றத் தாழ்வு கண்டு அவரை ஏசும் தாயையும் அழகாகச் சித்திரித்த சிறுகதை, 'ஊர்ச் சோறு' முதல் பரிசுக்குரியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது பாராட்டுக்குரியது.

**திருப்பரங்குன்றம், டி.கே.சுப்பிரமணியன்**

✉ 'சிக்கல் 65' ஒரு பக்க கட்டுரைதானே என படிக்க ஆரம்பித்தேன். படித்த பிறகுதான் தெரிந்தது ஒரு பக்கா கட்டுரை என்று.

**செங்குன்றம், பாலசுப்ரமணியன்**

✉ 'கொதி' சிறுகதையின் நிகழ்வுகளும், முடிவும் மனத்தைத் தொட்டன.

**போடி,**
**எஸ்.எம்.பாலசுப்ரமணியன்**

✉ 'கடல் நடுவே' என்கிற கட்டுரையைப் படித்தேன். கடலில் மீன் பிடிக்கச் செல்லும் தமிழக மீனவர்களுக்கு, வடக்கே ஆந்திரர்களின் கடற்கொள்ளை, தெற்கே இலங்கை கடற்படையினரின் துப்பாக்கிச் சூடு, உள்நாட்டிலே அரசியல்வாதிகளின் பகற் கொள்ளை, அப்பப்பா... இவ்வளவு தொல்லைகளையும், இன்னல்களையும் தாங்கி வாழும் தமிழக மீனவர்களின் வாழ்க்கையை நினைக்கும் போது வருத்தமாக இருக்கிறது. அரசு நடவடிக்கை எடுக்கும் என நம்புவோம்.

**இலால்குடி,**
**இராஜேந்திரன்**

✉ செட்டிநாடு சமையல் குறிப்புகள் இணைப்பு இதழ் பயனுள்ளதாக இருந்தது.

**வயலூர், இரா. கண்ணம்மாள்**

✉ 'வைரமுடைய நெஞ்சு வேண்டும்' எனும் தொடரில் சுபா சுந்தரத்தின் அனுபவங்கள் நெஞ்சைக் கலக்கின. எந்த சோதனை வந்தாலும், தளராத உறுதி வேண்டும் என்பதை அவரது அனுபவம் காட்டியது.

**சென்னை, உமாமகேஷ்வரி**

✉ இளம்பிறையின் 'பிஞ்சுக் கனவு' கவிதை, எளிய சொற்பிரயோகத்தில், வலிய தத்துவச் சாட்டை, நளினமாகச் சொல்லிய நேர்த்தி அழகு.

**ஆற்காடு, ராஜவேணி**

# ஸ்கூட்டி ஆன்டி!

வேளச்சேரி சதாசிவநகரில் ஆள் அரவமில்லாத ஒரு குறுக்குத் தெரு. ரோடு ஓரமாய்ப் புத்தம் புது ஸ்கூட்டி நிற்க, காரிலிருந்து இறங்கிய பளபள மேக்கப் மடிசார் மாமி, கிருஷ்ண மாச்சாரி ஸ்ரீகாந்த் ஸ்டைலில் மண்ணைத் தொட்டு, சூரியனைக் கும்பிட்டுவிட்டு, ஸ்கூட்டியைக் கிளப்பினார்.

சல்லென்று ஸ்டார்ட் செய்து, அரை வட்டம் அடித்துவிட்டு, தடுமாறாமல் ஆக்ஸிலரேட்டரைத் தூக்க, எதிரே ஸ்போர்ட்ஸ் சைக்கிளில் வந்த குட்டிப் பையன், "ஹை... ஸ்கூட்டி ஆன்டி" என்று கையசைக்க... உற்சாகத்துடன் கையாட்டினார் சுசிலா மாமி சச்சு! (டைட்டில் ஜஸ்டி ஃபைடு!)

ஜெயா டி.வி.யில் விரைவில் ஒளிபரப்பாகவிருக்கும் 'ஸ்கூட்டி ஆன்டி' படப்பிடிப்பில் கலகலப்பு களைகட்டியிருந்தது.

ஸ்கூட்டியில் வந்து இறங்கிய சச்சுவை எல்லாரும் சூழ்ந்துகொண்டார்கள்.

"என்னம்மா... பயம் ஒண்ணுமில்லியே? ஹெல்மெட் தேவைப்படுமா?" கோவை அனுராதா கேட்க...

"அதெல்லாம் வேணாம் ஸார். ஒரு வாரம் பிராக்டிஸ் பண்ணியிருக்கேனே!" சச்சு மறுத்தார்.

"அட! ஹெல்மெட் உங்களுக்கு இல்லம்மா. பின்னாடி உட்கார்ந்துக்கிட்டு வரப்போற எனக்கு!"

கோவை அனுராதா 'டக்' என்று சொல்ல, சச்சுவோடு சேர்ந்து யூனிட்டே சிரிப்பில் ஆழ்ந்தது.

'இழுத்துக் கொண்டே போவோம்'னு ஒரு மெகா சீரியல். டி.வி. சீரியல் பைத்தியமான சச்சு, அந்தத் தொடரை, ஒரு நாள் கூட தவறாமல் ஆறு வருஷம் தொடர்ந்து பார்த்து சாதனை செய்ததோடு, தினமும் கேட்கப்படும் போட்டிக் கேள்விக்குப் பதிலும், விமர்சனக் கடிதமும் எழுதிப் போடுகிறார். தொடரின் இறுதியில், நடத்தப்படும் அதிர்ஷ்டக் குலுக்கலில் சுசிலா மாமிக்கு, பம்பர் பரிசாகப் புத்தம்புது ஸ்கூட்டியும், 'விமர்சனத் திலகம்' என்ற பட்டமும் கிடைத்துவிடுகிறது. அப்புறமென்ன? மாமியின் அலட்டலுக்குக் கேட்கணுமா! வீட்டில் இரண்டு கார் இருந்தாலும், தானே ஜெயித்து வாங்கிய ஸ்கூட்டியில் உலா வருவதையே சுசிலா மாமி விரும்ப, அவருக்குக் குடை பிடிக்கும் கணவர் வேலை கோவை அனுராதாவுக்கு...!



'ஸ்கூட்டி ஆன்ட்டி' சீரியலுக்காக ஒரு வாரம் ஸ்கூட்டி

# டேக் IT ஈஸி

இன்னொரு புது டி.வி சேனல் வரப் போகிறது. பெயர்: டி.எம்.ஜி. முழுக்க முழுக்க தகவல் தொழில் நுட்பத்துக்கான இந்த சேனலை 'டெக்னாலஜி மீடியா குரூப்' என்ற நிறுவனம் துவக்கியுள்ளது.

இந்த சேனல், ஏற்கெனவே பெங்களூரில், பிரபலமாகி சாஃப்ட்வேர் துறையில் மட்டுமின்றி, பொதுமக்களிடத்திலும் நல்ல வரவேற்புப் பெற்றுவிட்டது. இப்போது சென்னையைக் குறி வைத்திருக்கிறார்கள்.




''எங்களுடைய நிகழ்ச்சிகள் ஆங்கிலத்தில் மட்டுமின்றி, கன்னடத்திலும் உண்டு. இப்போது வாரம் அரை மணி நேரத்துக்கு 'சென்னை டைரி' என்று தமிழிலும் வரப் போகிறது. கம்ப்யூட்டர் துறையில் உள்ள பிரச்னைகள், சந்தேகங்களுக்கு வல்லுனர்கள் பதில் தரும் நிகழ்ச்சியான 'டேக் IT ஈஸி' ரொம்ப பிரபலமாகிவிட்டது. முதல்வாரம் நான்கு ஈமெயில் வந்தது. பத்தே வாரத்தில் ஈமெயில் வரத்து டபுள் செஞ்சுரி அடித்துவிட்டது'' என்கிறார் டி.எம்.ஜி சேனலின் தலைவர் சுபன்ஜன் சர்க்கார்.

— சி.எம்

ஓட்டக் கற்றுக் கொண்டிருக்கிறார் சச்சு.

"சுந்தராம்பா'னு எங்க பாட்டி ஒருத்தர் இருந்தாங்க. அவங்க என்னை, சைக்கிள், ஸ்கூட்டர்னு எதையும் தொடவே விட மாட்டாங்க. எனக்குச் சமைக்கறதுன்னா ரொம்ப பிடிக்கும். 'சூடு பட்டுடும், கையை அறுத்துக்குவே'னு கிச்சனுக்குள்ளேயே விட மாட்டாங்க. அவ்வளவு பொத்தி பொத்தி வளர்த்ததனால, நிறைய விஷயங்களை முயற்சியே பண்ணலை. ஒருமுறை படப்பிடிப்பிலே, நான் கார் ஓட்டிக்கிட்டு வந்ததை சிவாஜி சார் பார்த்துட்டார். உடனே கூப்பிட்டு, 'இனிமே கார் ஓட்டற ரிஸ்க்கெல்லாம் எடுக்காதேம்மா... உனக்கு அடிகிடி பட்டுடுச்சுன்னா, உன்னை நம்பி பணம் போடற தயாரிப்பாளருக்குத்தானே டென்ஷன்? நம்பளாலே ஷூட்டிங் தடை படக்கூடாது' என்று ஸ்கூல் வாத்தியார் மாதிரி அன்பு கலந்து கண்டித்தார். அதிலிருந்து நான் கார் ஓட்டறதில்லே.... இப்ப சீரியலுக்காக வண்டி ஓட்டக் கத்துக்கும் போது, சிவாஜி சாரோட அட்வைஸ்தான் ஞாபகத்துக்கு வந்தது" என்று நெகிழ்ந்தார் சச்சு.

''ஸ்கூட்டி ஓட்டக் கற்றுக் கொண்டதை வைத்தே ஒரு காமெடி சீரியல் செய்து விடலாம்" என்று முட்டியைத் தடவிக் காட்டினார்.

இவ்வளவு சொல்லிவிட்டு, ஸ்கூட்டி ஆன்ட்டியின் கதையைச் சொல்லாமல் விடலாமா?

சுசிலாமாமி படு கண்டிப்பான அம்மா. அவருக்கு மூன்று மகன்கள். கட்டுப்பாடான அந்தக் குடும்பத்தில், மூன்று மருமகன்கள் வந்து சேர, ஆளுக்கொரு பிரச்னை... நடுவே குட்டையைக் குழப்புவதற்கென்றே ஒரு காமெடி வில்லிக் கூட்டம். சுசிலா மாமியும் அவரது கணவர் கோவை அனுராதாவும், மகன்கள் வீட்டுக்குச் சென்று, சிக்கல்களைத் தீர்ப்பதுதான் கதையாம்.

— ஆன்டெனா

கல்கி 19.8.2001

# நிம்மதி தரும் ஆலயம்!



நமது வாழ்வில் காலை முதல் மாலை வரை உழைத்தாலும் இரவில் படுக்கும் பொழுது நிம்மதி கிடைப்பதில்லையே என்று பலரும் சொல்வது நம் காதில் கேட்கின்றது ஆம்! நிம்மதியினை இழந்தவர்களுக்கும், நிம்மதியினைத் தேடுவோர்களுக்கும், நிம்மதி தரும் கோவிலாக திகழ்கின்றது. கோவை - தி யுனைடெட் ஊனமுற்றோர் பள்ளி.

நம்மைப் போன்று நடக்க முடியாத, எழுந்து நிற்க முடியாத, பேச வாயிருந்தும் பேச முடியாத, மனமிருந்தும் மனவளர்ச்சி இல்லாத 110 - சிறுவர், சிறுமியர்களுடன் கூடிய இல்லம் தான் தி யுனைடெட் ஊனமுற்றோர் பள்ளி இந்த இல்லத்திற்கு சென்று சில மணித்துளிகள் இக்குழந்தைகளுடன் நேரத்தினை செலவிட்டால் மனித நேயத்துடன் கூடிய மன நிம்மதி கிடைக்கிறது. ஆம்! இறைவனின் குழந்தைகளாக கருதப்படுகின்ற இக்குழந்தைகளை பார்க்கும் பொழுது மனதில் நிம்மதி பிறக்கின்றது!

நாம் அனைவரும் பிறக்கின்றோம், வாழ்கின்றோம், மடிகின்றோம். நாம் வாழ்கின்ற பொழுது செய்யும் சிறு தர்மம் நம் வம்சத்தை வாழ வைக்கும் ஊனமுற்ற குழந்தைகளுக்கு செய்யும் தொண்டு! இறைவனுக்கு செய்யும் தொண்டாகும்

THE UNITED PHYSICALLY HANDICAPPED SCHOOL, 96, Sathy Main Road, Kurumbapalayam, Coimbatore-641107. Phone: 0422-867578.

இந்த அனாதை இல்லத்தில் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், முதாதையர்களின் நினைவு நாள்களில் ஒரு நாள் உணவு வழங்கி உதவி செய்தால் பெரும் புண்ணியம் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை. மளிகைப் பொருட்களோ, துணிமணிகளாகவோ,காசோலையாகவோ அல்லது மாதாமாதம் ஒரு சிறு தொகையினை மணியார்டராகவோ தாங்கள் இப்பள்ளியின் பெயரில் அனுப்பி உதவலாமே!

வருடத்தில் ஒரு நாள் உணவு வழங்கலாமே!

ஆலயம் செல்லும் நாம் இந்த ஊனமுற்ற அனாதை இல்லத்திற்கு சென்று பிறந்தநாளை கொண்டாடுவோமாக!! இதை படிக்கின்ற நாம் சிறு தொகையினை அனுப்பி உதவலாமே!!



- உத்ரா

# வாழும் கல்கி கதாபாத்திரங்கள்!



• வானதி

'பொன்னியின் செல்வன்' நாவலை படித்தபோது நான் மதுரை தியாகராஜர் பொறியியல் கல்லூரி மாணவன். படித்து முடித்து பல மாதங்களான பின்பும், அமரர் கல்கியின் கதாபாத்திரங்களுடனேயே உலவிக் கொண்டிருப்பது போன்ற பிரமை ஏற்பட்டது. எல்லா கதாபாத்திரங்களும் தனித்தன்மை பெற்று விளங்கினாலும் 'வானதி' என்ற பெயர் நெஞ்சில் நிலைத்துவிட்டது. எனக்கு ஒரு பெண் குழந்தை பிறக்குமாயின் அவள் பெயர் வானதிதான் என்று சங்கல்பமே செய்து கொண்டேன்!

அதேபோல் என் மகளுக்கு 'வானதி' என்று பெயர் வைத்தோம். அந்த வானதியைப்போல் எல்லாவற்றுக்கும் மய்ங்கி விழமாட்டாள் எங்கள் வானதி. தான் எடுத்த காரியத்தைச் சாதிக்க வேண்டும் என்ற வைராக்கியம் உள்ளவள். இசை, நாட்டியம், வீணை, படிப்பு என கெட்டிக்காரி.

-ரா. உதயகுமார், சிவகாசி



# வாழ்த்துவோம்

திருச்சி கிருத்திகா - மணியன் தம்பதியின் மகன் வந்தியத் தேவனுக்கு நான்கு வயதாகிறது.

"இந்தக் குழந்தைக்கு நீங்கள் தான் பெயர் வைக்க வேண்டும்!" என அந்த அரசியல்வாதியிடம் கேட்டுக் கொண்டபோது "என்ன பெயர் வைத்தாலும் நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண் டும். இப்பொழுது ஏற்றுக் கொண்டு பின்னர் நீங்கள் வேறு பெயர் வைத்து அழைக் கக் கூடாது!" என்கிற நிபந் தனையுடன் அந்தக் குழந் தைக்கு வைக்கப்பட்ட பெயரே வந்தியத்தேவன். பெயர் வைத் தவர் மாநிலங்களவையின் தி.மு.க. உறுப்பினர் திருச்சி சிவா. குழந்தை அவரது அக் காள் பேரன்.



• திருச்சி சிவா

"நேற்றைக்குப் படித்தது இன் றைக்குப் பலருக்கு நினைவில் இருப்பது இல்லை. ஆனால், என்றோ படித்த 'பொன்னியின் செல் வன்' இன்றும் என் மனத்தில் பசுமை யாக இருக்கின்றது. என் நெஞ்சினில்,





• சிவகாமி

நினைவினில் நிலைத்து நிற்கும் கல்கியின் பாத்திரங்களில் முதலிடத்தில் இருப்பது வந்தியத் தேவன்!" என்றார் சிவா.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# வரங்களை..!

**க**ல்கியின் 'சிவகாமியின் சபதம்' நாவல் முடிவுற்ற சமயம், பிறந்தவர் இந்த சிவகாமி. பெற்றோர் 'கல்கி'யின் பரம அபிமானிகள் என்பதால் இந்தப் பெயர் சூட்டி மகிழ்ந்தனர்.

திருநெல்வேலி அழகிய பாண்டியபுரம் கிராமத்தைச் சேர்ந்த சிவகாமி, தற்போது மும்பையின் பிரபல பெண்மணி. மும்பை வந்து சேரும் வரை, தமிழைத் தவிர வேறு ஒரு மொழியும் தெரியாது. இப்பொழுதோ பல மொழிக்காரர்களுடன் வெளுத்து வாங்குகிறார்.

இளம் வயதில் சுப்பிரமணியனைத் திருமணம் செய்து கொண்டு மும்பை வந்த சிவகாமி, பலவிதத்திலும் பட்ட கஷ்டங்கள் கொஞ்ச நஞ்சமில்லை. தைரியமும், தன்னம்பிக்கையும்தான் அவரது சொத்து.

முதலில் சிறிய அளவில் சமூக சேவை செய்து வந்தவர், தற்போது 'காமாக்ஷி ட்ரஸ்ட்' அமைப்பை ஏற்படுத்தி பெரிய அளவில் சமூக சேவை செய்து வருகிறார்.

மும்பை 'கர்ஜத்தில்' 'ப்ரேம் குடீர்' என்ற முதியோர் இல்லம் அமைக்கும் பணியில் படு பிஸியாக இருக்கிறார். "ஒன்றரைக் கோடி பட்ஜெட்.... முடியுமா?" என்று கேட்பவர்களுக்குச் சிவகாமியின் பதில், "ஏன் முடியாது! இப்பொழுதே 56 லட்சம் வரை சேர்த்து விட்டோமே" என்பதுதான்.

சிவகாமி நன்கொடை வசூலுக்குப் போகும் அழகைப் பார்க்க வேண்டும். எவ்வளவு கஞ்சக் கருமியாக இருந்தாலும் சிவகாமியின் பேச்சில் நெகிழ்ந்து 'செக் புக்கை'த் திறக்காமல் இருக்க முடியாது.

'பிரேம் குடீர்' பணியை நல்லபடியாக முடிக்க வேண்டும் என்பதுதான் மும்பை சிவகாமியின் லேட்டஸ்ட் 'சபதம்!

- சாரதா ஸ்ரீனிவாஸன், மும்பை

# புதிய பொருளாதாரம்!



**ல**ஞ்சம் வாங்குவது
சட்ட விரோதமாம்
ஆனால்,
சட்டத்தையே வாங்க
லஞ்சம் கொடுக்கலாமாம்

வரிகட்ட வேண்டியது
நடுத்தர மக்களின் கடமையாம்
அதைக் கட்டாதிருப்பது
அந்தஸ்து மனிதர்களின்
உரிமையாம்

வறுமை(க்) கோடழிப்பது
ஆட்சியாளர்களின் கொள்கையாம்
மீண்டும் ஆட்சியமைக்க
வறுமைக்கோடு தேவையாம்!

கள்ளப்பணம் பதுக்குதல்
பொருளாதார சீர்குலைவாம்
கள்ளப்பணப் பட்டுவாடா
அதுவே பணப்புழக்கமாம்

ப்ரணா

ஈரோடு வழக்குரைஞரான ஸ்டாலின் குணசேகரன் ''விடுதலை வேள்வியில் தமிழகம்'' (நிவேதிதா பதிப்பகம், 78, தெற்கு வீதி, மாணிக்கம்பாளையம் வீரப்பன்சத்தரிம் (அஞ்சல்), ஈரோடு – 4) என்ற நூலைத் தொகுத்து வெளியிட்டிருக்கிறார். நூறு கட்டுரைகளைக் கொண்ட இம் மெகா நூலில் (இரண்டு பாகம்) அதிகம் அறியப்படாத விடுதலைப் போராட்ட வீரர்களைப் பற்றிய கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. புத்தகத்திலிருந்து...

# நள்ளிரவில் கொடி...!

**1935**-ஆம் ஆண்டில், புதுவைத் தொழிலாளர்களின் நிலை, சொல்லும் தரம் அல்ல. கரும்புச் சக்கையைப் போல, அவர்கள் பிழியப்பட்டார்கள். காலை அலுவல் நேரத்தைக் கடிகாரம் தீர்மானிக்கவில்லை. மாறாக, சூரியன் உதிக்கும் போது தொழிலாளர்கள் வேலைக்கு வரவேண்டும். சூரியன் மறைந்த பிறகே, இருட்டிய பிறகே, வேலையை நிறுத்தி வெளியே வர வேண்டும். சில நாட்களில் தீவட்டியைப் பிடித்துக் கொண்டு வீடு திரும்புவார்கள்.

இந்தக் கொடுமை மாற, வ. சுப்பையாவின் அறிவுறுத்தல், நெறி காட்டலின் கீழ், புதுவைத் தொழிலாளர் வர்க்கம் (சவானா பஞ்சாலைத் தொழிலாளர்கள்) சில கோரிக்கைகளை முன்நிறுத்தி, வேலை நிறுத்தம் செய்தது. புதுச்சேரி வரலாற்றின் முதல் தொழிலாளர் வேலை நிறுத்தம் இதுதான்.

ஒவ்வொரு நாளும், ஆலையின் சங்கு முழங்கும். தொழிலாளிகள் வேலைக்குப் போக மாட்டார்கள். இப்படி 84 நாட்கள் வேலை நிறுத்தம் நீண்டது. மேலாளர் வலோ நிலைகுலைந்து, தொழிலாளர் தலைவர்களை அழைத்துச் சமரசம் பேசினார். 1935 ஏப்ரல் 20ஆம் நாள், தொழிலாளர் கோரிக்கையை உள்ளடக்கிய உடன்பாடு ஏற்பட்டது. வ. சுப்பையாவின் முதல் வெற்றி இது.

**1932**ஆம் ஆண்டு, ஜனவரி 25 நள்ளிரவு. சென்னை செயின்ட் ஜார்ஜ் கோட்டையின் கடும் பாதுகாப்பையும் மீறி, கோட்டைக்குள் நுழைகிறார் ஓர் இளைஞர். கோட்டையின் வடக்குப் பக்கத்தில் உள்ள வயர்லெஸ் நிலையத்தில் இருந்த 200 அடிக் கம்பத்தில் ஏறுகிறார். கலங்கரை விளக்கத்தின் வெளிச்சம் படும்போது கம்பத்தோடு ஒட்டிக் கொள்கிறார். இப்படிப் போராடிப் போராடிக் கம்பத்தின் உச்சிக்குச் சென்று, மூவண்ணக் கொடியை ஏற்றுகிறார். பிறகு யாருக்கும் தெரியாமல் இறங்கி விடுகிறார் அந்த இளைஞர். 26ஆம் தேதி காலையில் கோட்டையில் காங்கிரஸ் கொடி பறப்பதைப் பார்த்ததும் நகரம் முழுவதும் பெரும் பரபரப்பு. கோட்டையில் பறக்கும் மூவண்ணக் கொடியைக் காண, பெருங்கூட்டம்! ஆங்கில ஆட்சியாளருக்குக் கண்ணாமூச்சி காட்டி, நள்ளிரவில் கொடி ஏற்றி விட்டு வந்த அந்த வீர இளைஞரின் பெயர் ஆர்யா.



• வி. சுப்பையா



• ஆர்யா



• மௌலானா சாகிப்

**மா**வீரன் பூலித்தேவன், தலைசிறந்த சாணக்கியனாகவும், போர் வன்மை படைத்த அரிமாவாகவும் திகழ்ந்தார். வீரமும் வலிமையும் மட்டுமின்றி, நேர்மையும் பண்பும் நிறைந்தவர்.

ஆற்காடு நவாபுக்காக, ஆங்கில முதல் தளபதியான அலெக்சாண்டர் கெரான் என்பவன் 1755-இல் வரிவசூலிக்க வந்தவன். நவாபுக்கே வரி கட்டாத மாவீரன் பூலித்




தேவன் இந்த கும்பினியருக்கா பயந்து வரி கட்டுவார்?

பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரன் பொல்லாப்பாண்டிய கட்டபொம்மன் (இவன் வீரபாண்டிய கட்டபொம்மனின் தாத்தா. அப்போது வீரபாண்டிய கட்டபொம்மன் பிறக்கவில்லை)எட்டயபுரத்துப் பாளையக்காரன் ஆகியோர் கௌரானுக்குப் பயந்து, அடிபணிந்து கப்பத்தைக் கட்டியபோதும், சிறிதேனும் அஞ்சாமல் "நாங்கள் இந்த மண்ணில் பிறந்தவர்கள்; இந்த மண்ணுக்குச் சொந்தக்காரர்கள்; எங்கிருந்தோ வந்த ஆங்கிலேயருக்கு எதற்காகக் கட்டவேண்டும்? கப்பம் என்ற பேரால் ஒரு சல்லிக்காக கூடக் கட்ட முடியாது. உன்னால் ஆனதைப்பார்" என்று மாவீரன் பூலித்தேவன் கூறினார்.

'கொஞ்சம் நெல்லாவது கொடுங்கள்' என்று துபாஷ் கேட்டபோது, வரி என்னும் பெயரால் ஒருமணி நெல்லைக்கூடக் கட்ட மாட்டேன் என்று மறுத்துக்கூறினார். இதன் காரணமாக அவரின் ஊரின் பெயர் 'நெற்கட்டான் செவ்வல்' என வழங்கலாயிற்று. ஆனால் வெள்ளையர்களுக்குப் பயந்த மக்கள் அவ்வூரை 'நெல்கட்டும் செவ்வல்' என்றே அழைத்து வந்தனர்!

மதுரை மேங்காட்டுப் பொட்டல் என்ற ஜான்சிராணி பூங்காவின் முன் - 1931ல் பெரும் கூட்டம் கூடியது. உச்சி வானை எட்டும் வகையில் மௌலானா சாகிப் வீராவேசமாகப் பேசினார். ஆத்திரமுற்ற போலீசார் கூடி இருந்த மக்களைக் கலைக்கத் தடியடிப் பிரயோகம் செய்தனர். மௌலானா சாகிப் கைது செய்யப்பட்டார். இந்தியன் பீனல் கோடு பிரிவுகள் 145, 188 விதிகளின் கீழ் இரண்டு ஆண்டு காலம் சிறைத் தண்டனை பெற்றார்.

மௌலானா சாகிப் கடலூர் சிறையில் இருக்கும்போது இரு துயரச் செய்திகள் அவரைத் தேடி வந்தன. ஒன்று தம் மனைவி சுல்தான்பீவியின் மறைவு. மனைவியின் மரணச் செய்தியை ஏந்திவந்த உறவினர் எவ்வளவோ அழைத்தும் மௌலானா சாகிப் சிறையிலிருந்து செல்ல மறுத்து விட்டார். "அன்னை பாரதத்தின் அடிமைத்தளையை அறுத்தெறியும் வேள்வியில் நிற்கும் நான், மனையாளின் இறுதிச் சடங்கில் எட்டுவைக்க மாட்டேன்" என மறுத்துவிட்டார். சிறையிலிருந்த குமாரசாமி ராஜா முதலான நண்பர்கள் பலவாறு வேண்டியும் மௌலானா சாகிப் பிடிவாதமாகத் தம் கருத்தை மாற்ற மறுத்துவிட்டார். மௌலானாவின் தேச உணர்வுக்கும் சுதந்திர வேட்கையில் அவருக்குள்ள பற்றிற்கும் இந்நிகழ்ச்சி தக்க சான்றாக அமைந்துள்ளது.

மனைவி மறைந்து ஆண்டொன்று ஆகவில்லை. அதற்குள் மகள் பீபிஜான் மறைந்த செய்தி வந்தது. மனைவியின் மறைவில் மன உறுதியுடன் நின்ற மௌலானா சாகிப்பின் மனம் இப்போது கசிந்தது. கண்ணீர் மல்கியது. எல்லாம் ஒரு நிமிடம்தான்! விழிநீரைத் துடைத்துக்கொண்டார். மரம் சாய்ந்தபோது மன உறுதி தளராத தாம் கனி விழுந்தபோது கலங்குவதா எனத் தன்னைத் தானே தேற்றிக்கொண்டார். "எல்லாம் இறை நாட்டம். அன்னை கைவிலங்கு அறுக்காமல் சொந்த வாழ்வுச் சுகதுக்கத்தில் பங்கு கொள்ளமாட்டேன்" என்று கூறி மண்ணுக்குள் மறையப் போகும் மகளின் முகம் காண மறுத்துவிட்டார்.

தொகுப்பு: ஏக்ஜி




ஐந்தாம் அத்தியாயம்

## செல்லப் பிள்ளை

பொன்னி நதி தன் பல்லாயிரம் கைகளாலும் வளப்படுத்திப் பொன் கொழிக்கச் செய்யும் கீழைச் சோழ நாட்டில் செங்காட்டங்குடி என்ற கிராமம் செழித்து விளங்கிற்று. இந்தக் கிராமத்தில் மாமாத்திரர் என்று பட்டம் பெற்ற பழங்குடியில் பிறந்த பிள்ளை பரஞ்சோதி, சோழநாடு முழுதும் உறையூர்ச் சோழ மன்னர்களின் ஆட்சியின் கீழ் இருந்த பழைய காலத்தில் பரஞ்சோதியின் மூதாதைகள் இராஜ சேவையில் ஈடுபட்டுப் படைத் தலைவர்களாயிருந்தார்கள். சோழ வம்சம் பழம் பெருமை இழந்து, பல்லவர் ஆட்சி ஓங்கியபோது மாமாத்திரர் குலமும் அதன் சிறப்பை இழந்தது. சென்ற சில தலைமுறைகளாக மாமாத்திரர் போர்த் தொழிலையும் எல்லைக் காவல் தொழிலையும் கைவிட்டு விவசாயத் தொழிலை மேற்கொண்டிருந்தார்கள்.

இத்தகைய குலத்தில் பிறந்த பரஞ்சோதி, குழந்தைப் பிராயத்திலேயே, தந்தையை இழந்து, தாயாரின் செல்லப் பிள்ளையாக வளர்ந்து வந்தான். 'முரடன்', 'பொல்லாதவன்' என்று அக்கம் பக்கங்களில் பெயர் வாங்கினான். சண்டை என்பது அவனுக்குச் சர்க்கரையும் பாலுமாக இருந்

அமரர் கல்கி

தது. போர்த் தொழிலுக்குரிய சாதனங்களில் இயற்கையாக அவன் புத்தி சென்றது. வீராதி வீரர்களென்று புகழ் பெற்ற அவனுடைய மூதாதைகளின் வீர இரத்தம் பரஞ்சோதியின் தேகத்தில் அலை மோதிக் கொண்டு ஓடியது. கழி விளையாட்டு, கத்தி விளையாட்டு, மல்யுத்தம், வேல் எறிதல் ஆகியவற்றில் அவன் அதிவிரைவாகத் தேர்ச்சி பெற்றான்.

பரஞ்சோதியின் தாயார் வடிவழகி அம்மை தன் ஏக புத்திரனிடம் உயிரையே வைத்திருந்தாள். ஆனாலும், பரஞ்சோதியின் முரட்டுக் காரியங்கள் அவளுக்குப் பெரிதும் கவலையை அளித்தன. அந்த மூதாட்டி சிவ பக்திச் செல்வத்திலும் கலைச் செல்வத்திலும் சிறந்த குடும்பத்திலே பிறந்தவள். அவளுடைய தமையனார் திருவெண்காட்டுப் பதியில் புகழுடன் வசித்த மருத்துவர். சிவநேசச் செல்வர். தெய்வத் தமிழ் மொழியை நன்கு பயின்றிருந்ததோடு வடமொழியிலும் அவர் புலமை பெற்று விளங்கினார். வைத்தியக் கலையில் தேர்ச்சி பெற்று நோய் தீர்ப்பதில் வல்லவராய் இருந்தார்.

அந்தச் சிவபக்தரின் மூத்த பெண்ணுக்கு உமையாள் என்று பெயர். அழகிலும் குணத்திலும் அவள் இணையற்று விளங்கியது போலக் கல்வியிலும் சிவபக்தியிலும் சிறந்து விளங்கினாள்.

இந்தத் திருவெண்காட்டுப் பெண்ணைத் தன் மகனுக்கு மணம் முடித்து வைக்க வேண்டுமென்று பரஞ்சோதியின் அன்னை அந்தரங்கத்தில் ஆசை கொண்டிருந்தாள். ஆனால், அது நிறைவேறுமா என்ற சந்தேகமும் கவலையும் அவளுடைய மனத்தில் குடி கொண்டிருந்தன. பல துறைகளிலும் புலமை மிகுந்த அவளுடைய தமையனார் இந்த முரட்டுப் பிள்ளைக்குத் தம் அருமைப் பெண்ணைக் கொடுப்பாரா?

பரஞ்சோதியைக் கல்வி கேள்விகளில் வல்லவனாக்க அவனுடைய தாயார் எவ்வளவோ பிரயத்தனம் செய்தாள். ஆனால், பரஞ்சோதிக்குக் கல்வி கற்பிக்க முயன்ற அண்ணாவிகள் எல்லாரும் தோல்வியே அடைந்தனர். அவர்களில் ஒருவராவது அதிக காலம் நீடித்து அந்த முயற்சியைச் செய்யவில்லை. ஒவ்வொருவரும் சில காலம் முயன்று பார்த்தபிறகு, அந்த மூதாட்டியிடம் வந்து, "அம்மா! உங்கள் புதல்வன் வெகு புத்திசாலி; ஏகசந்தக்கிராஹி என்றே சொல்லலாம். எந்த விஷயத்தையும் கவனம் செலுத்தி ஒரு தடவை கேட்டால் போதும்; உடனே தெரிந்துகொள்கிறான். ஆனால், அந்த ஒரு தடவை அவனைக் கவனித்துக் கேட்கும்படி செய்வதற்குள்ளே எங்கள் பிராணன் போய் விடுகிறது. அவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் சக்தி எங்களுக்கு இல்லை" என்று சொல்லி விட்டுப் போனார்கள்.

இரண்டொரு அண்ணாவிமார் பரஞ்சோதி விஷயத்தில் தண்ட உபாயத்தைக் கையாளப் பார்த்தார்கள். அதன் பயனாக அவர்கள் அவனுடைய தாயாரிடம் சொல்லிக் கொள்ளாமலே ஊரை விட்டுப் போகும்படி நேர்ந்துவிட்டது!

இதனாலெல்லாம் பரஞ்சோதியின் தாய் மிகவும் கவலை கொண்டிருந்தாள். ஒரு வருஷம் பொங்கல் பண்டிகைக்காகப் பரஞ்சோதியும் வடிவழகி அம்மையும் திருவெண்காட்டுக்குப் போயிருந்தார்கள்.

அங்கே பரஞ்சோதி உமையாளைப் பார்த்தான். உமையாளின் கலியாணத்தைப் பற்றிப் பேச்சு நடப்பதைக் கேட்டான். தன் மாமனும் தாயாரும் தன்னைப் பற்றி வருத்தத்துடனும் கவலையுடனும் பேசிக் கொண்டிருந்ததும் அவன் காதில் விழுந்தது. எல்லாவற்றையும் சேர்த்து, நிலைமையை ஒருவாறு தெரிந்து கொண்டான்.

அவர்கள் திருவெண்காட்டிலிருந்து திரும்பித் திருச்செங்காட்டங்குடிக்கு வந்த பிறகு, ஒருநாள் பரஞ்சோதியின் தாயார் தரையில் படுத்த வண்ணம் கண்ணீர் உகுத்துக்கொண்டிருந்தாள். எங்கேயோ வெளியே போய் விட்டு வந்த பரஞ்சோதி இதைப் பார்த்து, தாயாரின் அருகில் வந்து உட்கார்ந்துகொண்டான். அன்னை எதற்காக அழுகிறாள் என்று அவன் கேட்கவில்லை. அவளுக்குச் சமாதானமும் சொல்லவில்லை.

''அம்மா! நான் ஒன்று சொல்கிறேன்; நீ அதற்குத் தடை சொல்லக் கூடாது'' என்றான்.

அன்னை கண்ணீரைத் துடைத்துக்கொண்டு ''என்னடா, என் கண்ணே!'' என்றாள்.

''நான் காஞ்சி மாநகருக்குப் போகப் போகிறேன்'' என்று பரஞ்சோதி சொன்னதும், திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள்.

''எதற்காக?'' என்று கேட்டாள்.

''கல்வி கற்பதற்காகத்தான், அம்மா! இத்தனை நாளும் நான் கல்வி கற்காமல் வாணாளை வீணாய்க் கழித்துவிட்டதை நினைத்தால் வருத்தமாயிருக்கிறது!'' என்றான் பரஞ்சோதி.

தாயாருக்கு ஆனந்தக் கண்ணீரும் துக்கக் கண்ணீரும் சேர்ந்தாற் போல் கண்களில் துளித்தன.

''கல்வி கற்பதற்குக் காஞ்சிக்குப் போவானேன். இங்கேயே படிக்கக் கூடாதா, குழந்தாய்?'' என்றாள்.

''இந்த ஊரில் இருக்கும்வரையில் எனக்குப் படிப்பு வராது; நல்ல கல்விப் பயிற்சி பெற வேண்டுமென்றால், காஞ்சி மாநகருக்குத்தான் போக வேண்டுமென்று எல்லோரும் சொல்கிறார்கள். இந்தப் பரத கண்டத்திலேயே காஞ்சியில் உள்ளவை போன்ற கல்லூரிகளும் கலைக்கூடங்களும் வேறெங்கும் இல்லையாம். நான் எல்லாம் விசாரித்துத் தெரிந்து கொண்டேன் அம்மா!'' என்றான் பரஞ்சோதி.

பரஞ்சோதி கூறியது உண்மைதான். அந்த நாளில் காஞ்சி மாநகரமானது கலைமகளுக்கு உறைவிடமாயிருந்தது. வடமொழிக் கல்வி அளித்த வேத கடிகைகளும், தமிழ்க் கல்வி பயில்வித்த திருமடங்களும், பௌத்தர்களின் மதபோதனைக் கல்லூரிகளும், சமண சமயப் பள்ளிகளும் காஞ்சியில் நிறைந்திருந்தன. இன்னும் சித்திரம், சிற்பம், சங்கீதம் ஆகிய அருங் கலைகளைப் பயில்வதற்குச் சிறந்த கலைக் கழகங்களும் இருந்தன.

இவற்றையெல்லாம் விட காஞ்சி மாநகருக்குப் பெருஞ்சிறப்பு அளித்துத் தமிழகமெங்கும் பெருங்கிளர்ச்சி உண்டாக்கிய சம்பவம் ஒன்று சில காலத்துக்கு முன்பு நிகழ்ந்திருந்தது. அந்தச் சம்பவம் மகா வீரரும் மகா புத்திமானும் சகலகலா வல்லவருமான மகேந்திர வர்ம சக்கரவர்த்தி, திருநாவுக்கரசரின் மகிமையினால் சமண மதத்தைத் துறந்து சிவநேசச் செல்வரானதுதான்.

மருள் நீக்கியார் என்னும் இயற் பெயர் கொண்ட நாவுக்கரசர் சில காலம் தர்மசேனர் என்ற பெயருடன் சமண சமய போதகர்களில்

புகழ் பெற்றவராய் விளங்கினார். பின்னர், அவருடைய சகோதரி திலகவதியாரின் சிவபக்தி காரணமாக அவர் சமண மதத்தைத் துறந்து சிவனடியாரானார். அது முதல், தேனினும் இனிய தமிழ் மொழியில் சிவபக்தி ததும்பும் பண்களையும் தாண்டகங்களையும் அமுத வெள்ளமாகப் பொழிந்து வந்தார். அந்தத் தெய்வீகப் பாடல்களின் மகிமையில் ஈடுபட்ட மகேந்திர சக்கரவர்த்தியானவர், 'நான் நாட்டுக்கரசன்; தாங்கள் நாவுக்கரசர்' என்று மருள் நீக்கியாரைப் போற்றியதோடு, சமண மதத்தையே துறந்து சிவநேசராகி விட்டார். இந்த வரலாறு தமிழகமெங்கும் பரவியிருந்தது. மேற்கூறிய அதிசயங்களைப் பற்றியே இந்தக் காலத்தில் எங்கெங்கும் வியப்புடன் ஜனங்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். மகேந்திர சக்கரவர்த்தியினது வேண்டுகோளின் பேரில் நாவுக்கரசர் காஞ்சியில் திருமடம் ஸ்தாபித்திருக்கிறார் என்றும், அந்த மடத்தில் தெய்வத் தமிழ்மொழியும், தெய்வீக இசைப் பாடல்களும் கற்பிக்கப்படுகின்றன என்றும் நாடெங்கும் பிரசித்தமாகியிருந்தன. இந்தச் செய்திகள் எல்லாம் பரஞ்சோதியின் காதிலும் விழுந்திருந்தபடியால்தான், 'கல்வி கற்கக் காஞ்சிக்குப் போகிறேன்' என்று அவன் தாயாரிடம் கூறினான்.

ஏக புதல்வனைப் பிரிந்திருக்க வேண்டுமென்பதை நினைத்து வடிவழகி அம்மை பெரும் வேதனையை அடைந்த போதிலும், 'கல்வி கற்கப் போகிறேன்' என்று பரஞ்சோதி கூறியது அவனுக்கு ஒரு பக்கத்தில் அளவில்லாத மகிழ்ச்சியையும் அளித்தது. தாயாரின் சம்மதத்தைத் தெரிந்து கொண்டதும் பரஞ்சோதி, "அம்மா! நீ மாமாவிடம் சொல்லி நான் கல்வி கற்றுத் திரும்பி வரும்வரையில் உமையாளுக்குக் கலியாணம் செய்யாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்" என்று கூறியபோது, மகனுடைய மனநிலையை அறிந்து கொண்டு அன்னை மீண்டும் ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

பரஞ்சோதியின் தீர்மானத்தை அறிந்து அவனுடைய மாமனும் அளவற்ற மகிழ்ச்சியடைந்தார். அந்தச் சிவபக்தர் திருநாவுக்கரசரைத் தரிசித்து அவருடன் நட்புரிமை பூண்டவராதலால் நாவுக்கரசருக்கு ஓலை எழுதித் தருவதாகச் சொன்னார். தமிழ்க் கல்வியோடு ஏதேனும் ஒரு கலையும் அவன் கற்று வர வேண்டுமென்றும் இதன் பொருட்டுத் தம்முடைய பழைய சிநேகிதரான ஆயனருக்கு ஓலை தருவதாகவும் கூறினார். பரஞ்சோதியின் மனநிலையை அறிந்துகொண்டு அவன் கல்வி பயின்று திரும்பியதும் உமையாளை அவனுக்கே மணம் செய்து தருவதாகவும் உறுதி கூறினார்.

நல்லநாள், நல்ல வேளையில் பரஞ்சோதி அன்னையிடமும் மாமனியிடமும் ஆசி பெற்று, மற்ற எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு காஞ்சி மாநகருக்குப் புறப்பட்டான்.

புறப்படும்போது, கடைசியாக அவனுடைய மாமன் கூறிய புத்திமதி என்னவென்றால், "அப்பா, பரஞ்சோதி! தூர வழி போகும்போது கையில் வேலுடன் நீ புறப்படுவது நியாயந்தான். ஆனால் வழிப்பிரயாணத்துக்கு மட்டும் வேலைத் துணையாக வைத்துக் கொள். காஞ்சி மாநகரை அடைந்ததும் வேலைத் தலையைச் சுற்றி வீசி எறிந்துவிடு. அப்புறம் கல்வி கற்பதிலேயே முழுக் கவனத்தையும் செலுத்து" என்பதுதான்.

ஆறாம் அத்தியாயம்

## மர்மக் கயிறு

சிறைக் கூடத்தின் இருள் சூழ்ந்த அறைக்குள்ளே கோரைப் பாயில் தன்னந் தனியாகப் படுத்திருந்த பரஞ்சோதிக்கு மேற்கூறிய மாமனுடைய புத்திமதி நினைவுக்கு வந்தது. காஞ்சி மாநகரை அடைந்ததும் மாமனுடைய புத்திமதியின் பிரகாரம் அவன் வேலை வீசி எறியத்தான் செய்தான்! ஆனால், அந்தப் பொல்லாத வேல் மதங்கொண்ட யானையின் மீது விழுந்து தொலைந்தது! அதனுடைய பலன்தான் தன்னைச் சிறையிலே கொண்டு வந்து சேர்த்தது என்பதை எண்ணியபோது பரஞ்சோதிக்குச் சிரிப்பு வந்தது.

காஞ்சி மாநகர் சேர்ந்த முதல்நாள் இரவைத் தான் சிறைச் சாலையில் கழிக்க வேண்டியிருந்தது என்பதை அவனுடைய தாயும் மாமனும் அறிந்தால் என்ன நினைப்பார்கள்? தான் காஞ்சிக்குப் புறப்பட்ட சமயத்தில், வீட்டுச் சுவருக்கு அப்பால் தனியாக நின்று கனிவும், கண்ணீரும் ததும்பிய கண்களினால் விடை கொடுத்த உமையாளுக்குத்தான் என்னமாயிருக்கும்?

காஞ்சியில் தமிழ்க் கல்வியும் சிற்பக் கலையும் கற்றுக்கொண்டு திரும்பி ஊருக்குப் போனதும், இந்த முதல் நாள் சம்பவத்தைச் சொன்னால், அவர்கள் ஒருவேளை நம்ப மறுத்தாலும் மறுக்கலாம். இன்று மத்தியானம் தன்னிடமே யாராவது, இப்படியெல்லாம் நடக்கும் என்று சொல்லியிருந்தால் நம்பியிருக்க முடியுமா?

சட்டென்று பரஞ்சோதிக்கு ஒரு விஷயம் நினைவு வந்தது. அந்த புத்த சந்நியாசி என்ன சொன்னார்? இன்று இரவு உனக்கு ஒரு கஷ்டம் வரும் என்று சொன்னாரல்லவா? அது உண்மையாகி விட்டதே? உண்மையிலேயே அவர் முக்காலமும் உணர்ந்த முனிவரா?

அன்று நண்பகலில் அந்தப் புத்த சந்நியாசியை அவன் சந்தித்த சம்பவத்தை நினைத்துக்கொண்டு பரஞ்சோதி தனக்குத் தானே நகைத்துக் கொண்டான். அந்தச் சம்பவம் பின் வருமாறு:

காலையெல்லாம் வழி நடந்த பிறகு, காஞ்சி நகர் இன்னும் ஒரு காத தூரத்தில்தான் இருக்கிறது என்று பரஞ்சோதி தெரிந்துகொண்டு சற்று இளைப்பாறிச் செல்லலாமென்று சாலை ஓரத்தில் ஒரு மரத்தடியில் படுத்துக்கொண்டான். அவனுடைய தலைமாட்டில் மூட்டையும் அவன் பக்கத்தில் வேலாயுதமும் கிடந்தன.

சிறிது நேரத்துக்கெல்லாம் சாலையோடு ஒரு புத்த சந்நியாசி வருவதை அவன் பார்த்தான். புத்தர்கள் அல்லது சமணர்களுடைய கூட்டுறவு கூடாதென்றும், அவர்களைக் கண்டால் தூர விலகிப் போய்விட வேண்டுமென்றும் அவனுடைய மாமனும் அன்னையும் மிகவும் வற்புறுத்திக் கூறியிருந்தார்கள்.

எனவே, தூரத்தில் புத்த சந்நியாசியைக் கண்டதும் பரஞ்சோதி கண்களை மூடிக்கொண்டான். அவர் தன்னைத் தாண்டிச் சாலையோடு தொலைதூரம் போகும்வரையில் தூங்குவதுபோல் பாசாங்கு செய்ய அவன் தீர்மானித்திருந்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் தனக்கு அருகில் வந்து யாரோ நிற்பது போலவும் தன்னை உற்றுப் பார்ப்பது போலவும் அவனுக்குத் தோன்றியது. மெது



வாகக் கண்களைத் திறந்து பார்த்தான்.

பரஞ்சோதி அஞ்சா நெஞ்சம் படைத்த வாலிபன் தான் ஆனாலும் கண்ணைத் திறந்ததும் எதிரில் கண்ட காட்சி அவனைத் துணுக்குறச் செய்தது.

புத்த சந்நியாசி அவனுக்கு அருகில் வந்து நின்று உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய முகத் தோற்றம் அவனுக்கு அச்சத்தை அளித்தது. அதைக் காட்டிலும் அவர் கையில் வாலைப் பிடித்துத் தலைகீழாகத் தொங்க விட்டுக் கொண்டிருந்த பாம்பு அதிக அருவருப்பையும் பயங்கரத்தையும் அளித்தது.

ஐந்து அடி நீளமுள்ள நாகசர்ப்பம் அது; ஆனால், உயிர் இல்லாதது! அதனுடைய உடலில் இரத்தம் கசிந்தது.

பரஞ்சோதி பரபரப்புடன் எழுந்து, ''அடிகளே! இது என்ன வேடிக்கை? எதற்காகச் செத்த பாம்பை கையில் பிடித்துக்கொண்டிருக்கிறீர்கள்? தூர எறியுங்கள்!'' என்றான்.

''பிள்ளாய்! இவ்வாறு காட்டுப் பிரதேசத்தில் தனியாகப்

படுத்து உறங்கலாமா? இத்தனை நேரம் இந்த நாக சர்ப்பம் உன்னைத் தீண்டியிருக்குமே? நல்ல சமயத்தில் நான் வந்து இதை அடித்தேனோ, நீ பிழைத்தாயோ?'' என்று சொல்லி விட்டு புத்த சந்நியாசி அந்தச் செத்த பாம்பைத் தூர எறிந்தார்.

பரஞ்சோதி தன் முகத்தில் தோன்றிய புன்சிரிப்பை மறைத்துக்கொண்டு, "அப்படியா அடிகளே! நான் ஒரு தாய்க்கு ஒரே பிள்ளை. என்னை நீங்கள் காப்பாற்றியதற்காக என் தாயார் தங்களுக்கு ரொம்பவும் நன்றி செலுத்துவாள்'' என்றான்.

பிறகு அவன் மூட்டையையும் வேலையும் எடுத்துக்கொண்டு எழுந்து நின்று, ''தங்கள் திருநாமம் என்னவோ? என் தாயாரிடம் எப்போதாவது தங்களைப் பற்றிச் சொல்ல நேர்ந்தால்...'' என்பதற்குப் பிக்ஷு குறுக்கிட்டு, "நாகநந்தி என்பார்கள். நீ எவ்விடத்துக்குச் செல்கிறாய், தம்பி?'' என்று கேட்டார்.

"காஞ்சிக்குப் போகிறேன்'' என்று பரஞ்சோதி கூறியதும், "நானும் அங்கே தான் போகிறேன்! வழித்துணை ஆயிற்று. வா, போகலாம்!'' என்றார் நாகநந்தி அடிகள்.

இருண்ட சிறையில் கோரைப் பாயில் படுத்திருந்த பரஞ்சோதி, 'அந்தப் புத்த பிக்ஷுவுக்கு நாகநந்தி என்பது எவ்வளவு பொருத்தமான பெயர்! அவர் முகத்தைப் பார்த்தாலே நாகப் பாம்பின் ஞாபகம் வருகிறது!''என்று எண்ணமிட்டான்.

நாகநந்தி அடிகள் வருங்காலத்தை ஞான திருஷ்டியினால் அறிந்துதான் சொன்னாரோ, அல்லது குருட்டாம் போக்காய்ச் சொன்னாரோ, அவருடைய ஜோசியத்தில் முற்பகுதி நிறைவேறிவிட்டது. தான் இப்போது ஒரு கஷ்டத்தில் அகப்பட்டுக்கொண்டிருப்பது உண்மைதான்; அவருடைய ஜோசியத்தின் இன்னொரு பகுதியும் நிறைவேறுமா? 'புத்த பகவான் அருளால் அந்தக் கஷ்டம் நீங்கும்!' என்று சொன்னது பலிக்குமா? ஆம்; பலிக்கத்தான் வேண்டும்.

உண்மையில் பரஞ்சோதி தன்னுடைய நிலைமையைக் குறித்து அதிகக் கவலைப்படவில்லை. ஏதோ தவறுதலினால் தன்னைச் சிறையில் அடைத்திருக்கிறார்கள் என்றும் உண்மை தெரியும்போது தன்னை நிச்சயம் விடுதலை செய்துவிடுவார்கள் என்றும் உறுதியாக நம்பினான்.

எனவே, இன்றிரவு நிம்மதியாய்த் தூங்குவதுதான் சரி. ஆனால், ஏன் தூக்கம் வரமாட்டேன் என்கிறது? ஓகோ! எல்லாம் இந்த ஒரு சாண் வயிறு செய்யும் காரியந்தான். இராத்திரி ஒன்றும் சாப்பிடவில்லையல்லவா? பசி வயிற்றைக் கிள்ளுகிறது! அதனால் தான் துக்கம் பிடிக்கவில்லை. நல்ல காஞ்சி நகரம்! நெடுந்தூரம் யாத்திரை செய்து வந்த அதிதிகளை இராப்பட்டினி போட்டுக் கொல்லுகிற இந்த நகரத்தைப் பற்றி என்னத்தைச் சொல்வது! காஞ்சி நகரை அணுகியபோது அந்தத் திகம்பர ஜைன முனிவர் எதிர்ப்பட்டார். அதன் பலன்தான் இன்றிரவு தனக்கு அன்னம் அபாவமாய்ப் போய் விட்டது போலும்...!

மேற்சொன்னவாறு பரஞ்சோதி சிந்தனை செய்து கொண்டிருக்கையில், அந்த அறையில் உண்டான ஒரு மாறுதல் அவனுடைய கவனத்தைச் சட்டென்று கவர்ந்தது. சற்றுமுன் வரையில் இருள் சூழ்ந்திருந்த அந்த அறையில் இப்போது கொஞ்சம் வெளிச்சம் காணப்பட்டது. இந்த மாறுதலுக்குக் காரணம் என்னவென்று அதிசயித்துப் பரஞ்சோதி மேலே பார்த்தான்; கூரையில் இருந்த சிறு துவாரத்தின் வழியாகச் சந்திர கிரணம் உள்ளே புகுந்து வந்ததுதான் என்று தெரிந்தது.

இத்தனை நேரம் இல்லாமல் இப்போது திடீரென்று மேற்படி துவாரம் எப்படி ஏற்பட்டது என்று ஒருகணம் பரஞ்சோதிக்கு வியப்பாயிருந்தது. "இல்லை, இல்லை! துவாரம் எப்போதும் இருந்திருக்க வேண்டும்; ஆனால், துவாரத்துக்கு நேராக இப்போதுதான் சந்திரன் வந்திருக்கிறது!" என்று தனக்குத்தானே சந்தேக நிவர்த்தி செய்துகொண்டான். ஆம்; பூரணச் சந்திரனுடைய மோகன நிலவானது வெளி உலகத்தையெல்லாம் அப்போது சொப்பன சௌந்தரிய லோகமாகச் செய்துகொண்டிருக்கிறது! – அந்த விஷயத்தைத் தனக்கு எடுத்துச் சொல்லித் தன்னுடைய வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதற்காகவே மேற்கூரைத் துவாரத்தின் வழியாக அந்தச் சந்திர கிரணம் உள்ளே புகுந்து வருகிறது போலும்...!

ஆகா! இது என்ன? உள்ளே வரும் நிலவு வெளிச்சம் இவ்வளவு அதிகமாகிவிட்டதே? துவாரம் பெரிதாகியிருப்பது போல் தோன்றுகிறதே? அடடே! முதலில் பார்த்தபோது ஒரு கைகூட நுழைய முடியாத சிறு துவாரமாயிருந்தது. இப்போது ஆள் நுழையக் கூடிய அளவு பெரிதாகிவிட்டதே! இது என்ன இந்திர ஜாலமா? அல்லது மகேந்திர ஜாலமா? மகேந்திர சக்கரவர்த்தியின் காஞ்சி மாநகரம் மாயா ஜால நகரமாயிருக்கிறதே!

ஐயையோ! இது என்ன பயங்கரம்...? பரஞ்சோதியின் மூச்சு ஒரு நிமிஷம் நின்று போய்விட்டது! மேற்கூரைத் துவாரத்தின் வழியாக நெளிந்து நெளிந்து கீழே வந்தது ஒரு நீளமான பாம்பு...! இல்லை, இல்லை! பாம்பு இல்லை...! அது வெறும் கயிறுதான்! சீ! இன்று மத்தியானம் அந்த புத்த பிக்ஷு செத்த பாம்புடன் வந்து தன்னைத் திடுக்கிடச் செய்தாலும் செய்தார்! கயிற்றைப் பார்த்தால் கூடப் பாம்பு மாதிரி தோன்றுகிறது.

மேற்கூரைத் துவாரத்தின் மர்மம் இப்போது புலப்பட்டது. யாரோ வேண்டுமென்றுதான் கூரையில் துவாரம் செய்திருக்கிறார்கள். அதன் வழியாகக் கயிற்றை உள்ளே விடுகிறார்கள்! – எதற்காக? வேறு எதற்காக இருக்கும்? – தன்னைத் தப்புவிப்பதற்காகத்தான்! ஆனால், முன்பின் தெரியாத இந்தப் பெரிய நகரில் தன்னிடம் அவ்வளவு சிரத்தை கொண்டிருப்பவர்கள் யார்? தான் அந்தச் சிறைச்சாலை அறையில் இருப்பது அவர்களுக்கு எப்படித் தெரிந்தது?

இதற்குள்ளாகக் கயிற்றின் முனை கீழே அவன் கைக்கு எட்டும் தூரத்துக்கு வந்துவிட்டது. இன்னும் கீழே வந்து தரையையும் தொட்டுவிட்டது. பிறகு, அந்தக் கயிறு இப்படியும் அப்படியும் அசையத் தொடங்கியது. மேலேயிருந்து கயிற்றை விட்டவர்கள் அதைக் குலுக்குகிறார்கள் என்பதில் சந்தேகமேயில்லை. எதற்காக? தன்னை அந்தக் கயிற்றின் வழியாக மேலே வரும்படி சமிக்ஞை செய்கிறார்களா? அப்படித்தான் இருக்க வேண்டும்.

அதிசயமான முறையில் வந்த அந்த உதவியைப் பெற்றுக் கொள்ளலாமா வேண்டாமா என்று பரஞ்சோதி ஒரு நிமிஷம் யோசனை செய்தான். அதனால் வேறு என்ன தொல்லைகள் விளையுமோ என்பதாக ஒரு பக்கம் அவனுக்கு யோசனையாயிருந்தது. இவ்வளவு சிரத்தை எடுத்துத் தன்னைக் காப்பாற்ற விரும்புகிறவர்கள் யார் என்று தெரிந்துகொள்ள ஒரு பக்கம் அவனுக்குப் பேராவல் உண்டாயிற்று. அதோடு, இன்னொரு முக்கிய காரணமும் சேர்ந்தது! அது அவனுடைய வயிற்றைக் கிள்ளிக் கொண்டிருந்த பசிதான்!

பரஞ்சோதி கயிற்றை அழுத்தமாய்ப் பிடித்து இழுத்தான். மேலே அது இறுக்க கட்டியிருக்கிறதென்று தெரிந்தது. தன்னுடைய பாரத்தை அது நன்றாய்த் தாங்கும் என்று நிச்சயமாயிற்று. உடனே கயிற்றின் வழியாக அவன் மேலே ஏறத் தொடங்கினான்.

(தொடரும்)

# 'நாயக்' அனில்கபூர்!





''எனக்கு எங்கே வாய்ப்புத் தேடி வந்தது? நான்தான் டைரக்டர் ஷங்கரைத் துரத்தித் துரத்தி, 'நாயக்' படத்தின் ஹீரோ வாய்ப்பைப் பிடுங்கிக்கொண்டேன்'' என்கிறார் அனில் கபூர்.

'நாயக்' படத்தில் நான் நடிப்பது முடிவான பின்னர் கூட, எனக்கு உள்ளூர சந்தேகம் இருந்துகொண்டுதான் இருந்தது. அவ்வப்போது, ஷங்கரின் உதவியாளருக்கு டெலிஃபோன் செய்து, 'ஷூட்டிங் தேதி முடிவாகி விட்டதா? லொக்கேஷன் எங்கே?' என்றெல்லாம் மறைமுகமாகக் கேட்டேன். காரணம், நான்தான் ஹீரோ என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளத்தான்!



''ஒரே படத்துக்காக, மகாராஷ்டிரா, தமிழ் நாடு, கர்நாடகா, ஆந்திரா, கேரளா, ராஜஸ்தான், இமாசலப் பிரதேசம் என்று ஏழு மாநிலங்களில் சுமார் நூறு லொக்கேஷன்களில் படம் பிடித்தது புதிய அனுபவம். ராஜஸ்தான் மாநிலம் பிக்கானிரில் கொளுத்தும் பாலைவன

வெயிலில் ஷூட்டிங். அதற்கு நேரெதிராக லடாக்கின் கடும் குளிரிலும் ஷூட்டிங் நடந்தது.

"'பந்த்' காட்சி தத்ரூபமாக இருக்க வேண்டும் என்பதற்காக, டைரக்டர் ஷங்கர், நூற்றுக்கணக்கான பல்வேறு வாகனங்களையும், ஆயிரம் துணை நடிக, நடிகையரையும் வரவழைத்து, பொதுமக்களுக்கு எந்தவித பாதிப்பும் இல்லாத ஒரு நிஜ பந்த்தையே நடத்திப் படம் பிடித்துவிட்டார். பிரும்மாண்டமான காட்சி அமைப்பு அது.

"நான் ரொம்ப ரிஸ்க் எடுத்து நடித்தது, வேகமாக ஓடுகிற டபுள் டெக்கர் டாப்பில் நின்றுக்கொண்டு போட்ட சண்டைக்காட்சிதான். டபுள் டெக்கர் பஸ் நல்ல உயரம். அது வேகமாக நகரும்போது அதன் மேற்புறத்தில், நிற்பதற்குப் பிடிமானம் இல்லாமல் தடுமாறிப் போனேன். 'அசம்பாவிதம் ஏதும் ஏற்பட்டு விடக் கூடாதே! படப்பிடிப்பு நல்லபடியாய் முடிய வேண்டுமே!' என்று டென்ஷனாக இருந்தது.

"எனக்கு பாடி பில்டர் போல கட்டுமஸ்தான உடல்வாகு இல்லை. எனவே, 'முதல்வன்' படத்தில் இடம் பெற்ற சேறு பூசின உடம்புடன் சண்டை போடும் காட்சியில் நடிக்க ரொம்பவும் சங்கடமாக உணர்ந்தேன். கடைசி ஷெட்யூலில்தான் அந்தச் சண்டைக் காட்சியை எடுக்கப் போவதாகச் சொன்னபோது, நிம்மதியாக இருந்தது. அந்தச் சண்டைக்காட்சி எடுப்பதற்கு ஒரு மாதம் முன்பிருந்தே பளு தூக்கும் பயிற்சி செய்ய ஆரம்பித்து, புஜங்களை வளர்த்துக்கொண்டேன். என் எடையே ஐந்து கிலோ வரை அதிகரித்துவிட்டது" என்று முஷ்டியை உயர்த்திக் காட்டிச் சிரித்தார்.

அனில் கபூர், இருபது வருடங்களுக்கு முன்பு, சென்னையில் வந்து ஓட்டலில் தங்கிக்கொண்டு, சினிமா சான்ஸ் தேடி, பல கம்பெனிகளின் படி ஏறி இறங்கியிருக்கிறார். இவருக்கு ஹீரோவாக நடிக்க முதல் வாய்ப்பு கிடைத்தது ஒரு தெலுங்கு படத்தில் தானாம். அடுத்த வாய்ப்பு கன்னடத்தில். அதனாலேயே சென்னை என்றால் பிடிக்குமாம்.

"தமிழ்ப் படத்தில் நடிப்பீர்களா அனில்?"

"நான் ரெடி! யாரும் கூப்பிட மாட்டேன் என்கிறார்களே!"

— எஸ். சந்திரமௌலி



## மௌனங்கள்...

ஒரு
மொட்டின் மௌனம்
மலராய்ச் சிரிக்கிறது!

ஒரு
மலையின் மௌனம்
எரிமலையாய் வெடிக்கிறது!

முகிலின் மௌனம்
இடிமழையாய்...
நர்த்தனமாடுகிறது!

ஒரு
ஞானியின் மௌனம்
சொல்லாமலே உணர்த்துகிறது

ஓ!
மௌனங்கள்
அற்பமானவை அல்ல!
அர்த்தமுள்ளவை!

— கருமலைப்பழம் நீ

தனக்குப் பிறந்த மூன்றாவது பெண் குழந்தையைக் 'கொலை' செய்த குற்றத்துக்காக, உசிலம்பட்டி வட்டாரத்தைச் சேர்ந்த கருப்பாயிக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது. வழக்கு நடைபெற்ற காலத்தில் மீண்டும் கருவுற்ற கருப்பாயி, சிறையில் நான்காவது பெண் குழந்தையைப் பெற்றெடுத்தார். ஜெயில் சூபரின்டன்டன்ட் அக்குழந்தைக்கு வைத்த பெயர் ப்ரியங்கா. நிபந்தனை ஜாமீனில் வெளி வந்துள்ள கருப்பாயியை சுற்றமும் நட்பும் 'குழந்தைக் கொலை யாளி' என்று முத்திரை குத்தி ஒதுக்கி வைத்துவிட்டன... இவ் வழக்கில் கருப்பாயிதான் குற்ற வாளியா...? கருப்பாயி மட் டும்தான் குற்றவாளியா..? கருத்துச் சொல்கிறார்கள் பெண்கள் முன் னேற்றத்தில் ஈடுபாடு கொண்டுள்ள சிலர் :



• கருப்பாயி, பிரியங்காவுடன்

# கருப்பாயி

**சரோஜினி வரதப்பன் :** 2001ம் ஆண்டை 'விமன்ஸ் எம்பவர்மெண்ட் இயர்' என கொண்டாடுகிறோம். பெண்கள் மேம்பாடு அது, இது என சொல்லிக் கொண்டே, இத்தகைய தீர்ப்பு வெளியாகியுள்ளது நியாயமேயில்லை.

பெண் சிசுக் கொலைக்கு முக்கிய கார ணம், வறுமையும் அறியாமையும்தான். அதை ஒழிப்பதற்கு அரசுத் திட்டங்கள் தேவை. குடும்பக் கட்டுப்பாடு திட்டம் தீவிரமாகணும். 'பெண்ணாகப் பிறப்பதே பாவம்' என்ற மனோபாவம் மாறணும். அதற்கு சமுதாயத்தில் ஆணாதிக்கமும், ஆண் உயர்வு மனப்பான் மையும் இருக்கும்வரை ஒன்றுமே செய்ய முடியாது.

'தாங்கள் ஆண்களுக்குச் சம மானவர்கள்; தங்களால் எதுவும் சாதிக்க முடியும்' என்ற மனோதிடத்தைப் பெண்கள் வளர்த்துக் கொண்டு, தனிப் பட்ட முறையில் மேம்பாடு அடைய வேண்டும்.

**வாசுகி :** வறுமைக்கு அஞ்சி கொல்லப்பட்டிருந்தாலும், அதை இதர கொலைக் குற்றங்களோடு இ.பி.கோ. 302 பிரிவில்தான் போடறாங்க.

உடன்கட்டை ஏறும் பழக்கமான 'சதி'யும் கொலைக் குற் றம்தான். ஆனால் அந்த சமூக அவலத்தின் பல பரி மாணங்களை உத்தேசித்து 'சதி தடுப்புத் திட்டம்' கொண்டு வந்து, ஒரு விசேஷ சட்டம் போட்டிருக்காங்க.

அதே போல, இதையும் ஒரு கொலையாக மட்டுமே கருதி, இ.பி.கோ. 302ல் தண்டிக்காமல், சமூக, கலாசார ஆணாதிக்க அம்சங்களைக் கணக்கில் கொண்டு, விசேஷ சட்டம் கொண்டுவரணும். இந்தச் சட்டத்தின்படி, தாயை மட்டுமல்லாது, அந்தக் கொலையை ஊக்குவிப் பவர்களை, நிர்ப்பந்திப்பவர் களை, குறிப்பாக குடும்பத் தில் உள்ள ஆண்களை, தண் டிக்கும் வகையில் அது அமைய வேண்டும். புதிய சட்டத்துக் கான விவா தம் துவங்க வேண்டும்.

'குடும் பத்தில் உள்ள எல் லாரையும் ஜெயிலில்



• சரோஜினி வரதப்பன்

# குற்றவாளியா?

அடைத்துவிட்டால் மற்ற குழந்தைகளி… தி என்னாகும்?' என சிலர் கேட்கக் கூடும். பீனல் செக்ஷனே இல்லைனு ஆயிட்டா அதுவும் சரியில்லையே!

என்னைப் பொறுத்தவரை, இந்தக் கொலைகளில் மீடியாவுக்குப் பங்குண்டு. பெண்ணைச் சுமையாக, சோக வடிவமாக, தியாக ரூபமாக மட்டுமே திரும்பத் திரும்பச் சித்திரிக்கும் மனோபாவம், கதை, டி.வி. தொடர், சினிமா, விளம்பரப் படம் என எல்லாவற்றிலும் இருக்கு. இது மாறினாலே நல்ல மாறுதல் ஏற்படும்.



• மைதிலி சிவராமன்



• ஷ்யாமா

**மைதிலி சிவராமன் :** பெண் சிசுக் கொலை வழக்கில் தீர்ப்பு வெளியான முதல் வழக்கு, மதுரை கருப்பாயி சம்பந்தப்பட்டது. இன்னும் பதினாறு பெண் சிசுக் கொலை வழக்குகள் நீதிமன்றத்தில் நடந்து கொண்டிருக்கின்றன. ஆறு ஆண்களும் குற்றவாளிகளாக நிறுத்தப்பட்டிருக்கிறார்கள்.

கருப்பாயிக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டிருப்பது 'சரி'ன்னோ 'தவறு'ன்னோ ஒரே வார்த்தையில் சொல்லிட முடியாது. ஆனா 'தவறு' என்கிற கட்சிக்குத்தான் நிறைய காரணம் இருக்கு. தான் பெண்ணாகப் பிறந்ததையே ஒரு தண்டனையாக நினைத்துக் கொண்டிருப்பவருக்கு, இந்தத் தீர்ப்பு மற்றும் ஒரு தண்டனைதான்.

'நீ பொட்டச்சி' என்று சொல்லிச் சொல்லியே வளர்க்கப்படுவதால், சுயமதிப்பற்றவளாக, இரண்டாம் தர மனுஷியாகத்தான் அந்தத் தாயார் வளர்ந்திருப்பாள். அவளுக்கும் பெண் பிறக்கும்போது, அதை அவள் பளுவாகத்தான் நினைக்கிறாள். 'சடங்கு செய்யணும்', 'சீர் செய்யணும்', 'கல்யாணம்' அது இது என்று சம்பிரதாயச் சீர்கேடுகள் இவளையும் அழுத்துமே என்பதால் அந்தக் கஷ்டமே வேண்டாம் என்று 'விடுதலை' தர நினைக்கிறாள்.

ஆகவே, கூண்டில் ஏற வேண்டியது கருப்பாயி மட்டுமல்ல, இந்தச் சமூகமும், அரசும்தான்.

**ஷ்யாமா :** இரண்டு குழந்தைகள் இருந்தும் 'ஆண் வாரிசு வேண்டும்' என்று தொடர்ந்து கருத்தரித்து, பிறக்கும் பெண் குழந்தைகளை மிகக் கொடூரமாகக் கொல்கிறார்கள். இதற்கு மாமியார் பிரச்னை, கணவன் தூண்டுதல், சமூக அமைப்பு என காரணங்கள் கூறி, தன்னார்வத் தொண்டர்கள் பரிந்து பேசினாலும், என்னைப் பொறுத்தவரை, இது மன்னிக்க முடியாத செயல்தான்.



• வாசுகி

ஆங்கிலேயர் காலத்தில் 'ஜோனாதன் டங்கன்' என்ற குடும்ப நல அதிகாரி, கார்ன் வாலிஸ் பிரபுவிடம் வட மாநிலங்களில் நிகழ்ந்த பெண் சிசுக் கொலை சம்பந்தப்பட்ட அறிக்கையைத் தந்த விவரம் வரலாற்றில் பதிவாகியிருக்கிறது.

பெண் சிசுக் கொலை செய்தவருக்கும், தூண்டியவருக்கும் கடுந்தண்டனை, ஊர் மக்களால் அந்தக் குடும்பமே விலக்கி வைக்கப்படுவது, தண்ணீர், உணவுகூட தராமல் ஒதுக்கி வைப்பது போன்ற நடவடிக்கைகளால், பெண் சிசுக் கொலைகள் கணிசமாகக் குறைந்ததாகவும், 'டங்கன்' இங்கிலாந்துப் புறப்பட்டுப் போனபோது, முப்பத்து இரண்டு பெண் குழந்தைகள் அவரை 'அப்பா' என அழைத்து, அன்பு பாராட்டிய செய்தியும் இருக்கிறது.

சிறைத் தண்டனை, ஊர் மக்களால் தனிமைப்படுத்தப்படுவது போன்ற நடவடிக்கைகளால்தான் இந்தக் கொடூரத்தைக் குறைக்க முடியும்.

தொகுப்பு : **மைத்ரேயி**



'சரவண பவன்' ஹோட்டல்களின் வெற்றியைக் காண்பதற்கு முன் அதன் அதிபர் ராஜகோபால் பல தோல்விகளைச் சுவைக்க வேண்டியிருந்தது.... அவற்றைக் கண்டு அவர் பின் வாங்கியிருந்தால், இன்று 'மினி இட்லியும்' 'டிரை ஃப்ரூட் ரவா தோசையும்' சென்னைக்கு மணம் சேர்த்துக் கொண்டிருக்குமா...?

'புன்னையடி' என்னும் குக்கிராமத்தில் மிக எளிய குடும்பத்தில் பிறந்தவன் நான். படிப்பு ஏழாம் கிளாஸ் வரை மட்டுமே! சின்ன சின்ன கடைகளில் வேலை பார்த்து, தொழில் கற்றுக்கொண்டேன். "நாமும் சின்னதாய்த் தொழில் தொடங்கலாமே!" என்ற ஆசை வந்தபோது எனக்கு வயது 21. கடுமையான உழைப்பு, நாணயம், நயமான பேச்சு, தொழில் ஈடுபாடு தவிர எனக்கென்று எந்த சொத்தும் இருக்கவில்லை.

கோடம்பாக்கம் புதூரில் மளிகைக் கடை தொடங்க மூவாயிரம் ரூபாய் இல்லாமல் தடுமாறிக் கொண்டிருந்தபோது, எங்கள் நிலத்தை அடமானம் வைத்துப் பணம் அனுப்பி வைத்தார் அப்பா.

எனது வியாபாரத்துக்கான ஆரம்ப கட்ட முதலீடு இதுதான்.

சுமாரான சாப்பாடு, பிளாட்பாரத்தில் கோணிப்பைகளை விரித்து தூக்கம், நாள் முழுக்க கடைவேலை என்று வாழ்க்கை அமைந்தாலும், 'முன்னேற வேண்டும்' என்ற உத்வேகத்தில் எதுவுமே கஷ்டமாகத் தெரியவில்லை.

வடபழனி முருகன் அருளால் வியாபாரம் நாளுக்கு நாள் வளர்ந்ததில், நான்கே வருடங்களில் அசோக் நகரில் 'முருகன் ஸ்டோர்ஸ்' என்ற பேனரோடு, புதிய மளிகைக் கடையை ஆரம்பித்தேன்.

வடபழனி முருகன் கருணைப் பார்வை என் மீது பட்டதால், நான் தொட்டதெல்லாம் பொன்னானது. இந்தக் கடையிலும் வியாபாரம் கொழித்தது. அந்தசமயத்தில்தான், 'இந்த ஏரியாவில் நல்ல ஓட்டலே இல்லையே... ஓட்டல் பிஸினெஸ் ஆரம்பித்தால் என்ன?' என்ற எண்ணம் வலுப்பெற்றது. கே.கே நகரில், ஓர் இடம் பார்த்து, சொந்தமாக கட்டடம் கட்டி, ஓட்டல் ஆரம்பிக்கும் எண்ணத்துடன் முயற்சிகள் தொடங்கினேன்.



ஏதோ ஒரு தைரியத்தில் இந்தத் திட்டத்தில் கால் வைத்துவிட்டாலும், அப்போது என்னிடம் இருந்தது ஒரு லட்சம் ரூபாய்தான்! ஆனால் எண்ணியபடி, கட்டடம் கட்டி முடிக்க நான்கு லட்சம் ரூபாய் தேவை! மீதி பணத்துக்கு என்ன செய்யலாம் என்று தவித்துக் கொண்டிருந்தபோது, நண்பர் ராமானுஜம், தாமே முன் வந்து தம் வீட்டுப் பத்திரத்தைக் கொடுத்தார்! அந்தப் பத்திரத்தை

அந்தக் கட்டடம் கட்ட, ஒரு பகுதி முதலீட்டை 'முருகன் ஸ்டோர்ஸ்' கடைகளிலிருந்து எடுத்ததால், இப்போது கடைகளின் வியாபாரம் பாதிக்கப்பட்டது. கட்டடம் மூலம் வந்த வாடகைப் பணம், வங்கியில் வாங்கிய கடனுக்கு வட்டி கட்டவே சரியாக இருந்தது. மற்ற கடன்களுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. தினமும் ஐயாயிரம் ரூபாய்க்குமேல் வியாபாரம் நடந்த 'முருகன் ஸ்டோர்ஸ்' கடைகளில் ஐந்நூறு ரூபாய்க்குக் கூட வியாபாரமில்லை. கொடுக்கல் வாங்கலில் இதுநாள் வரை காப்பாற்றி வந்த நாணயம் காணாமல் போனது. இதனால் கடைக்குச் சரக்கு தர யாரும் முன் வரவில்லை. மெள்ள, மெள்ள வாடிக்கையாளர்களை இழந்தோம்.

வீட்டில் சாப்பாட்டுக்கே கஷ்டமானது. அப்போது என் மனைவி, என் உறவினரின் கடைக்கு ஆள் அனுப்பி அரிசி வாங்கி வரச் சொல்லியிருக்கிறாள். அவரோ, "பழைய கடனை அடைத்தால்தான் அரிசி தருவேன்'' என்று திருப்பி அனுப்பி விட்டாராம்!

நான் வீட்டுக்குப் போனதும் என்னிடம் இதைச் சொல்லிச் சொல்லி அழுதாள் என் மனைவி. எதற்கும் கலங்காத எனக்கே 'நமக்கா இந்த நிலைமை!' என்று கண்ணீர் வந்து விட்டது.

"எதற்கும் கலங்காத எனக்கே 'நமக்கா இந்த நிலைமை!' என்று கண்ணீர் வந்து விட்டது."

'இத்தனை நாள் பட்ட கஷ்டமெல்லாம் பாழாகிவிட்டதோ' என்று வருத்தம். ஒவ்வொரு படிக்கட்டாக ஏறி வந்து, கடைசியில் ஒரேயடியாகச் சறுக்கி விழுந்தது போன்ற ஓர் உணர்வு!

வாழ்க்கையே இருட்டுக் கட்டி நின்றது. பெரிய அளவில் முன்னேற வேண்டும் என்று ஆசைப்பட்டு, இருக்கிற மளிகைக் கடை வியாபாரத்தையும் கெடுத்துக் கொண்டோமே எனத் தவித்தேன். எனக்கு அப்போதைக்குத் தோன்றிய ஒரே முடிவு கட்டடத்தையே விற்று விடுவது என்பது தான்.

'முருகன் ஸ்டோர்ஸ்' கடைகள் பக்கம் போவதைக் கூட நிறுத்திவிட்டேன். கடை நிறைய சரக்கோடு, நல்ல வியாபாரம் நடந்த கடைகள், வெற்றுக் கடைகளாகிப் போனதைப் பார்க்க எனக்கு சகிக்கவில்லை. மீண்டும் சரக்குகள் நிறைந்த கடையாக மாற்றிவிட்டுத்தான் கடைக்குள் நுழைவது என்று சபதமே எடுத்தேன்.

கிட்டத்தட்ட நான்கு மாதங்கள். தம்பிகள்தான் கடைகளைப் பார்த்துக்கொண்டார்கள். இந்த நான்கு மாதங்களும் நான் உள்ளத்தால் ரொம்பவே பாதிக்கப்பட்டிருந்தேன். குழப்பம், கடன் தொல்லை, இயலாமை என நொந்துபோயிருந்தேன்.

ஒவ்வொரு கிருத்திகை அன்றும் திருத்தணி முருகன் கோவிலுக்குச் சென்று வருவது என் வாடிக்கை. இந்த நான்கு மாதங்களில் தம்பிகளிடம் காசு கேட்கக் கூச்சப்பட்டுக் கொண்டு, திருத்தணி போகக் கூட முடியாமல் சிரமப்பட்டேன்.

கட்டடத்தை வாங்க சரியான நபர் இல்லாமல் அலைந்துகொண்டிருந்த நாட்களை வர்ணிக்கவே முடியாது.

'இழந்த வெற்றியை மீட்டே ஆக வேண்டும்' என்ற உந்துதல் சக்தி மட்டும் என்னை இயக்கிக்கொண்டேயிருந்தது. அப்போது 'ரத்னா டிரான்ஸ்போர்ட்ஸ்' ரத்ன நாடார் அவர்கள் கட்டடத்தை வாங்க வந்தார்.

நான்பட்ட கஷ்டத்தையும், 'நான்கு மாத சபத'த்தையும் அறிந்து ரொம்பவே உணர்ச்சி வசப்பட்டார்.

"சரி... கட்டடம் விலை பேசியாச்சு... நாளைக்கே பணம் கொடுத்து விடலாமே'' என்றார்.

"நாளை வெள்ளிக்கிழமை ஆயிற்றே... பரவாயில்லையா?'' என்று அவரது அண்ணன் மகன் கேட்க...

''அதனாலென்ன? அவர் நல்லபடி முன்னுக்கு வரவேண்டும். வெள்ளிக்கிழமைன்னாலும் பரவாயில்லை. பணத்தைக் கொடுத்துடலாம்'' என்றார் ரத்ன நாடார்.

கட்டடத்தை விற்று வந்த பணத்தில்



வைத்துக் கடன் வாங்கினேன்.

கட்டட வேலை தொடங்கியது. ஐம்பது சதவிகிதப் பணிகள் கூட முடியாத நிலையில் ஒரு பெரிய உண்மையை உணர்ந்தேன். ஆமாம்... நாங்கள் போட்டிருந்த திட்டப்படி நான்கு லட்ச ரூபாயில் கூட வேலை முடியாது போலிருந்தது. சிறுபிள்ளைத்தனமாக இந்தக் கட்டடப் பணியில் கால் வைத்துவிட்டோமே என்று வருத்தப்பட்டேன். அப்போது பார்த்து சிமெண்ட் விலை ஏறியது. கட்டட வேலை தொடர்பான அத்தனை பொருட்களும் மிகப் பெரிய அளவில் விலை ஏறின.

எங்களுக்குப் பெருத்த அதிர்ச்சி. வேறு வழியே இல்லாமல் வீட்டு நகைகளை விற்றேன். அப்படியும் நிலைமை திருப்திகரமாக இல்லை.



''கட்டட வேலையை அப்படியே விட்டு விட்டால், வங்கிக் கடனையும் அடைக்க முடியாது, கட்டடத்தை யாருக்கும் வாடகைக்கு விடவும் முடியாது. அப்புறம் ரொம்ப சிக்கலாகிவிடும்'' என்றார் நண்பர் ராமானுஜம்.

# ''சறுக்கி' விழுந்தது எழுவதற்கே!''

ஏற்கெனவே வீட்டுப் பத்திரத்தைத் தந்தவர், இப்போது மனைவியின் நகைகளையும் தந்தார்.

அப்படியும் பணம் தேவைப்பட்டது. வேறு வழியில்லாமல், மளிகைக் கடையிலிருந்து பணம் எடுத்துப் பயன்படுத்த வேண்டியதாகப் போயிற்று.

ஒரு வழியாகக் கட்டடம் கட்டி முடித்தாயிற்று. 'திருச்செந்தூர் முருகன் இல்லம்' என்று பெயர் வைத்து, வாரியார் சுவாமிகள் திருக்கரங்களால் திறந்தும் வைக்கப்பட்டது.



பிரச்னை அதோடு முடியவில்லை.

'முருகன் ஸ்டோர்ஸ்' கடைகளை மேம்படுத்தினேன். நிறைய சரக்கு வாங்கி வியாபாரம் நடத்தினேன். ஓரளவுக்குச் சந்தோஷமான வாழ்க்கை திரும்பியது.

வங்கிக் கடன்களை அடைத்தாயிற்று. நகைகள் மீட்கப்பட்டன.

இப்போது 'காமாட்சிபவன்' ஓட்டலை வாங்கி நடத்தும் முயற்சிகளில் இறங்கினேன்.

''இப்போதுதான் பிரச்னைகளிலிருந்து கொஞ்சம் மீண்டு வந்திருக்கீங்க... இந்த நிலைமையில் நஷ்டத்தில் ஓடிக்கொண்டிருக்கும் காமாட்சி பவனை வாங்கி நடத்துவது 'ரிஸ்க்' ஆயிற்றே... அதுவும் உங்களுக்கு ஓட்டல் தொழிலில் அனுபவம் வேறு இல்லையே!'' என்று ரத்ன நாடார் அறிவுரை சொன்னார்.

ஆனால் நான் என் முடிவில் உறுதியாக இருந்தேன்.

''ஓட்டல் நடத்த வேண்டும் என்ற ஆசையில்தான் ஓட்டாண்டி ஆனேன். அதே ஓட்டல் துறையில் வெற்றி பெற்று, சாதித்துக் காட்டுவேன்'' என்றேன்.

அவ்வளவு நிச்சயமாக நான் சவால் விட்டதற்குக் காரணம், என் உழைப்பின் மீதும், வடபழனி முருகனின் அருளின் மீதும் எனக்கிருந்த பெரும் நம்பிக்கைதான்!

'காமாட்சிபவன்' வாங்கப்பட்டது. நிறைய மாறுதல்கள் செய்து, புதியதொரு ஓட்டலாக வடிவம் கொடுத்தேன்.

திருத்தணி முருகன் கோயில் பிரசாதத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருந்த சமயத்தில்தான் இந்த ஓட்டல் எண்ணம் உருவானது. உடனே மனசுக்குள் தங்க வேல் ஒன்று எழுந்து ஜொலி ஜொலிக்க... ஓட்டலுக்கான பெயரும் முடிவானது.

ஓட்டல் சரவணபவன்!

தொகுப்பு: **அனுராதா சேகர்**



''தலைவர் ஏன் வீட்டைச் சுத்தி அகழி வெட்டி முதலையெல்லாம் விட்டிருக்காரு?''

''நடு ராத்திரியிலே வீடு புகுந்து கைது செய்வதைத் தடுக்கத்தான்!''

— விருச்சிகன்



''என்ன... அந்த சாமியார் பின்னே இவ்வளவு கூட்டம். அவ்வளவு மகிமை வாய்ந்தவரா?''

''அதெல்லாம் இல்லை... அந்தக் கமண்டலம் நிறைய 'தண்ணி' வச்சருக்காராம்!''

— வாகையடி மூர்த்தி



''கண்டக்டர் ஏன் திடீர்னு மயக்கம் போட்டு விழுந்திட்டாரு?''

''யாரோ புது அஞ்சு ரூபாய் நோட்டைக் கொடுத்திட்டாங்களாம்!''

— புளியரை கணேசன்



# ஒன்றா நேரத்தில்

**மா**டிப் படிகள் ஏறி 'ராகவேந்திரா ஏஜன்ஸீஸ்' என்று பெயர்ப் பலகை தொங்கும் வாயிலைத் தாண்டி தன்னுடைய அலுவலகத்திற்குள் சாயி கிருஷ்ணா நுழைந்தான்.

"சாயி சார்! உங்களை, வந்தவுடன் பார்க்கும்படி மேனேஜர் சொன்னார்" என்றாள் மல்லிகா.

ஆபீஸ் இன்னமும் முழு இயக்கம் பெறவில்லை. இப்பொழுதுதான் ஒவ்வொருவரும் தங்கள் இருப்பிடங்களில் பதப்பட்டுக் கொண்டிருந்தனர். உள்ளே போன் அடிக்கும் ஒலி கேட்டது. காலை வெய்யில் கண்ணாடி ஜன்னல் வழியே பிரவேசித்துப் பரவியது.

'எதற்குக் காலையிலேயே கூப்பிடுகிறார்?' என்று எண்ணியபடி 'பிராஞ்ச் மேனேஜர்' என்று அடையாளம் காட்டிய அறைக் கதவைத் தட்டிவிட்டு உள்ளே நுழைந்தான் சாயி கிருஷ்ணா. வெளி வெப்பத்திற்கு அறையின் ஏ.ஸி இதமாக இருந்தது. பெரிய மேஜையின் பின்னால் உட்கார்ந்திருந்த வழுக்கைத் தலை மேனேஜர் சாரி, குனிந்து ஒரு கையால் எழுதியபடியே, போனில் பேசிக் கொண்டிருந்தார். அந்தக் கோலம் சாயிக்கு வேடிக்கையாக இருந்தது.

'சரி, ஆமாம், யெஸ்', என்ற வார்த்தைகள் மட்டும் அவரிடமிருந்து வருவதால், அவர் தம் மனைவியிடம் பேசிக் கொண்டிருக்க வேண்டும் என்று நினைத்தான் சாயி.

"சாயி கிருஷ்ணாவா? இதுதான் ஆபீஸ் வரும் நேரமா?"

'நேற்று இரவு பத்து மணி வரை வேலை செய்துவிட்டுச் சென்றவனுக்கு என்ன மாதிரி யான வரவேற்பு' என்று நினைத்த சாயி ஒன்றும் பேசவில்லை.

"அந்த இந்தியன் பிளாஸ்டிக் கம்பெனியின் தாஸை, நான் சரி செய்து விட்டேன். பம்ப் ஆர்டர் நமக்கே தருவதாக சொல்லி விட்டார். நீ என்ன செய்கிறாய் தெரியுமா? நேராக அந்தக் கம்பெனிக்கு காலையிலே போய், தாஸைப் பார்த்து சூட்டோடு சூடாக ஆர்டரை வாங்கிட்டு வந்துரு. இந்த மாத சேல்ஸ்ல காட்டி விடலாம்."

வெளியில் வந்த சாயியை ஹைதராபாத் வெயில் சுட்டது. வியர்வை வராத வெயில். உடம்பு சூடு அப்படியே இருக்கும். அந்த வெயிலிலும் சாலையில் போக்குவரத்தும் கடைகளில் கலகலப்பும் இருந்தன.

பைக்கில் உட்கார்ந்தபடியே உதைத்து

எறையூர் மணி

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி—
ரூ. 2000/- மூன்றாம் பரிசு பெறும் கதை

அதைக் கிளப்பிய சாயி, சிக்கலான சாலைகளைக் கடந்து 'ஜ'டி மெட்டலாவிலிருந்த 'இந்தியா பிளாஸ்டிக்' தொழிற்சாலையை அடைந்தான்

**தொ**ழிற்சாலையின் முகப்பு லட்சணங்களாகிவிட்ட டீக்கடை, சிவப்புக் கொடி, போஸ்டர்கள், லாரிகள் அங்கும் தவறாமல் இருந்தன. தொழிற்சாலை கேட்டில் இருந்த காவல் பகுதியில் யாரைப் பார்க்க வேண்டும் என்று சொல்லி அடையாள காகிதம் பெற்றுக் கொண்டு உள்ளே சென்றான் சாயி.

வரவேற்புப் பகுதியில் இருந்த டெலிபோன் ஆபரேட்டரிடம் தன்னுடைய விஸிட்டிங் கார்டைக் கொடுத்து 'சரக்குப் பகுதி மானேஜர் தாஸ் என்பவரைப் பார்க்க வேண் டும்' என்று தெரிவித்தான்.

"உட்காருங்கள். தாஸ் கூப்பிடும்போது சொல்கிறேன்."

வரவேற்புப் பகுதியில் இருந்த நாற்காலிகளுள் ஒன்றில் உட்கார்ந்தான் சாயி. அவனைத் தவிர மூன்று பேர் இருந்தார்கள். மடிப்புக் கலையாத சட்டையும், டையுமாக அவர்கள் பதற்றத்துடன் இருந்ததால் 'எதாவது இன்டர்வியூ ஆக இருக்கும்' என்று எண்ணிய சாயி வேடிக்கைப் பார்த்தான்.

'இந்த இடத்திற்கு எழிலான பெண்தான் சரி. இந்த மீசைக்கார டெலிபோன் ஆபரேட்டர் பொருத்தமாக இல்லை. இவர்களுக்குச் சரியான பெண் கிடைக்கவில்லையா, அல்லது இன்று அவள் லீவா?'

சாயிக்கு வயிறு பசித்தது.

"சார்! உங்களைக் கூப்பிடுகிறார்" வரவேற்புக்காரர் அழைத்தார்.

வரிசையாக இருந்த புறாக் கூண்டு அறைகளில் 'எம். தாஸ்– பொருள் பகுதி மேனேஜர்' என்ற கதவைத் தட்டிவிட்டு உள்ளே சென்றான் சாயி. நடுத்தர வயது உள்ள ஒருவர், பட்டை மூக்குக் கண்ணாடியும், கட்டம் போட்ட சட்டையுமாக அமர்ந்திருந்தார். முன் வழுக்கையை மறைக்க அவர் செய்திருந்த முயற்சி பலிக்கவில்லை. அவர் முன் இருந்த மேஜையில் காகிதங்களும்,



பைல்களும் பரந்து கிடந்தன. பக்கத்து மேஜையில் இரண்டு டெலிபோன்கள், ஒரு கம்ப்யூட்டர், அதன் மேல் 'ஏசு காப்பாற்று வார்' என்ற ஸ்டிக்கர்.

நிற்கும் அவனைப் பார்த்து தாஸ் 'என்ன? என்ன வேண்டும்?' என்று கேட்டார்.

உட்காரக்கூட சொல்லாமல் அவர் பேசியது எரிச்சலைக் கொடுத்தாலும் அடக்கிக் கொண்டு தன்னுடைய விஸிட்டிங் கார்டை நீட்டினான் சாயி.

"நான் ராகவேந்திரா ஏஜென்ஸியிலிருந்து வருகிறேன். ஏ.ஜி.எஸ்.பம்புகளுக்கு நாங்கள் ஆந்திராவின் டீலர்கள். உங்களுக்கு கொட்டேஷன் கொடுத்து..."

போன் அடித்தது. தாஸ் போனை எடுத்து பேசத் தொடங்கினார். பேச்சும் சிரிப்புமாக அவர் பேசி முடிக்கும் வரை வெறுமனே நின்று கொண்டிருந்தவன், மறுபடியும் ஆரம்பித்தான்.

அப்பொழுது கதவைத் திறந்து கொண்டு அறைக்குள் வந்த ஒரு பெண், கையிலிருந்த காகிதங்களை, தாஸ் மேஜையில் வைத்து விட்டு வெளியேறினாள். அவள் அண்மையின் சில விநாடிகளில் பூ பவுடர் கலந்த பெண் வாசனையை அனுபவித்தான் சாயி.

தலையைத் தூக்கி அவனைப் பார்த்த தாஸ் 'சொல்லுங்கள்' என்றார். இடையிடையே வந்த போன்களை மீறி, தான் வந்த விஷயத்தைக் கஷ்டப்பட்டுச் சொன்னான். நின்று கொண்ட பேசுவது சங்கடமாக இருந்தது.

"எங்கள் மேனேஜர் சாரி, உங்களிடம் பேசியதாகச் சொன்னார். எல்லா விவரமும் இந்த பைலில் இருக்கிறது."

பேசிக் கொண்டிருந்த சாயிக்கு கையிலிருந்த பைல் திருவோடாகத் தோன்றியது. 'ஐயா! பிச்சை போடுங்கள் என்று மண்டியிட்டுக் கேட்பதுதான் பாக்கி' என்று எழுந்த எண்ணத்தை அழித்தான் அவன்.

"ஆமாம். சாரி என்னிடம் பேசினார். ஆர்டர் செய்யச் சொல்லிவிட்டேன். வெளியே கனகா என்று ஒரு பெண் இருப்பாள். அவளிடமிருந்து ஆர்டரை வாங்கிக் கொள்ளுங்கள்."

அடுத்த வார்த்தை பேசாமல் நன்றி சொல்லிவிட்டு வெளியில் வந்தான் சாயி,

"மன்னிக்கவும். மிஸ் கனகா, நீங்கள் தானே?"

வேலையை நிறுத்தாமல், அவன் பக்கம் திரும்பாமல் தலையை மட்டும் அசைத்தாள்

> ''சார்... பேப்பர் பணம்...?''
> ''எதிர் வீட்டுலதானே பேப்பர் வாங்கறாங்க...?''
> ''அவங்க வீட்டுக்குப் போடற பேப்பரை நீங்கதான் படிக்கிறீங்களாம்; அதனால உங்ககிட்ட வாங்கிக்கச் சொன்னாங்க!''
>
> — சீர்காழி ரேவதி

அவள். அறைக்குள் அவன் உணர்ந்த அதே பெண் வாசனை மீண்டும். ஆந்திர பெண்களுக்கே உரித்தான தட்டை முகமும், செழுமையான உடல் கட்டும், பழுப்பு நிறமும் அவளிடம் இருந்தன. சற்று அழகாகவே அவள் இருப்பதாகத் தோன்றியது.

"தாஸ் சார், உங்களைப் பார்த்து பம்ப் ஆர்டரை வாங்கிக் கொள்ளச் சொன்னார். நான், ராகவேந்திரா ஏஜன்ஸியிலிருந்து வருகிறேன்."

"முதல் தடவையாக நீங்கள் வருகிறீர்கள் இல்லையா? வழக்கமாக ஒரு பெரியவர் வருவார்."

"இனி நான்தான் வருவேன். அவரால் அலைய முடியவில்லை என்று ஆபீஸ் வேலையாகக் கொடுத்துவிட்டார்கள்."

"நீங்கள் வரவேற்புப் பகுதியில் உட்காருங்கள். கையெழுத்து ஆனவுடன் நானே கொண்டு வந்து கொடுக்கிறேன்."

அந்தப் பெண் கனகா பேசிக் கொண்டிருக்கும்போதே 'தடக்! தடக்' என்று நடந்து வந்த ஒருவர் அவள் எதிரில் வந்து நின்றார். அவர் தோரணையிலிருந்து பெரிய அதிகாரி என்று தெரிந்தது. எழுந்து நின்றாள் கனகா.

கையிலிருந்த காகிதக் கற்றையை, அவள் மேஜை மீது எறிந்து விட்டு...

"இந்த ஆர்டரை நீதான் தயார் செய்தாயா?"

பேச்சில் நெருப்புப் பொறி பறந்தது. அவர் எறிந்த காகிதங்களை எடுத்துப் பார்த்த கனகா தலையசைத்தாள்.

"என்ன முட்டாள்தனம் இது. ஸ்பெஸிஃபிகேஷன் எல்லாம் தப்பு. ஒரு லட்ச ரூபாய் மதிப்பான மெஷின் வந்திருக்கிறது. நமக்கு ஒரு பயனும் இல்லாமல். கேட்டால் ஆர்டர்படிதான் அனுப்பியிருக்கிறோம் என்று சொல்கிறார்கள். இந்த நஷ்டத்திற்கும் கஷ்டத்திற்கும் நீ தான் பொறுப்பு" இரைந்தார் அவர்.

கனகாவின் கண்களில் நீர் கட்டியது.



உதடு துடிப்பதை அழுத்திக் கடித்து நிறுத்தப் பார்த்தாள். எல்லோர் எதிரிலும் திட்டு வாங்கியதில் முகம் சிவந்தது.

"ஆர்டர் மட்டும்தான் சார் நான் தயாரித்தேன். டெக்னிகல் குறிப்புகள் எல்லாம் பொறியியல் பகுதியில்தான் கொடுத்தார்கள்."

அவள் மெல்லிய குரலில் சொல்லிக் கொண்டிருக்கும்போதே,

"இந்த சாக்கு எல்லாம் வேண்டாம். இந்த 'பக் பாசிங்' என்னிடம் நடக்காது. வேலையில் கவனமில்லாமல் ஏன் வேலைக்கு வருகிறீர்கள்? இப்படி வேலை செய்வதற்குப் பதில் எவனையாவது கல்யாணம் செய்து கொண்டு அவன் கழுத்தை அறுப்பது தானே?"

கனகா அழத் தொடங்கினாள். விம்மியதில் கண்ணீர் வழிந்தது.

"இது ஒரு கை வந்த ஆயுதம் உங்களுக்கு. செய்த தப்பைச் சொன்னால் உடனே அழுகை. இதற்கு நான் மசிய மாட்டேன். பர்சனலில் சொல்லி உனக்கு மெமோ கொடுக்கிறேன் பார்."

இதுவரை நடப்பதைக் கவனித்துக் கொண்டிருந்த சாயிக்குக் கோபம் கண்ணை மறைத்தது. இரண்டு எட்டு எடுத்து வைத்து, அந்த அதிகாரியின் சட்டையைப் பிடித்தான்.

"ஏ! மிஸ்டர்! என்ன அந்தப் பெண்ணை ஓட ஓட விரட்டுகிறீர்கள். தன் தவறு இல்லை என்று அவள் சொல்வதைக் கொஞ்சம் காதில் வாங்கிக் கொள்ளேன். அப்படி அவளே தவறாகச் செய்திருந்தாலும், ஆர்டரில், கையெழுத்துப் போட்ட அதிகாரி எப்படி போட்டார்? ஆர்டரை சரி பார்த்து வெளியிட்டது யார்?"

சாயி கத்தினான். அங்கு சட்டென்று அமைதி படர்ந்தது. அனைவரும் தங்கள் வேலையை நிறுத்திவிட்டு சாயியையே பார்த்தனர்.

"தன் சட்டையை உதறிக் கொண்ட அதிகாரி 'யார் நீ ? உனக்கு என்ன வேலை?" என்று கேட்டார்.

"நான் உங்கள் கம்பெனி ஆள் இல்லை. அதனால்தான் எனக்கு இன்னமும் கொஞ்சம் சுரணை இருக்கிறது. எதற்கு இந்தப் பெண்ணிடம் கத்துகிறீர்கள். அதுவும் எல்லோர் எதிரிலும்?"

சாயி விடவில்லை. கனகா அழுவதை நிறுத்திவிட்டு அவனையே பார்த்தாள்.

"நீ ஒரு அதிகப் பிரசங்கி. உடனடியாக இந்த இடத்தைவிட்டு வெளியே போ. எங்கள் கம்பெனி உள் விவகாரங்களில் தலையிட நீ யார்? இன்னமும் ஐந்து நிமிடங்களில் இந்த இடத்தைக் காலி செய்யாவிட்டால் செக்யூரிட்டியைக் கூப்பிட்டு, உன் கழுத்தைப் பிடித்து வெளியில் தள்ளச் சொல்வேன்."

கழுத்து நரம்பு புடைக்க கத்தினார் அந்த அதிகாரி.

"உங்களுக்கு அந்த சிரமம் வேண்டாம். குட்பை!"

தன்னுடைய பையை எடுத்துக் கொண்டு வெளியே வந்தான்.

'திரும்பப் போய் சாரியிடம் என்ன சொல்வது. ஆர்டருக்கு என்ன செய்வது. இப்படி சண்டை போட்டதனால் வேலை போய் விடுமா? எவ்வளவோ கஷ்டத்திற்குப் பிறகு இந்த வேலை கிடைத்திருக்கிறது. அதுவும் போய் விட்டால் என்ன செய்வது?'

யோசனை செய்தபடியே, டீக் கடையில் டீ வாங்கிக் குடித்துக் கொண்டு நின்றவனை, தொழிற்சாலைக் காவலர் கூப்பிட்டார். தயக்கத்துடன் வந்த சாயி, கேட்டின் உள்புறம் கனகா நிற்பதைப் பார்த்தான்.

"எதற்கு அப்படி சண்டை போட்டீர்கள்? அவருக்கு தாஸ்சார் மீது கோபம். என்னிடம் வந்து கத்தினார். சற்று நேரத்தில் அவரே நன்றாகப் பேசுவார். தவிர எங்களுக்கு யூனியன் இருக்கிறது. சுலபமாக ஒன்றும் செய்துவிட முடியாது" என்றவள் கையிலிருந்த காகிதத்தைக் கொடுத்தாள். வாங்கிப் பிரித்துப் பார்த்தான் சாயி. பம்புகளுக்கான ஆர்டர் அது. ராகவேந்திரா ஏஜன்ஸியின் மீது கொடுக்கப்பட்டிருந்தது.

"நான் வருகிறேன். நீங்கள் பரிந்து பேசியதற்காக நன்றி."

பதிலுக்குக் காத்திருக்காமல் உள்புறம் நோக்கி நடந்தாள் கனகா.

'உலகம் அவ்வளவு மோசமில்லை' என்று தோன்றியது சாயிக்கு. ○

நில், கவனி, வெற்றிகொள்!

# கல்கி

ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்®

இணைந்து வழங்கும்

## இளைஞர் திருவிழா!





"உலகத்திலேயே பணக்கார, அதிநவீன நாடான அமெரிக்காவின் டாலர் நோட்டுகளில்கூட 'வி ட்ரஸ்ட் இன் காட்'னு அச்சடிச்சிருக்காங்களே! அப்போ, நாம்ப கடவுளை நம்பாம எப்படி இருக்கிறது?" இது அகிலன்.

"அட! சாமீ கீமினு எதுவுமில்லை. எல்லாம் ஏமாத்து வேலை. நாட்டுல நல்லவங்க கஷ்டப்படறாங்க. அநியாயம் பண்றவங்க சௌக்யமா இருக்காங்க. உங்க சாமி நாட்டாமை இதுதானா?" - இது முகிலன்.

சரி... உண்மை என்ன? கடவுள்னு ஒருத்தர் இருக்காரா இல்லையா?

தமாஷாவும் தெளிவாவும் சொல்லப் போறாங்க இரண்டு பேர்.

தலைப்பு : **கடவுள்**

நாள் : 26.8.2001, ஞாயிறு

நேரம் : மாலை 6.15

இடம் : மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் அரங்கம்,
ஆலிவர் சாலை, சென்னை - 4

அனுமதி இலவசம்!

சிரிப்புரை : **தென்கச்சி கோ. சுவாமிநாதன்**

சிறப்புரை : **சுதா சேஷய்யன்**

**அனைவரும் வருக!**

# படிக்காத மேதை படும்பாடு!



ஒரு சின்ன ஃப்ளாஷ்பேக். 'கல்கி'யில் 1988ம் ஆண்டு வெளிவந்த ஒரு கட்டுரையின் சுருக்கத்தைப் பார்ப்போமா?

பாண்டிச்சேரியை அடுத்த கூடப்பாக்கத்தைச் சேர்ந்தவர் விவசாயி வெங்கடபதி. கரும்பும், நெல்லும் போட்டு கடனாளியாக இருந்த அவர் தில்லி கனகாம்பரம் பயிரிட்டு, கொள்ளை லாபம் சம்பாதித்ததைப் பற்றிய வெற்றிக் கதைதான் அந்தக் கட்டுரை. 'தாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்பதைப் போல, நர்சரி வைத்து கனகாம்பரச் செடிகள் விற்பனையிலும் சாதனை படைத்தார் வெங்கடபதி. அந்தக் கட்டுரையின் முடிவில் கனகாம்பரத்தை இனவிருத்தி செய்யும் வழிகளில் புதிய ஆராய்ச்சிகளை மேற்கொள்வதாக அறிவித்திருந்தார் வெங்கடபதி.

2001ல் வெங்கடபதியிடமிருந்து நமக்கு எஸ்.ஓ.எஸ்.

"ஐயா... நான் உங்களிடம் சொன்னதைத் தொடர்ந்து, கடுமையான ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு கனகாம்பரத்தில் விவசாயிகளுக்கு லாபம் வரும் வகையில் ஒன்பது புதிய ரகங்களைக் கண்டுபிடித்துள்ளேன். ஆனால், அந்தக் கண்டுபிடிப்புகளுக்கு முறையான சான்றிதழும் அங்கீகாரமும் வேண்டி, கோவை விவசாய பல்கலைக்கழகத்தை அணுகிய போது, அவர்கள் ஒரு ரகத்துக்கு ஆய்வுக் கட்டணமாக ஒரு லட்ச ரூபாய் கேட்கிறார்கள். இப்போது ஒன்பது லட்சம் கட்ட முடியாத நிலை. அது தவிர, தொடர்ந்து நான் புதிய ரகங்களைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் இறங்கியிருக்கிறேன். லட்சக்கணக்கில் பல்கலைக்கழகத்திற்கு பணம் கட்ட எனக்கு வசதியில்லை. எனவே என்னுடைய ஆர்வத்தையும், விடாமுயற்சியையும் பார்த்து அரசு எனக்கு விதிவிலக்கு அளிக்க வேண்டும்" என்று எழுதியிருந்தார் வெங்கடபதி.

கூடப்பாக்கம் சென்றோம். செடிகளின் இனவிருத்திக்காக இப்போது நான்கு சீதோஷ்ண கட்டுப்பாட்டு அறைகள், வீட்டுக்குப் பின்புறமுள்ள கனகாம்பரத் தோட்டத்தில், கழுத்தில் பல விவரங்களைத் தாங்கிக் கொண்டு





நிற்கும் செடிகள். வீட்டு மாடியில் நூற்றுக் கணக்கான ரசாயனங்களோடு பரிசோதனை அறை. இளஞ்சிவப்பு ஆரஞ்சு, வெளிர் ஆரஞ்சு, அடர்த்தியான மஞ்சள் என்று வித்தியாசமான நிறங்களில் கண்ணைப் பறிக்கும் கனகாம்பரங் கள் பூத்துக் குலுங்குகின் றன. தமது பதின்மூன்று வருட கால உழைப்பைப் பற்றி மூச்சு விடாமல் சொல்கிறார், வெங்க டபதி.

"நாட்டுக் கனகாம்பரம் மற்றும் டில்லி கனகாம்பரம் மட்டுமே பயிர் செய்து வந்த நான், இன்னும் கவர்ச்சியான நிறங்களில், விவசாயிகளுக்கு அதிக மகசூல் தரும் வகை யில், புதிய ரகங்களை உருவாக்க முனைந்து, ஜெர்மன் நாட்டு விஞ்ஞானியான 'போங்கே' என்பவருக்குக் கடிதம் எழுதினேன். பூவின் நுனி மொட்டிலிருந்து, உயிரியல் தொழில் நுட்ப முறையில் புதிய இனங்களை உருவாக் கும் வழிமுறைகளை அவர் எனக்குத் தெரி வித்தார். அதிலிருந்து என் ஆராய்ச்சி துவங்கி யது. பல விவசாய விஞ்ஞானிகள் எனக்கு உதவிக்கரம் நீட்டினார்கள். இப்போது விதை களில் காமா கதிர் வீச்சைச் செலுத்தி, புதிய இனங்களை உருவாக்குவது வரை வந்து விட் டேன்" என்று பெருமையுடன் சொன்னார் வெங்கடபதி. செடியிலுள்ள செல்கள், அதற் குள் இருக்கும் குரோமோசோம்கள், டி.என்.ஏ. என்று தாவரவியல் ஆசிரியரைப் போல நமக் குப் பாடம் சொல்லித் தருகிறார் நான்காவது வரை மட்டுமே படித்த வெங்கடபதி.

"வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு சுவைத் தால் அதன் கலவை சிவப்பு நிறத்தில் வருகிற தல்லவா! அது போன்றுதான் பலவித இனங் களை, கிராஸ் செய்து கலப்பினங்களாக உரு வாக்கும் போது, மரபிலிருந்து மாற்றம் வரு கிறது. அதனால் பூக்களும் நிறம் மாறுகின்றன. ஒரு விஞ்ஞானி ஏக்கருக்கு நூறு மூட்டை மகசூல் எடுக்கும் அளவுக்கு ஒரு புதிய நெல் ரகத்தைக் கண்டுபிடித் தால், அது விவசாயிக்கும், வியா பாரிக்கும் லாபகரமாக இருக்கலாம். ஆனால், நாம் அந்த அரிசியைச் சமைக்கும்போது அது மூன்று மணி நேரத்தில் நசநசத்துப் போய் விடுகிறது என்று வைத்துக் கொள் ளுங்கள். அந்த அரிசி மார்க் கெட்டில் ஓடுமா? எனவே அந்த வகையில் விஞ்ஞானியின் கண்டுபிடிப்பு, மக்களுக்குப் பயனில்லாமல் போகிறது. எனவே, எந்த ஒரு கண்டு பிடிப்பும் எல்லா தரப்பு மக் களுக்கும் பயனுள்ளதாக அமைய வேண்டும். உதாரண மாகச் சொல்வதென்றால், நான் உருவாக்கிய விஜயா கனகாம் பரம் ஒரு கிலோ எடையில் 12,500 பூக்கள் நிற்கும். அதுவே வழக்கில் இருக் கும் டில்லி கனகாம்பரம் 24,500 தேவைப்படும். அந்த அளவுக்கு, பூ சற்று கனமாகவும் அதே சமயம் கவர்ச்சியாகவும் இருக்கும். ஒரு கதிரில் 60 பூக்கள் வரை பூக்கும். விவசாயிக்கும் லாபம். மார்க்கெட்டில் மூன்று நாள் வைத்து விற்பனை செய்யலாம். லட்சுமி கனகாம்பரம் என்ற வகை. தினசரி பறிக்கலாம். ஒரு கதிரில் 75 பூக்கள் வரை இருக்கும். நான் கண்டுபிடித் துள்ள கனகாம்பர வகைகளினால், விவசாயிக் கும் லாபம், வியாபாரிக்கும் லாபம். பூக்களும் வித்தியாசமான நிறங்களில் பனிச்சென்று இருப்பதால் பெண்களும் விரும்பி வாங்கிச் சூடுகிறார்கள்" என்கிறார் வெங்கடபதி.

**தா**வரத்தின் இனவிருத்திக்குப் பல வழி கள் இருக்கின்றன. தன்மகரந்தச் சேர்க்கை, அயல் மகரந்த சேர்க்கை தவிர ரசாயனம், நுண் ஊதாக் கதிர்கள் மற்றும் காமா கதிர் வீச்சு ஆகியவை மூலம் இனவிருத்தி நடக் கின்றன. குறிப்பாக, காமா கதிர் வீச்சு மூலம் ஒரு தாவரத்தின் அடிப்படையிலேயே மாற் றம் செய்ய முடியும். ஒரு செடியின் விதை களை, காமா கதிர் வீச்சுக்கு உட்படுத்தும் போது, அந்த வெப்பத்தின் தாக்குதலால் விதையிலுள்ள குரோமோசோம்களும், மர பணுக்களும், தங்களது இயற்கையான பண்பு களை இழந்து, தாவரத்தில் புதிதாகச் சில விஷ

யங்களைக் காட்டுகின்றன. இலைகளின் வடிவத்தில் மாற்றம், பூக்களின் நிறத்தில் மாற்றம் என்று பல மாறுதல்கள். ஒரே செடியிலேயே இரண்டு விதமான, பூக்கள், இலைகள் கூட உருவாக்க முடியும். அந்த மாற்றங்கள் எல்லா தரப்புக்கும் திருப்தியளிக்கக்கூடிய வகையில் இருக்கும் பட்சத்தில், மாற்றப்பட்ட பண்புடன் புதிய தாவரம் உருவாகிறது. அந்தத் தாவரத்தின் செல்களிலிருந்து லட்சக்கணக்கான செடிகள் உருவாகி விடுகின்றன. பழைய முறைகளான பதியன் போடுதல், கிளைகளை வெட்டி எடுத்து, கன்றுகளை உருவாக்குதல் போன்றவற்றிற்கு, டாட்டா காட்டி வெகு காலம் ஆகிவிட்டது. இந்த வகையில் வெங்கடபதியின் ஆராய்ச்சிக்கு மிகவும் உதவியாக இருப்பவர்கள் மும்பை மற்றும் கல்பாக்கத்திலுள்ள அணுமின் நிலைய விஞ்ஞானிகள்தான்.

"காமா கதிர் வீச்சு மூலம் மரபணு மாற்றங்களைக் கொண்டு வருவதற்கு அவர்கள் தான் உதவியாக இருக்கிறார்கள்" என்று நன்றியுடன் சொல்கிறார் வெங்கடபதி. தோட்டத்தில் முழுக்க, முழுக்க உதவியாக இருப்பவர், ஒன்பதாவது படிக்கும் அவரது மகள் லட்சுமிதானாம்.

"நமது நாட்டுக்கு அந்நியச் செலாவணி பெற்றுத் தருவதில் மலர்களும் முக்கியப் பங்கு வகிக்கின்றன. அந்த வகையில் என் கண்டுபிடிப்புகள் மிகவும் உதவியாக இருக்கும். உலக அளவில் கனகாம்பர செடி இன விருத்தி முறைகளில் சாதனை படைக்கும் முதல் விவசாயி என்ற பெயரும், புகழும் எனக்குக் கிடைக்க வேண்டும். அதுவே என் லட்சியம்" என்று சொல்லும் வெங்கடபதிக்கு மத்திய அரசின் தோட்டக் கலை நிறுவனம் பாராட்டி விருது கொடுத்து கௌரவித்திருக்கிறது. இது தவிர விவசாயத் துறையில் வழங்கப்படும் பல விருதுகளையும் பெற்றிருக்கிறார் இவர்.

கல்யாணம் மற்றும் பொது நிகழ்ச்சிகளுக்குச் செல்லும்போது பெண்கள் தலையில் சூடியிருக்கும் மலர்களை உற்றுநோக்குவாராம் வெங்கடபதி. 'என்னடா இது... வயதான ஆளா இருக்கார்... பெண்களை உற்றுப் பார்க்கிறாரே' என்று பலர் தவறாக நினைக்கக் கூடும். ஆனால் என் பார்வையின் நோக்கம் பெண்கள் சூடியுள்ள மலர்களைப் பற்றிய ஆராய்ச்சிதான் என்று அவர்களுக்குத் தெரியாதல்லவா?" என்று சொல்லிச் சிரிக்கிறார்.

— ப்ரியன்

படங்கள் : ராஜன்

# அது மட்டும்...

லலிதா வெங்கடேஷ்

கடற்கரைச் சாலையில் டூவீலர் ஓட்டுவது சுகமாக இருந்தது. குட்டைத் தலைமுடி காற்றில் அலைந்து கழுத்தில் குறுகுறுப்பு.

குதிரையில் ஜான்சிராணி. எதற்கும் அஞ்சாத பாய்ச்சல். வழியெங்கும் பிரமிப்பு படிந்த கண்கள்... எதுவும் இல்லை. அவரவர் அவசரம் அவரவருக்கு. என்னோடும், என்னைத் தாண்டியும் பல வண்டிகளில் பெண்கள்தான். முன்னால் போகும் மாமிக்கு, ஸாரி ஆன்ட்டிக்கு, ஐம்பத்தைந்து அறுபது வயது கூட இருக்கலாம். பாட்டிகள் தங்கள் பேரன் பேத்திகளை இரு சக்கர வாகனங்களில் பள்ளியில் கொண்டு விடும் காலத்தில் பழசெல்லாம் புதுசாகி விட்டது. எங்கு பார்த்தாலும் ஜான்சிராணிக்கள்தாம். பதினைந்து வருடங்களாகியும் எனக்குத்தான் இன்னும் பெருமிதச் சிலிர்ப்பு தீர்ந்த பாடில்லை.



அப்படியும் பல பெண்கள் பஸ் ஸ்டான்ட்களில் தோளில் பை தொங்க நின்றிருந்தார்கள். கூடிய சீக்கிரம் இவர்களும் ஏதாவது ஒரு லோன் போட்டு வண்டி வாங்கி விடுவார்கள்.

கதீட்ரல் சாலை மேம்பாலத்தில் போகும்போது மறுபடி ஜான்சிராணி பிரமை. ஏழு மணி சாயங்காலத்தில் பாலத்திலிருந்து பார்த்தால் சென்னை ஜொலிக்கத்தான் செய்கிறது.

காம்பவுண்டுக்குள் நுழைந்து வண்டியை நிறுத்திவிட்டு இறங்கினால், கண்ணெதிரே கீழ்வீட்டு ப்ரீதா. ஜீன்ஸ், குட்டைச்சட்டை, ஸான்ட்ரோ காரில் சாய்ந்து நின்றிருந்தவளது காதில் செல்ஃபோன். வீட்டில் இருக்கும்போது செல் என்ன வேண்டிக் கிடக்கிறது! உள்ளே போய்ச் சாதாரண போனில் பேசக் கூடாதா?

அவளை அதிகம் கவனிக்காமல் லிஃப்டில் ஏறி இரண்டாம் மாடி வீட்டுக்குள் நுழைந்தேன்.

"ஹாய் மாம்!"

"ஹாய் மஹி! ஏதாவது சாப்பிட்டியா?"

"ம்... டொமினோஸ் பீட்ஸா!"

"ஒரு முழு நோட்டு காலியா! எப்படியிருந்தது?"

"கோச்சுக்காதேம்மா... உன் இட்லி தோசையை விடப் பிரமாதம்!"

பீட்ஸாவும் ஐஸ்க்ரீமும், தொட்டுக் கொள்ள கோக்குமாய்ச் சேர்த்துதான் பதினாலு வயதில் இப்படியொரு மொழுமொழுப்பைக் கொடுத்திருக்கின்றன.

'மக்'கில் பாலை வைத்து, மைக்ரோவேவில் சூடு பண்ணி, காப்பி கலந்து குடித்தபடி மறுபடி ஹாலுக்கு வந்தேன்.

"அப்பா இன்னும் வரலே? ஏதாவது



ஃபோன் பண்ணினாரா?''

அகலத் திரை தொலைக்காட்சியில் எம்.டி.வி. பெண்களின் ஆட்டத்தை விட்டுக் கண்ணை அசைக்காமல் உதட்டைப் பிதுக்கினாள் மஹி. அடுத்த பாட்டு ஆரம்பித்ததும், "ஓ! ஸிக்!" என்ற அலுப்போடு எழுந்து உள்ளே போனாள். மறு நிமிடம் அங்கிருந்தே கத்தினாள்.

''அம்மா... இன்டர்நெட் பிரௌஸ் பண்ணணும்... நீ ஏதாவது போன் பேசணுமா?''

"ஃபோனை ஃப்ரீயா வை மஹி... அப்பா பேசினாலும் பேசுவார். நாளைக்கு சனிக்கிழமை, உனக்கு லீவுதானே... அப்போ பிரௌஸ் பண்ணிக்கோ... ப்ளீஸ்!"

நினைத்தபடியே ஐந்து நிமிடத்தில் வாசுவிடமிருந்து போன் வந்தது.

''இதோ கிளம்பிண்டேயிருக்கேன்... நாளைக்கு மார்னிங் ஃப்ளைட்ல டெல்லி போகணும். டிக்கெட் கைக்கு வந்தாச்சு. வீட்டுல பணம் எவ்வளவு வெச்சிருக்கே?''

"ம்... ஒண்ணு தேறும்..''

"அது போறாதே..''

"கிரெடிட் கார்ட்தான் இருக்கே?"

''டாக்ஸி சீக்ஸிக்குக் குடுக்க வேண்டாமா? சரி, ஒண்ணு பண்றேன்... வர்றப்போ ஏ.டி.எம்.ல கொஞ்சம் டிரா பண்ணிண்டு வரேன்...''

என்ன சௌகர்யம்! ராத்திரி எட்டு மணிக்கு, ஏன் பாதி ராத்திரியில் கூட, பாங்கிலிருந்து பணம் எடுக்கலாம். அதுவும் முடியாவிட்டால் பிளாஸ்டிக் அட்டையைக் காட்டியே காரியத்தைச் சாதித்துக் கொள்ளலாம். பத்து வருஷம் முன்பு அப்பாவுக்கு ஓர் இரவு மாரடைப்பு வந்த போது வீட்டில் நூறு ரூபாய்கூட இல்லாமல், அக்கம்பக்கத்தில் கெஞ்சி ஆயிரம் ரூபாய் திரட்டுவதற்குள் அத்தனை பேருக்கும் மாரடைப்பு வந்து விடும் போல இருந்தது. இப்போது கிரெடிட் கார்ட் பில் வரும் போது மட்டும்தான் மாரடைப்பு. சென்னை புதுசாகிக் கொண்டுதான் வருகிறது.

"அப்பா என்னம்மா சொன்னா? வர லேட்டாகுமாமா?''

''இல்லே... நாளைக்கு டெல்லிக்குப் போகணுமாம்...''

"நாளைக்கா? சாடர்டே நைட் டின்னர் ஹோகயாவா? அப்பஎன்னா இன்னிக்கே வெளியில போய்ச் சாப்பிட்டா என்னம்மா?"

"வேணாம் மஹி... அப்பா ஏற்கெனவே டயர்டா வருவார்... அடுத்த வாரம் பார்த்துக்கலாம். ஆமா, நீ என்ன இங்கயும் அங்கயுமா அலைஞ்சிண்டிருக்கே? படிக்கலையா?"

"நோ... ரெண்டு நாள் லீவுதானே... அதனால இன்னிக்கு நோ படிப்பு! பேசாம சி.டி.ல படமாவது பார்க்கறேன்!''

"சி.டி.யா? ஏது?''

"ஸ்கூல்லருந்து வர்றப்போ நான்தான் லைப்ரரிலருந்து எடுத்துண்டு வந்தேன்!''

கோடை விடுமுறையில் ஒரே ஒரு தமிழ்ப் படம் அழைத்துப் போகச் சொல்லி அப்பாவிடம் நான் கெஞ்சிய காலமெல்லாம் மலையேறி விட்டது.

டெலிபோன் மறுபடி கூப்பிட்டது. நீண்ட ஒலி. வெளியூர் அழைப்பு.

"ஹலோ...''

"ஹாய் மாம்!" அமெரிக்காவிலிருக்கும் அஸ்வின் குரல்.

"என்னடா இந்த நேரத்துல போன் பண்றே? அங்க இப்போ மணி கார்த்தால எட்டா? இன்னுமா நீ வீட்டுலயே இருக்கே?"

''என்னம்மா நீ! ஈமெயிலே பார்க்கலியா?''

"இல்லப்பா... ரெண்டு நாளா ரொம்ப வேலை... மெயில் செக் பண்ணவேயில்லே! ஏன், நீ ஏதாவது அனுப்பினியா?"

''ஆமா. உடனே பாரு! அப்புறம் பேசறேன். பை!''

கம்ப்யூட்டரும், ஈ, கொசு மெயில்களும் வந்த பிறகு தொலைபேசியில் பேசுவதே குறைந்து விட்டது. அவ்வப்போது தந்தி பாஷையில் அவன் அனுப்பும் கடிதமும், அதற்கு ராமாயணமாய் நான் பதில் எழுதுவதும், 'இவ்வளவு பெரிசா அனுப்பினா படிக்காமலேயே 'ட்ராஷ்'ல போட்டுடுவேன்' என்று அவன் பயமுறுத்துவதும்

---

**"என் மனைவி எல்லா நேரமும் டீ.வி. பார்த்துக்கிட்டே இருக்கா டாக்டர்!"**

**"இது வியாதி இல்லியே. எல்லாப் பெண்களும் செய்யறதுதானே!"**

**"அதுசரி, ஆனா இவ பவர்கட் ஆனாகூட தொடர்ந்து டீ.வி. பார்க்கிறாளே!"**

**- தஞ்சை தாமு**



கல்கி 19.8.2001

வாடிக்கையாயிற்று. இப்போது என்ன பெரிசாக அனுப்பியிருக்கப் போகிறான்!

கம்ப்யூட்டர் முன் உட்கார்ந்து வான வலைக்குள் நுழைந்து அவனது கடிதத்தைப் பார்த்த போதுதான் தெரிந்தது, பெரிசாகத் தான் அனுப்பியிருக்கிறான் என்று.

ஒரு வெள்ளைக்காரப் பெண்ணின் புகைப்படம். 'போட்டோவை நன்றாகப் பார்த்துக் கொள்ளுங்கள். ஞாயிறு காலை நெட்-சாட் செய்யும் போது மற்ற விவரம் தெரிவிக்கிறேன்' என்றது அவனது கடிதம்.

இதற்கு மேல் தெரிவிக்க என்ன இருக்கிறது! இந்த மாதிரி விஷயத்தையெல்லாம் முன்பு தயங்கித் தயங்கி பேசின மாதிரி இப்போது இல்லை. தயக்கமும் கிடையாது. பேச்சும் இல்லை. அங்கிருந்து அவன் அனுப்பும் புகைப்படம் ஒளியை விட வேகமாக இங்கு வந்து விஷயத்தை விளக்கி விடுகிறது. ஞாயிறு காலை அவன் அமெரிக்காவிலிருந்து பேச, அதை நாங்கள் இங்கிருந்தே கம்ப்யூட்டர் திரையில் பார்த்துப் பதில் சொல்லும்போது, கல்யாணம் அமெரிக்காவிலா சென்னையிலா என்பதை மட்டும் முடிவு செய்தால் போதும். சென்னைதான் மாறிவிட்டதே. இங்கேயே கூடச் செய்யலாம்.

அஸ்வின் மீது கோபம் ஏதும் வரவில்லை. ஐயரும் ஐயங்காருமாக இருபத்தைந்து வருஷங்களுக்கு முன் நாங்கள் செய்ததைத்தானே இப்போது அவன் நாடு கடந்து செய்கிறான்.

குளித்து விட்டு நைட்டியை அணிந்து கொண்ட போது மணி எட்டரை ஆகியிருந்தது. வாசு வருவதற்குள் சாப்பாட்டைத் தயார் செய்வதற்காகக் குளிர்பெட்டியில் இருந்ததை வெளியில் எடுத்து மைக்ரோவேவ் அடுப்பில் சூடுசெய்து டேபிளில் வைத்தேன். ஒருவேளைச் சமையல்தான். சமயத்தில் ஒரு வாரச் சமையலும் கூட.

வாசல் கதவு தட்டப்பட்டு, திறந்தால் வாட்ச்மேன் நின்றிருந்தான்.

"அம்மா, தண்ணி லாரி வந்திருக்கு!"

காய்ச்சல் வந்து உஷ்ணம் ஏறிவிட்ட திடீர்ப் பரபரப்பில் பக்கெட்டையும் குடத்தையும் தூக்கிக் கொண்டு வெளியே வருவதற்குள் மற்ற அபார்ட்மெண்ட்காரர்கள் லிஃப்டில் நிறைந்திருந்தார்கள். அவர்களை இறக்கி விட்டுத் திரும்பி வருவதற்குள் லாரி போய்விட்டால் என்ன செய்வது! படிகளில் வேகமாக இறங்கி தெருவுக்கு வந்தேன்... ●

“திருவையாறிலிருந்து திருநெல்வேலிக்கு போகவிருந்தோம். நல்ல ஜுரம் வந்துவிட்டது ஜி.என்.பி. சாருக்கு... ரொம்ப சோர்ந்து போய்விட்டார். டாக்டர்கள் அவருக்கு ஓய்வு தேவை என்றும், கட்டாயமாகக் கச்சேரி செய்யக்கூடாது என்றும் சொல்லிவிட்டார்கள். அவரும் கச்சேரியை ரத்து செய்து விட்டார். ஆனால், சென்னைக்குத் திரும்புவதற்குப் பதில் திருநெல்வேலிக்கு அருகிலுள்ள தாழையூத்துக்குப் போய் ரெஸ்ட் எடுத்துக் கொள்ளத் தீர்மானித்தார்.

“பிற்பகல் மூன்று மணிக்கு தாழையூத்தில் அவர் தங்கியிருந்த இடத்துக்குக் கும்பலாக சில ரசிகர்கள் வந்து, தாங்கள் அவருடைய கச்சேரியைக் கேட்க ஆவலாக இருந்ததாகவும், கச்சேரி கான்சல் ஆனதில் மிகவும் வருத்தம் அடைந்திருப்பதாகவும் சொன்னார்கள். ஏற்கெனவே பக்கவாத்தியம் வாசிக்கவிருந்த கலைஞர்கள், கச்சேரி கான்சல் ஆனதும் சென்னை திரும்பிவிட்டார்கள். இருந்தாலும், “இங்கே பக்கவாத்தியத்துக்கு உள்ளூரில் யாராவது கிடைத்தால் பாடி விடுகிறேன்'' என்றார். நெல்லை மணி வயலின் வாசிக்க, நெல்லை தேவராஜன் மிருதங்கம் வாசிக்க, அன்றைய கச்சேரியில் அவர் பாடிய போது, ‘இவருக்கா உடம்பு சரியில்லை?’ என்று தோன்றியது. அத்தனை அற்புதமாகப் பாடினார்.

''ஒரு நாள் எங்களுக்குத் தோடி சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். அப்போது டைகர் வரதாச்சாரியார் பற்றிச் சொல்லி விட்டு, அவர் எப்படி தோடி பாடுவார் என்பதை அப்படியே பாடிக்காட்டி, ‘ஏமி ஜேஸிதே’ கீர்த்தனையையும் பாடி முடித்தார். அவர் கண்களில் கண்ணீர் முட்டிக் கொண்டு நின்றது.

அன்று மாலையே பெரம்பூர் சங்கீத சபாவில் கச்சேரி இருந்தது. லால்குடி வயலின், முருகபூபதி மிருதங்கம். அதில் அதே தோடியைக் காலையில் எங்களுக்குப் பாடிக் காண்பித்த ‘டைகர்’ பாணியிலேயே பாடினார். ‘பெரிய வித்துவான்களை அப்சர்வ் பண்ணணும். எந்தப் பெரிய வித்துவான்கள் பாடினாலும் கேளுங்கள். பிறகு உங்கள் பாணியை நீங்களே தீர்மானித்துக் கொள்ளுங்கள்!’ என்பார்...”

– குரு ஜி.என்.பியைப் பற்றி இவ்வாறு நினைவு கூரும் திருச்சூர் வி. ராமச்சந்திரன் இரு விதங்களில் குருவின் பெயரைக் காப்பாற்றியிருக்கிறார்.

ஜி.என்.பி.க்குப் பிறகு ஜி.என்.பி பாணியைக் காப்பாற்றிக் கொடுத்தாலும் தம்முடைய தனித்தன்மையையும் முத்திரை பதித்து பாடி ரசிகர்களின் அபிமானத்தைப் பெற்றிருக்கிறார்.

தாமும் பல நல்ல சிஷ்யர்களை உருவாக்கி அவர்களுடன் நல்லுறவு பூண்டு, அவர்களுடைய



அபிமானத்தையும் பெற்றிருக்கிறார்.

ராமச்சந்திரனுக்கு ஸ்ரீ கிருஷ்ணகான சபா ‘சங்கீத சூடாமணி’ என்ற விருதை வழங்கிய விழாவில் இந்த இரு சிறப்புகளையும் சுட்டிக் காட்டிப் பேசினார் நிகழ்ச்சிக்குத் தலைமை வகித்த ‘ஃப்ரன்ட்லைன்’ ஆசிரியர் என்.ராம்.



• நல்லி கான விஹார்

• ஜி.என்.பி

# 'கிருஷ்ணா - ராமா' என்று இராமல்...

அதோடு 'கிருஷ்ணா ராமா' என்று இருக்கத் தெரிந் ததா மனிதருக்கு...? என்றால், அதுதான் இல்லை.

சங்கீத விஷயங்கள் பற்றித் தமக்கு அவ்வளவாகத் தெரியாது என்றும் விவரமறிந்தவர்களைக் கேட்டுப் பேசுவதாகவும் வெளிப்படையாக ஒப்புக் கொண்டவர், மிக வெளிப்படையாகப் பேசிய மற்றொரு விஷயம் அரங்கில் சல சலப்பையும் கைதட்டலையும் கிளப்பி விட்டது :

கர்னாடக சங்கீதக் கலைஞர்களுக்குச் சபாக்கள் அளிக்கும் சன்மானம் மிக மிகச் சொற்பமாக இருக்கிறது என்றும், இந்த ஸ்பான்ஸர்ஷிப் யுகத்தில் கலைஞர்களுக்குக் கௌரவமான சன்மானம் அளிப்பது சாத்தியம் என்றும் ஒரு போடு போட்டார். டிக்கெட் விலைகளைக் கூட்டாமல் சன்மானத்தை உயர்த்த வேண்டும் என்பதையும் கவனமாகச் சேர்த்துச் சொன்னார்.

"இந்த நல்ல காரியத்தை முதலில் யார் ஆரம்பிப்பது? ஒரு சபா சன்மானத்தை உயர்த்தினால் மற்றவர்கள் ஆட்சேபிக்கக்கூடுமே என்ற தயக்கமெல்லாம் கூடாது!" என்று அவர் இன்னொரு போடு போட்டபோது நிகழ்ச்சிக்கு வந்திருந்த வித்வான்கள் முதல்தர சங்கரா பரணத்தைக் கேட்ட குதூகலத்தில் தலையாட்டி மகிழ்ந்தார்கள். வெகுநாட்களாக தாழ்ந்த குரலில் சபாக்களின், தாழ்வாரங்களில் மட்டுமே அடிபட்ட பேச்சு மேடையேறிவிட்ட சந்தோஷத்தில் மிதந்தார்கள்.

ராமச்சந்திரனை வாழ்த்தி உமையாள்புரம் சிவராமனும் க்ளீவ்லன்ட் சுந்தரமும் பேச, ஸ்ரீராம் குரூப் நிறுவனம் அவருக்கு 25,000 ரூபாய் பரிசளிக்க, 'நல்லி கான விஹார்' என்று பெயர் மாற்றம் பெற்ற புதிய ஸ்ரீ கிருஷ்ண கான சபா அரங்கில் பாராட்டு பெற்ற முதல் வித்வான் என்ற பெருமை ராமச்சந்திரனுக்கு. அரங்கத்தின் புனர் நிர்மாணத்துக்குப் பல லட்சங்களை அள்ளிக் கொடுத்தவர் நல்லி குப்புசாமி என்பதால் கானவிஹார் நன்றியுடன் 'நல்லி கானவிஹார்' என புதுப் பெயர் பெற்றிருக்கிறது.

பழைய பாரம்பரிய (செட்டிநாடு) அமைப்பில் அரங்க முகப்பும் கட்டடமும் புதிதாய் வடிவமைக்கப்பட்டு, அடையாளம் தெரியாமல் மாறியிருக்கின்றன.

பல புதிய கலைஞர்களை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்த கிருஷ்ண கான சபா யக்ஞராமன், அரங்க மேடையின் இரு புறமும் உள்ள வாக்கேயக்காரர்களின் படங்களுக்கு வெளிச்சமூட்ட வேண்டும். மின் ஒளி வெள்ளம் முழுதும் மேடையிலேயே பாய்கிறது!

சபாக்களுக்கு வாரி வழங்க, நல்லி குப்புசாமி போன்ற புரவலர்கள் தயாராயிருக்கிறார்கள். வித்வான்களுக்கு வாரி வழங்காவிட்டாலும் உவந்து சன்மானத்தை உயர்த்தி வழங்க சபாக்களால் முடியாதா என்ன...? 'கிருஷ்ணா, ராமா' என்றா இருந்து விடப் போகிறார்கள்!

— நமது நிருபர்

# நீங்கள் கேட்டவை - தராசு

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

? பரிதி தொடர்ந்த நீதிமன்ற அவமதிப்பு வழக்கில், ஆணையர் முத்துக்கருப்பன் நிபந்தனையற்ற மன்னிப்பு கோரியுள்ளது பற்றி..?

! மன்னிப்பு கோரினால் போதாது: மானமுள்ளவராயிருந்தால் ராஜினாமா செய்ய வேண்டும். ஆனால் தண்டனை பெற்றவர்கள் பதவியில் இருக்கக்கூடாது என்ற சுப்ரீம் கோர்ட் தீர்ப்புக்குப் பிறகும் ராஜினாமா செய்யாமல், முதல்வர் பதவியில் ஒட்டிக் கொண்டிருக்கும் 'ஜெ'யின் வழிகாட்டலில் உள்ள முத்துக்கருப்பனிடம் இத்தகைய உயர்ந்த மரபுகளை எதிர்பார்க்க முடியாது.

● டி. சுப்ரமணியன், மேலையூர்

? "தமிழகத்தில் கல்வி வியாபாரமானதற்குத் தி.மு.க. ஆட்சிதான் காரணம்" என்று தி.மு.க. ஆட்சியில் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சராயிருந்த தமிழ்க்குடிமகன் கூறுகிறாரே?

! 'எதைத் தின்றால் பித்தம் தெளியும்?' என்று ஒரு வசனம் உண்டு. தமிழ்க்குடிமகனுக்கு 'எதைச் சொன்னால் 'ஜெ'யின் கவனத்தைக் கவரலாம்?' என்ற கவலை!

● டி.கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்

? எதிர்காலத்தில் தமிழில் எழுதுவது குறைந்து போய், தமிழ், பேச்சு மொழியாக மட்டும் இருக்கும் அபாயம் உள்ளதாமே...?

! இதற்காகத்தான் தொடக்கக் கல்வியை மட்டுமாவது தமிழ் வழியிலேயே நடத்த வேண்டும் என்று போராடுகிறார்கள் நண்பரே!

● டி. செல்வன், நெல்லையப்பபுரம்

? ஜோதிடத்தைப் பாடமாக வைத்தால் விஞ்ஞான வளர்ச்சி பாதிக்கப்படும் என்று மேற்கு வங்க முதல்வர் எச்சரிக்கை விடுத்திருப்பது பற்றி..?

! ஜோதிடமே விஞ்ஞானபூர்வமான கலைதான். துல்லியம் அதிலே மிகவும் முக்கியம். அது எப்போதும் எல்லோருக்கும் கைவருவதில்லை என்பதால் பிரச்னைகள். எதிர்காலத்தை அறியும் ஆவலில் மிகப் பலர் ஏமாறத் தயாராயிருப்பதாலும்; பலர் ஏமாற்றத் தயாராயிருப்பதாலும் அதன் நம்பகத்தன்மை கேள்விக்குள்ளாகியிருக்கிறது.

● எம். சிவகுருநாதன், சென்னை - 42

? தமிழ்நாட்டின் மூன்று ஐ.பி.எஸ். அதிகாரிகளை மத்திய அரசுப் பணிக்கு அழைத்ததை தமிழக ஐ.பி.எஸ். அதிகாரிகள் சங்கம் எதிர்த்துக் கண்டனம் தெரிவித்துள்ளதே..?



• இடப் பிரச்னை!

! சம்பந்தப்பட்ட அதிகாரிகள், மத்திய அரசின் ஆணையைத் தடை செய்யக்கோரி சென்டிரல் அட்மினிஸ்டிரேடிவ் டிரிப்யுனலிடம் மனு செய்ய, சி.ஏ.டி. தடை செய்ய மறுத்துவிட்டது. மத்திய மாநில அரசுகளிடம் விளக்கம் கோரியுள்ள இவ்வமைப்பு இறுதியாக வழங்கும் முடிவு சரித்திர முக்கியத்துவம் பெறும்.

● எஸ். கதிரேசன், பேரணாம்பட்டு

? 'தன் வேலை முடிந்துவிட்டால், கூட்டணி கட்சிகளை மாற்றுவதென்பது ஜெயலலிதாவுக்குச் சேலை மாற்றுவதுபோல...' என்று பா.ம.க. தலைவர் ராமதாஸ் கூறியுள்ளாரே - ஜெயலலிதாவின் குணாதிசயங்கள்



• தயார் தயார்!



• மன்னிப்பும் மரபும்!

கல்கி 19.8.2001

# தமிழக அரசு முரண்டுபிடிப்பது ஏன்?

நன்றாகத் தெரிந்தும் எப்படி அவருடன் கூட்டுச் சேர்ந்தார்?

! குணம் ஏற்கெனவே ராமதாஸுக்குத் தெரிந்ததுதான்; தேர்தல் முடிவு குறித்து அவர் போட்ட கணக்குதான் தப்பாகிவிட்டது!

● கல்லன் கிருஷ்ணராஜ், குன்னூர்

? தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் இளங்கோவன் ஆரம்பத்திலிருந்தே அ.தி.மு.க. கூட்டணிக்கு எதிர்ப்பு காட்டி வருகிறார். காங்கிரஸுக்குள்ளேயே, அதுவும் அதன் மூத்த தலைவர்களிடையே அவருடைய கருத்துக்கு எதிர்ப்பு உள்ளது. அப்படியும் அவர் தம் போக்கை மாற்றிக் கொள்ளாதது அவரது முதிர்ச்சியின்மையைக் காட்டுகிறதா? கொள்கைப் பிடிப்பைக் காட்டுகிறதா...?

! தலைமைப் பதவியை இழக்கவும் தயாராயிருப்பதைக் காட்டுகிறது.

● அவ்வை கே. சஞ்சீவிபாரதி, கோபி

? தேசிய ஜனநாயக கூட்டணியை உருவாக்கியதே நான்தான் என்கிறாரே டாக்டர் ராமதாஸ்...?

! அட்ரா சக்கைன்னானாம்! கூடவே 'ஆயாராம் - கயாராம்' கொள்கையையும் அவர்தான் அதற்கு வகுத்துக் கொடுத்திருப்பாரோ...?

● ஆர். விஸ்வநாதன், சென்னை - 4

? சிவாஜி விட்டுச் சென்றுள்ள இடத்தை அடுத்து நிரப்பப் போகிறவர் யார்?

! அப்படி நிரப்பிவிட முடியுமென்றால் சிவாஜிக்கு என்னய்யா பெருமை?

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்

? மாஞ்சோலைப் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு ஏற்படாவிட்டால் துப்பாக்கி ஏந்திப் போராடத் தயார் என டாக்டர் கிருஷ்ணசாமி அறிவித்துள்ளது அதிர்ச்சியாக உள்ளதே?

! உங்கள் அதிர்ச்சிதான் எனக்கு ஆச்சரியம் அளிக்கிறது. கிருஷ்ணசாமியின் சித்தாந்தமே தடியெடுப்பதுதானே..?

● வளர்மதி ஆசைத் தம்பி, தஞ்சாவூர் ❑

? அதிகாரிகளை மானாவாரியாக மாற்றம் செய்து, கட்டாய காத்திருப்பில் வைத்து, சட்டத்தின் சந்து பொந்துகளில் ஜாலம் செய்யும் தமிழக அரசு, மூன்று பேரை மத்திய பணிக்கு அனுப்புவதற்கு மட்டும் முரண்டு பிடிப்பது ஏன்..?

! அதுவும் அரசியல்; இதுவும் அரசியல்; மத்திய அரசு மூன்று போலீஸ் அதிகாரிகளை அழைப்பதும் அரசியல். எல்லாமே அதிகார மமதையினால் விளையும் விபரீதங்கள்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை ★

? மக்களிடம் அமோக வரவேற்பைப் பெற்ற மினி பஸ் திட்டத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக வாபஸ் செய்து வரும் அ.தி.மு.க. அரசு சாதிக்கப்போவது என்ன..?

! உடனடிச் சாதனை : உள்ளாட்சித் தேர்தலில் வெற்றி வாய்ப்புகள் குறையும். நீண்ட கால சாதனை : கிராம மக்களின் சாபம்.



• குணமும்...



• ... கூட்டணியும்!



• தடியெடுத்தவர்...



• கவனமே கவலை!

❑ ரூ. 100 பரிசு பெறுபவர் :
**வளர்மதி ஆசைத் தம்பி,**
190, ஆறாவது கிராஸ், அருளானந்த நகர்,
தஞ்சாவூர் - 613 007

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
**என். பாலகிருஷ்ணன்,**
இந்தியன் வங்கி, டவுன்ஹால் ரோடு கிளை,
மேல மாசி வீதி, மதுரை - 625 001.

## 25

நம்மாழ்வார் பாசுரத்தை (பொய் நின்ற ஞானமும்) சொன்னேன்.

அவர் வாக்கு அம்ருதம்! வேதத்தையே தமிழ்ப்படுத்திக் காட்டுகிற அழகு - அவரால்தான் முடியும். முன்னுரைத்த திருவிருத்தம் என்று நம்மாழ்வார் விருத்தத்துக்குப் பெயர்.

இந்தத் திருவிருத்தம் மொத்தமும் ரிக் வேதம்.

திருவாசிரியம் ஏழு பாசுரங்கள். அவை யஜுர் வேதம் ஏழு காண்டத்தையும் காட்டுகின்றன.

பெரிய திருவந்தாதி என்ற பிரபந்தம் 87 பாடல்கள் அடங்கியது - அது மொத்தமும் அதர்வண வேத சாரம்.

1102 பாசுரங்கள் திருவாய்மொழி. அது ஆயிரம் சாகைகள் கொண்ட ஸாம வேதத்தை விவரிக்கிறது.

ஸாமவேதத்தில் உத்கீதம் என்பது ரொம்ப உயர்ந்தது. உத்கீதம் முதல் எழுத்து 'உ'; கடைசி எழுத்து 'த' (உத்கீத).

அதனால்தான் ஆழ்வாரும், திருவாய்மொழி ஆரம்பிக்கிற போது 'உயர்வற உயர் நலம் உடையவன்' என்று 'உ'விலே ஆரம்பிக்கிறார். முடிக்கிறபோது அதைத் 'த'வில் கொண்டு முடிக்கிறார்.

ரிக் வேதத்தில் முதல் மந்திரம் பிரும்ம வித்யைக்குப் பொருளாய் விளங்குவது. 'இந்த சரீரம் மோசமானது; அதில் பற்றை வைக்கலாமா...? மமகாரத்தை நாம் வைக்கலாமா...?' என்று கேட்கிறது.

சரீரம் எத்தனை மோசமானது என்று பிரத்யக்ஷமாய்த் தெரிகிறது. ஆகவே, சரீரத்தில் பற்றை வைக்காமல், ஆத்மாவுக்கு அந்தராத்மாவாக விளங்கக்கூடிய பகவானைத் தியானம் பண்ண வேண்டும். இதற்காகவே எம்பெருமான் சுத்தமாய், விகார சூன்யனாய், எப்போதும் இருக்கக் கூடியவனாய், வந்து அவதரிக்கக்கூடியவனாய் விளங்குகிறான். 'பொல்லா ஒழுக்கு, அழுக்குடம்பு' - இதெல்லாம் நாம் அடையாமலிருப்பதற்காக இந்த தோஷங்களெல்லாம் கொஞ்சம் கூட இல்லாத எம்பெருமான் 'இமையோர் தலைவா!' என்றழைக்கும்படியாக அவதரிக்கிறான்.

'இமையோர் தலைவா!' என்று இந்தப் பாசுரத்தை, காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருக்கும்படியான தேவாதிராஜனைப் பார்த்தே ஆழ்வார் சொல்கிறார். அந்த க்ஷேத்திரத்திலே எம்பெருமான் நித்தியம் வேதத்தை சிரவணம் பண்ணிக் கொண்டிருக்கிறான். வேதத்தை அந்த மாதிரி சிரவணம் பண்ணும்படியான க்ஷேத்திரம் வேறெங்கும் இல்லை.

ஏற்றமுடைய அந்த திவ்ய க்ஷேத்திரத்திலே, தேவாதிராஜனை, 'இமையோர் தலைவா, மெய்நின்று கேட்டருளாய்' என்று நிற்க வைத்து விடுகிறார் ஆழ்வார்.

"இங்கே கொஞ்சம் நிற்க வேண்டும்!" என்று அவர் சொன்னால், நின்று கேட்கிறான் அவன்!

"அடியேன் செய்யும் விண்ணப்பமே!" - 'தாஸ்ய விண்ணப்பம்' என்று



# குறையொன்றுமில்லை

சொல்லி பகவானையே நிற்க வைத்து விடுகிறார்.

**வை**ஷ்ணவ கிருஹங்களிலே பிராண வியோகம் ஆனவுடனேயே பிரேத சம்ஸ்காரம் பண்ணுகிறபோது, சுடுகாட்டுக்கு எடுத்துக் கொண்டு போவதற்கு முன்னால், ஹோமங்களெல்லாம் பண்ணுகிற சமயத்திலே கிருஹத்திலே ஸ்ரீசூர்ண பரிபாலனம் பண்ணுவார்கள். உரல், உலக்கை எல்லாம் வைத்து, அங்கே மஞ்சளை இடித்து, அந்தப் பிரேதத்துக்கு அலங்காரம் பண்ணுவார்கள். அப்பொழுது அங்கே திருவிருத்தம் என்கிற பிரபந்தத்தை ஸேவிக்க வேண்டும் என்பது சாஸ்திரம். பிரேதம் அங்கே இருக்கிறபோதே ஸேவிக்கிற பிரபந்தம் இது. ஆழ்வார் அப்படி அழகாக உபகரித்திருக்கிறார் அதை. ரொம்ப ஏற்றமுடைய பிரபந்தம். பரம வைராக்யத்தைக் கொடுக்கும்.

சம்ஸ்காரமெல்லாம் ஆன பிற்பாடு, கிருஹத்திலே பத்து நாள் தீட்டு இருந்தாலும், மறித்த இடத்திலேயே விளக்கேற்றி வைத்து, கர்மா பண்ணக்கூடிய குடும்பத்தினர் எல்லாரும் உட்கார்ந்து கருட புராணம் கேட்க வேண்டும். அந்தப் புராணத்தை அங்கே வாசிக்க, எல்லோரும் கேட்டால், அதன் அர்த்தங்களெல்லாம் கேட்டால், அந்த ஆத்மா உத்தம கதியை அடையும். அப்படிப்பட்ட விசேஷம் வாய்ந்தது கருட புராணம்.

அதே மாதிரி, திருவிருத்தப் பிரபந்தம் இருக்கிறதே, அது ரொம்ப அழகான பிரபந்தம். அப்படியே உருக்கிவிடும் நம்மை. அவ்வளவு அர்த்தபுஷ்டி உடையது. முதலிலேயே சொல்லிவிடுகிறது.

"பகவானே நான் சொல்வதை நீ நின்று கேட்க வேண்டும்... நீ பாட்டுக்கு சஞ்சாரம் பண்ணக் கூடாது!" என்று கட்டளையிட்டு விடுகிறது!

கோயில்களில் பார்த்தோமானால், உத்ஸவத்தின்போது புறப்பாடு நடக்கிறது அல்லவா, அப்போது இந்த முதல் பாசுரத்தை இரண்டு தடவை ஸேவிப்பார்கள். அப்படிச் சொல்லி முடிக்கிற வரைக்கும் பரமாத்மா நின்று கேட்டு விட்டுத்தான் கிளம்புவான்.

**எ**ம்பெருமான் நின்று கேட்டது திருவிருத்தம் என்றால், அவன் உட்கார்ந்து கேட்பது திருவாய்மொழி. திருவாய்மொழியை வீதியிலே சொல்கிற வழக்கம் கிடையாது. ஏனென்றால் அது உபநிஷத்! சாந்தோக்ய உபநிஷத். ஸாமவேதம்! அத்யயன உத்ஸவம் என்று விசேஷமாக நடக்கும் மார்கழி மாதத்திலே... பகவான் ஆஸ்தானத்திலே உட்கார்ந்திருப்பான். உட்கார்ந்து அழகாகத் திருவாய்மொழியைக் கேட்பான். வீதியிலே ஸேவிக்கக்கூடாது திருவாய்மொழியை.

முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதி, நான்முகன் திருவந்தாதி – 'உயர்ப்பா' என்று பெயர் அதற்கு – பெரிய திருவந்தாதி என்று சொல்வதுண்டு. இவையெல்லாமே செவிக்கினிய வெண்பாக்களால் ஆனவை.

வேதத்தைத் தமிழ்ப்படுத்திய ஆழ்வார் – சம்பவதி பவ : – நம் பிறப்பை அறுப்பதற்காகவே பகவான் வந்து அவதரிக்கிறான் என்பதைப் புகுத்திப் பாடியது ஆச்சரியமில்லை.

அவனுடைய அவதாரத்துக்குப் பிரயோஜனம் என்னவென்றால், நம்முடைய பிறப்பை அறுப்பதே அவன் அவதாரத்துக்குப் பிரயோஜனம்!

அதனால்தான் அர்ஜுனனைப் பார்த்துப் பரமாத்மா சொன்னான் : "நானும் பிறந்து, நீயும் பிறக்க வேண்டுமா?" என்று கேட்டான்.

"நான் எதற்குப் பிறக்கிறேன்...? உன் பிறப்பை அறுக்க... நானும் பிறந்து, நீயும் பிறந்து கொண்டேயிருந்தால் உன் பிறப்புக்கு என்ன ஏற்றம்?" என்று கேட்டான்.

நாம் பிறந்தால் நமக்கு இழுக்கு. பகவான் பிறந்தால் அது அவனுக்கு மேன்மையைத் தரும். நம்மை உய்விக்கவே அவன் பிறப்பதனாலே அவனுக்குப் பிறப்பு என்பதே ஒரு பாவனைதான். அதனால்தான் பாவய: என்ற திருநாமம் ஏற்பட்டது.

## அருள்வாக்கு

**பு**த்தியைப் படுக்கப் போடுகிறதுதான் சரணாகதி. அதற்கு அடையாளமாகத்தான் பௌதிக கார்யமாக, 'ஸிம்பாலிக்'காக நமஸ்காரம் என்று ஆக்கிக் கொடுத்திருக்கிறது. புத்தி என்று மூளையை ஸம்பந்தப்படுத்தித் தானே சொல்கிறோம்? பாதத்துக்கு மேலே எட்டாம் சாணாகத் தலையுச்சியிலிருக்கிற அந்த மூளையை பூமிமட்டத்தில் படிய விட்டுத்தானே கீழே விழுந்து நமஸ்காரம் பண்ணுகிறோம்! 'கீழ்ப்படிதல்' என்ற உள் பாவத்திற்கே நமஸ்காரம் வெளியடையாளம். வேதத்திற்கு, வேதத்தின் பரம தாத்பர்யமான ஈச்வரனுக்கு, மூளை கீழ்ப்படியும் சரணாகதிக்கு அடையாளமாக

சரீரம் கீழே பூமியில் படியும் படிக் கிடக்கிறதே நமஸ்கார க்ரியை.

இங்கே புத்திக்கார்யமில்லை. அதன் இடத்தில் 'ச்ரத்தை', 'நம்பிக்கை' என்ற உணர்ச்சி இருக்கிறது. ப்ரத்யக்ஷமாக ஒன்றைத் தெரிந்துகொள்வதில் - ஜ்வாலை விசினால் உஷ்ணம் என்று, பனிவாடை விசினால் குளிர் என்று, இப்படிப் பிரத்யக்ஷமாக அநேகம் தெரிந்துகொள்வதில் - இது உஷ்ணந்தான், இது குளிர்தான் என்று புத்தி எப்படி ஸந்தேஹமில்லாமல் நிச்சயமாக இருக்கிறதோ அந்த மாதிரியே, அப்ரத்யக்ஷமான பரலோக, ஆத்மலோக விஷயத்தில் வேத - சாஸ்த்ரம் சொல்கிறதுதான் ஸத்யம் என்ற நிச்சயமான உணர்ச்சியாக அந்த நம்பிக்கை இருக்க வேண்டும். அதற்குத்தான் 'ச்ரத்தை' என்று பெயர். அந்த ச்ரத்தையை மூலதனமாகக் கொண்டால் அது நம்மைக் கொண்டு போய் நிறுத்தும் பரிபூர்ணமான கீழ்ப்படிதலுக்கே 'சரணாகதி' என்று பெயர். அங்கே நம் புத்திக்கு வேலை இல்லை; எந்தக் கேள்விக்கும் இடமில்லை.



**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

**பா**வயதி இதி பாவ : என்பதை விளக்கினேன். வேதயதி இதி வேத : - இதுவும் அவன் ஏற்றத்தைச் சொல்லும் வாக்யம். அவனை நன்கு உணர்த்துவதனாலேயே அதற்கு வேதம் என்று பெயர். வேதம் என்பதே எம்பெருமான் நமக்கு நன்கு காட்டித் தரும்படியான உயர்ந்த வான்மயம் என்று பொருள். அவனைக் காட்டித் தருவதற்குப் பிரமாணம் மற்றொன்றில்லை. பரமப்பிரமாணம் என்று பெயர் வேதத்துக்கு.

பிரமாணம்

பிரமேயம்

பிரமாதா என்று சொல்வார்கள் சாஸ்திரத்திலே.

மேயம் என்றால் நாம் அறிய வேண்டிய பொருள்.

மாணம் என்றால் அறிவிக்கும் சாதனம்- உயர்ந்த சாதனம் பிரமாணம். பிரமாணத்தினாலே, அறியப்பட வேண்டிய வஸ்துவைத் தெரிந்து கொள்கிறோம்.

பரமப் பிரமாணம் எது என்றால் வேதம்தான்.

பரமப் பிரமேயம் - பகவான் எம்பெருமான்.

அவனை உணர்ந்தவர்களெல்லாம் இருக்கிறார்கள் பாருங்கள், அவர்களுக்கெல்லாம் 'பிரமாதா' என்று பெயர். மகா ஞானிகளான ஆசார்ய புருஷர்கள், ஆழ்வாராதிகள் எல்லோருமே எம்பெருமானை அனுபவித்தவர்கள். அணு அணுவாக அனுபவித்துச் சொன்னார்கள்.

ஆகையினாலே இந்த மூன்று அறிவும் நமக்கு வேண்டும். பிரமாதா, பிரமேயம், பிரமாணம்.

காமதேனுவினுடைய திருநாமங்களை வகைப்படுத்தி வேதம் சொல்கிறது. அதைக் கேட்டு நாம் காமதேனுவின் திருநாமங்கள் என்று நினைத்துக் கொள்ள முடியாது. அந்த காமதேனுவுக்கும் அந்தர்யாமியாக இருக்கும்படியான எம்பெருமான்தான் இவற்றால் சொல்லப்படுகிறான் என்று வேதபாஷ்யாதிகாரிகளான வித்யாரண்ய சுவாமி என்ன, பட்டபாஸ்கராச்சார்யார் என்ன... இவர்களைப் போன்ற மகான்கள் எல்லோருமே சொல்கிறார்கள்.

ஸ்தோத்திரப் பிரியன் என்று பகவானுக்குப் பெயர் உண்டு. ஸஹஸ்ரநாமத்திலே பின்னாலேயே வருகிறது பாருங்கள் :

*ஸ்தவ்ய : ஸ்தவ்யப் ப்ரிய :*

ஸ்தோத்திரிக்கத் தகுந்தவன், ஸ்தோத்திரத்தில் ரொம்ப இஷ்டம் உடையவன். அப்படி அவன் இல்லாவிட்டால் நாம் ஸஹஸ்ரநாமத்தைச் சொல்ல வேண்டியதேயில்லையே...!

நாம் ஸ்தோத்திரம் செய்தால் அவன் கேட்டு அனுபவிக்கிறான். 'நம'கம் முழுதும் அவன் ஸ்தோத்திரம். அதை ஆனந்தமாகக் கேட்டு அனுபவிக்கிறான்.

அடுத்தது சமகம் - 'அதைக் கொண்டு வா! இதைக் கொண்டு வா!' என்று அவன் சந்தோஷமாக இருக்கிறபோதே எல்லாவற்றையும் கேட்டுக் கொள்கிறது.

அவனும் புளகாங்கிதம் அடைந்து, கேட்ட எல்லாவற்றையும் கொடுத்து விடுகிறான்!

லௌகிகத்திலேயும் அப்படித்தானே இருக்கிறது!

(வளரும்)

## ரிமோட்

# இப்படியும் சிலபேர்!

Horror of Horrors! பயங்கர சைஸ் மரப்பாச்சிகளைப் போலக் கருகிக் கட்டை கட்டையாய்க் கிடந்த ஏர்வாடி சடலங்களை, ராஜ் நியூஸில் பார்த்தபோது, 'ஐயோ! என்ன கொடுமை!' என்று நெஞ்சு பிளந்தது. ஆனால் இன்னும் பெரிய கொடுமை -

தங்கள் உறவினர் ஒரு மன நோயாளி என்பது வெளியே தெரிந்தால் அவமானம் என்பதற்காகப் பொய் விலாசம் கொடுத்துக் காப்பகத்தில் சேர்த்துவிட்டு, இறந்தவர்களுக்கு நஷ்ட ஈடாக ஐம்பதாயிரம் ரூபாய் கிடைக்கிறது என்று தெரிந்தவுடன் சான்றுகளைத் தூக்கிக் கொண்டு வந்து நிற்கிறார்களே சில மனிதர்கள்!

'Shame on you!' என்று கத்த வேண்டும் போலிருக்கிறது.

**மா**ம்பலம் கொசுவுக்கு மகிமை போய்விட்டது. 'பாரதி'யில் கொசு ஒழிப்புப் பற்றிப் பேசிய ஒரு பெண்மணி இதைச் சொன்னார். மாம்பலத்தில் கொசு குறைந்து, நங்கநல்லூரில் அதிகரித்திருக்கிறதாம். தேங்கிய தண்ணீரில்தான் கொசு உற்பத்தியாகிறது என்பதால் வீட்டுக்குள்ளேயே கூட, பூ ஜாடி, தொட்டி முதலியவற்றில் தண்ணீர் தேங்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றவர், கொசு மருந்துகளுக்குப் பதில் சாமந்தி, துலுக்க சாமந்தி முதலான பூக்களை உலர்த்திப் பொடி பண்ணிப் புகை போட்டால் கொசு வராது என்று தெரிவித்தார்.

ஒரு நூதன முறையும் கூறினார். படுக்கையறையில் போர்வை, பெட்ஷீட், கர்ட்டன் முதலானவை டார்க் கலரில் இல்லாமல் லைட் கலரில் இருந்தால் கொசு வராதாம். இரவில் உடுத்திக் கொள்ளும் புடவை, நைட்கவுன்



ஆகியவையும் லைட் கலரில் இருப்பது அவசியம் என்றார்.

"போச்சுடா சாமி! இந்தப் புதுச் செலவுக்குக் கொசுக்கடியே தேவலை!" என்று கணவன்மார்கள் சொல்வார்கள். 'The one book that always has a sad ending is the cheque book' என்று அவர்களுக்குத்தானே தெரியும்?

வினோத்

**நா**ன் இப்படி இப்படி வைத்தியம் செய்கிறேன் என்று டாக்டர்கள் சொல்வதையும், நான் இன்னின்ன சிகிச்சைகளால் குணமடைந்தேன் என்று முன்னாள் நோயாளிகள் சர்டிபிகேட் கொடுப்பதையும் பார்த்துப் பார்த்து அலுத்துவிட்டது. சந்தேகமில்லை. கூடவே, தடக் தடக்கென்று துடிக்கிற இருதயம், பயங்கரமாய் அசைகிற விழி, குகை மாதிரி உள்ளே உள்ளே போகிற காது முதலானவற்றையும் படமாகக் காட்டுவதால் ராத்திரி தூக்கத்தில் கன்னாபின்னாவென்று சொப்பனம் வருகிறது.

ஆனால் டாக்டர் ஜெ.ஆர்.கிருஷ்ணமூர்த்தியின் பேட்டி was an exception (பொதிகை) தான் செய்து வரும் அரிய சித்த வைத்திய ஆராய்ச்சிகளைப் பற்றி மட்டுமே சொன்னது மாறுதலான சந்தோஷம் தந்தது. தோல் சம்பந்தப்பட்ட நோய்களுக்கான மருந்துகளை அரசு அங்கீகாரத்துடன் தயாரிக்கும் இந்த டாக்டர், நமது மூலிகைகளின் அடிப்படைகளை வைத்துத்தான் இங்கிலீஷ் மருந்துகள் செய்யப்படுகின்றன என்றார்.

ஏதாவது ஆராய்வதிலும் எதையாவது கண்டு பிடிப்பதிலும் தனக்கு ஆர்வம் உண்டு என்று கூறியவர், அதற்கு ஆதாரமாக, லேட்டஸ்டாக ஐம்பது பைசா செலவில் ஒரு பேனா கண்டுபிடித்துக் குழந்தைகளுக்குக் கொடுப்பதாகச் சொன்னார். All happiness is in the mind.

**'ஜெ**யில் பாண்டியன்' என்ற படத்துக்குப் பூஜை போட்ட காட்சியை ராஜ் டி.வி.யில் காட்டினார்கள். தயாரிப்பாளர், டைரக்டர், இசை அமைப்பாளர், காமெராமேன் ஆகிய சகலரும் வரிசையாக வந்து நின்று கற்பூரத்தைக் கண்ணில் ஒற்றிக் கொண்டார்கள்.

ஹீரோவும் ஹீரோயினும்? Missing! காரணம், கிசுகிசு எதுவுமில்லை. யார் ஹீரோ ஹீரோயின் என நிச்சயம் செய்யாமலே பூஜை மட்டும் போட்டுவிட்டார்களாம். Strange are the ways of Kollywood.

**வி**கடவின் அரட்டை அரங்கத்தில் எது கிடைக்கிறதோ இல்லையோ, இரண்டொரு குட்டிக் கதைகள் கிடைத்துவிடுவது வழக்கம். உதாரணமாக, இரண்டு பேர் சொன்னவை :

1. தீக்குச்சி : நான் அடக்கமாகப் பெட்டிக்குள்ளே இருக்கிறேன். அதனால்தான் எனக்குப் பெருமை.

தீப்பெட்டி : அட, மடத் தீக்குச்சியே! ஒரு தரம் கிழித்ததும் நீ எரிந்து அழிந்து போகிறாய். நான் எத்தனை தரம் உரசினாலும் அப்படியே இருக்கிறேன், பார்!

2. எவனுக்கு இந்திய மனைவி, சீன உணவு, இங்கிலாந்து சீதோஷ்ணம், அமெரிக்கப் பொருளாதாரம் கிடைக்கிறதோ அவன்தான் உலகத்திலேயே சந்தோஷமான மனிதன். பெண்ணை முதலிடத்திலும் பொருளாதாரத்தைக் கடைசியிலும் வைத்ததைக் கவனியுங்கள்.

அரட்டை அரங்கத்தில் பேசியவர்களில் ஒருவர் வரலாற்று எம்.ஏ. பட்டதாரி. அதல்ல சிறப்பு. பிறவியிலேயே பார்வை இழந்தவர்.

இந்தத் தகவலை விசு அறிவித்தபோது அரங்கமே அதிர்ந்தது கரகோஷத்தில். 'Never, Never, Never, Never give up' என்றார் சர்ச்சில்.



கல்கி 19.8.2001

''கிரிக்கெட் ஆட்டக்காரரின் பெண் என்று தெரிஞ்சும் அவகிட்ட லவ் லெட்டர் குடுத்தது தப்பாப் போச்சு!''

''என்ன ஆச்சப்பா?''

''மிடில் பல் கிளீன் போல்டு!''

– புளியரை கணேசன்

கவிதாவிடம் மீண்டும் அப்பா சொல்லிச் சொல்லிப் பார்த்தார். "இவ்வளவு பிடிவாதம் கூடாதும்மா. என் கஷ்டத்தைப் பத்தி நீ ஏன் யோசிக்கிறே? நான் சொல்றதைக் கேட்டு நீ தலையாட்டினாப் போதும். அந்த டாக்டர் வரனை எப்பாடு பட்டாவது முடிச்சுடலாம்..." என்றார்.

கவிதா, தீர்மானமாகச் சொன்னாள்.

அம்மா அடுக்களையில். "அக்கா.. என்னைப் பத்தி நீ யோசிக்க வேணாம். மூணு நாலு வருஷம் நா சம்பாதிச்சாப் போதும். என்னுடைய கல்யாணத்தை முடிச்சுடலாம்..."

# மறக்கத் தெரியாத பறவை

"அப்பா... எந்த விஷயத்தையும் கேட்டுட்டு, தலையாட்டிட்டுப் போறமாதிரி நீங்க என்னை வளர்க்கலை. ஏன், எப்படி, எதுக்குன்னு யோசின்னு சொல்வீங்க. எது சரி, எது தவறு.... நாம் செய்யும் காரியத்தால் எவருக்கேனும் துன்பம் ஏற்பட வாய்ப்புள்ளதா... எல்லாத்தையும் பாருன்னு சொல்வீங்க... அப்படி எல்லாத்தையும் பார்த்துட்டு தானே நான் சொன்னேன். இந்த இடம் வேண்டாம்னு. இந்தக் கல்யாணம் உங்களுக்கு ரொம்பவும் சிரமம் தரும். நம்மால் அவங்க கேட்கிற அளவுக்கு நகை போட முடியுமா? குடி இருக்கிற வீட்டை அதுவும் பல தலைமுறைகளா வாழ்ந்த வீட்டை வித்துடலாம்னு சொல்றீங்க. வீட்டை வித்துட்டா எங்கே போவீங்க? எல்லாத்தையும் யோசிங்க. என்னைப் பற்றி மட்டும் சிந்திக்காம, சில வருடங்களில் கல்யாணத்துக்குத் தயாராகப் போகிற ஹேமாவையும் நினைச்சுப் பாருங்க. எல்லாத்தையும் எனக்குப் பண்ணிட்டா, அவளுக்கு என்ன செய்வீங்க? யோசிச்சீங்களா?" என்றாள்.

அப்பா கையைக் கட்டிக்கொண்டு சோபாவில் சாய்ந்தார். தங்கை வால் யூமைக் குறைவாக வைத்துக்கொண்டு டீ.வி. பார்த்துக்கொண்டிருந்தாள்.



தங்கை பெரிய மனுஷி போல பேசினாள்.

"ஹேமா... நா என்ன கல்யாணம் வேணாம்னா சொல்றேன்? நம்ம சக்திக்குத் தகுந்த இடமாப் பார்ப்போம்னுதானே சொல்றேன்?"

"இப்ப நாங்க கொஞ்சம் கஷ்டப்பட்டாலும் பிறகு ஆயுசு முழுக்க எந்த மனக்கவலையும் இல்லாம இருப்போம்ல. ஏட்டிக்குப் போட்டியான இடத்துலயோ வசதி குறைச்சலான இடத்துலயோ கொடுத்துட்டு, நாளைக்கு அவஸ்தைப் பட்டுட்டு இருக்கவா?"

அப்பா சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார்.

கவிதா ஒரு தனியார் நிறுவனத்தில் பணி புரிகிறாள். அப்பா - இந்த ஆறு மாதமாகவே அவளது

"அக்கா.. என்னைப் பத்தி நீ யோசிக்க வேணாம். மூணு நாலு வருஷம் நா சம்பாதிச்சாப் போதும். என்னுடைய கல்யாணத்தை முடிச்சிடலாம்..."

"ஹேமா... நா என்ன கல்யாணம் வேணாம்னா சொல்றேன்? நம்ம சக்திக்குத் தகுந்த இடமாப் பார்ப்போம்னுதானே சொல்றேன்?"



ஜாதகத்தை எடுத்துக்கொண்டு நல்ல வரன் தேடி அலைகிறார். ஒரு டாக்டர் வரன் வந்திருந்தது. ஜி.ஹெச்சில் பணிபுரிகிறார். சொந்தமாக க்ளினிக் நடத்தி வருகிறார். நல்ல வசதி. கம்பீர அழகு. டாக்டர் வீட்டாருக்கும் கவிதாவைப் பிடித்துப்போனது. ஜாதகம் ரொம்ப அம்சமாக இருப்பதால் முடித்து விடத் தீர்மானித்தார்கள். ஆனால் அவர்கள் நிறைய எதிர்பார்த்தார்கள்.

அவர்களுடைய லிஸ்ட்டை படிக்கப் படிக்க கவிதாவுக்குக் கசந்து போனது. மாப்பிள்ளை வீட்டார், ஹாலில் உட்கார்ந்திருப்பதையே கவிதா மறந்து போனாள். முதலில் மாப்பிள்ளையை ஆசையாய்ப் பார்த்தவள், பிறகு பார்க்க வேண்டும் என்ற எண்ணத்தையே விட்டு விட்டாள்.

அவளுக்குப் பேராசைகள் இல்லை.

**யோகி**

நியாயமான ஆசைகள் மட்டுமே உண்டு. தன்னளவுக்கு ஒரு சாதாரண கிளார்க் மாப்பிள்ளை போதும் என்று முடிவே செய்துவிட்டாள். டாக்டர், இன்ஜினியர் இவர்கள்தான் ஆண்களா? அப்பாவிடம் சொன்னால் கேட்க வில்லை. எதிர்காலம் நல்லா இருக்கணுமே..." என்பார். "டாக்டர் அல்லாதவர்களைக் கட்டிக்கிட்டவங்க எல்லாம் நல்லா இல்லையா?"ன்னு பதில் கேள்வி கேட்டாள்.

அவர்கள் பேராசை லிஸ்ட்டைப் பார்த்து, அப்பா, இந்த இடம் தோது படாது என்று சொல்லிடுவார் என எதிர்பார்த்தாள். ஆனால் நடந்தது வேறு. அப்பா எல்லாவற்றுக்கும் தலையாட்டி விட்டு, "நீங்க கேட்டபடியே செஞ்சுடுவோம்" என்று அனுப்பி வைத்தார். இவரால் எப்படிச் செய்ய முடியும்?" கவிதா குழம்பினாள்.

அம்மாவைத் தவிர்த்து மூன்று பேரும் வேலைக்குப் போகிறோம். அப்பாவுக்கு நல்ல சம்பளம். தனக்கு சுமாரான சம்பளம்தான். தங்கைக்கு இப்போது சம்பளம் குறைச்சல்தான் என்றாலும் சம்பள உயர்வுக்கு வழி வகுத்திடும் வேலை. இப்போது அப்பாவின் சம்பளத்தில் பெருமளவு, வீட்டுக் கடனுக்கே போய் விடுகிறது. இடம்தான் பூர்வீகச் சொத்து. நாலு தலைமுறை கடந்தும் நிலைத்துள்ளது. ஓட்டு வீடாக இருந்தது. எங்கள் இரண்டு பேரின் சம்பளம் சாப்பாட்டுக்கு. வெளியே இருந்து பார்ப்பவர்களுக்கு மூணு பேர் சம்பாதிப்பதாய்த் தோன்றும். ஆனால் மிச்சம் என்று ஒன்றுமில்லை.



"பக்தி படம் எடுத்து ரிலீஸ் செய்தீர்களே! ரிஸல்ட் எப்படி?"

"கோவிந்தா! கோவிந்தா! கோவிந்தா!"

— உ. ராஜாஜி

வீடு கட்ட ஆரம்பித்ததில்தான் பிரச்னையே. அப்பா சின்னதாக கீழ்ப் போர்ஷனை மட்டுமே கட்ட ஆரம்பித்தார். காண்ட்ராக்டர், "மாடியும் எடுத்துடுவோம். பின்னால எடுத்தா காசு விரயம். செலவு டபுள் மடங்கா ஆயிடும்" என்று நைஸாகப் பேசி கட்டி விட்டார். பணம் போதாமல், சேர்த்து வைத்திருந்த நகைகளில் கைவைக்க வேண்டியதாய்ப் போயிற்று.

**மா**ப்பிள்ளை வீட்டார் போனதும் கவிதா கேட்டாள். "எப்படிப்பா ஒத்துக்கிட்டீங்க? அவங்க கேட்கிற அளவுக்கு நமக்கு வசதி இல்லையே..."

"இந்த வீட்டை வித்துடுவோம்" என்றார், சட்டென்று.

மிக மிக ஆசையுடன், அக்கறையுடன் கட்டிய வீடு.

"நான் இப்பத்தான் சந்தோஷமா இருக்கேன்" என்று கிரஹப்பிரவேசம் அன்று ஆனந்தமாய்ச் சொன்னார். கட்டி முழுசாய் ஒரு வருஷம் கூட ஆக வில்லை. விற்கப் போகிறாராம்!

"அதெல்லாம் வேணாம்ப்பா. இந்த இடம் வேணாம். நான் முதலில் சொன்ன மாதிரி நம்ம சக்திக்குத் தகுந்த இடமாப் பாருங்க. நான் எப்படிப்பட்ட நிலையிலும் அட்ஜஸ்ட் பண்ணி இருந்துப்பேன். எனக்குப் பெரிய எதிர்பார்ப்பு இல்லை. தயவுசெய்து, இந்த வீட்டை விற்காதீங்க. கடனும் வாங்காதீங்க. இருக்கிறதை வைச்சு சரிக் கட்டக்கூடிய இடமாப் பாருங்க..." என்றாள்.

அப்பா - அவள் சொல்வதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல், தினமும் "என்னம்மா முடிவு பண்ணியிருக்கே...? முடிச்சுடலாம்மா... அவங்க டெய்லி ஃபோன் பண்றாங்க" என்பார். இந்த வீட்டை விற்க கவிதாவுக்கு விருப்பம்



''ஸ்விட்சைத் தொட்டாலே ஷாக் அடிக்குது! என்னங்க செய்ய?''

''ஸ்விட்சுக்கு மேலே ஷாக்கிரதைனு ஒரு தாளில் எழுதி ஒட்டிடு!''

— உ. ராஜாஜி

இல்லை. இந்த வீட்டை விற்றுத்தான் தன் திருமணம் என்றால் – திருமணமே தேவையில்லை என்பதில் உறுதியாய் இருந்தாள்.

தனக்கு எல்லாவற்றையும் செலவு செய்துவிட்டால் தங்கைக்கு என்ன செய்வது? தனக்குக் கல்யாணமாகி விட்டால் தன் சம்பளம் இவர்களுக்கு வரப் போவதில்லை. அதோடு டாக்டரின் அம்மா, ''கல்யாணத்துக்குப் பிறகு வேலைக்குப் போக வேண்டாம்'' என்று கண்டிஷன் வேறு போட்டிருந்தார்கள். லோனில் கட்டிய வீட்டை எப்படி விற்க முடியும்? சிக்கல் உள்ளதே!

கவிதா, அம்மாவிடம் இது பற்றிப் பேசினாள். ''சரிம்மா... இப்பத்தான் நாலு நாளா அவர் இதைப் பத்திப் பேசலை. வேண்டாம்னு முடிவு பண்ணிட்டார் போல் இருக்கு. நாம வேற ஏதாவது பேசி அவருக்கு ஞாபகப் படுத்தணும்மா'' என்றாள்.

அடுத்து வந்த நாட்களில் கல்யாணத்தைப் பற்றி அப்பா எதுவும் பேச வில்லை.

''ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. பிறரைக் கஷ்டப்படுத்தித்தான் நாம் சந்தோஷமாய் இருக்க வேண்டுமா? எனக்கென்று இனிமேலா ஒருவன் பிறக்கப் போகிறான்... எங்கேயோ பிறந்திருக்கிறான். ஒருநாள் சந்திக்கத்தானே போகிறேன்? ஆனால் – அவன் நிச்சயம் இந்த டாக்டர் இல்லை.''

– கவிதா தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள்.

அன்று கவிதா அலுவலகத்திலிருந்து வீட்டுக்கு வந்த போது – வீடு ஒருவித மலர்ச்சியில் இருந்தது. ஹேமா அதற்குள்ளாக வந்து விட்டாளா? எப்போதும் லேட்டாகத்தானே வருவாள்? ஏதோ மாறுதல் தெரிந்தது. அம்மாவின் முகத்தில் ஆனந்தம். அப்பா ஷேவ் செய்து ஜம்மென்று இருந்தார்.

''என்னப்பா... என்ன விஷயம்?'' என்று கேட்டாள் கவிதா.

அப்பாவும், அம்மாவும் சொல்வோமா, வேண்டாமா என்று யோசிப்பது மாதிரி இருந்தது. எப்படிச் சொல்வது என்பது மாதிரி தவிர்த்தார்கள்.

அப்பா தொண்டையைச் செருமிக் கொண்டு சொன்னார். வார்த்தை வரவில்லை. பிறகு ஒருவழியாய்ச் சொன்னார். ''நீதான் அந்த இடம் வேணாம்னு சொல்லிட்டே. ஆனா மாப்பிள்ளை வீட்டுக்காரங்க ஓயாம வந்தாங்க. விவரம் சொன்னேன்'' என்று நிறுத்தி விட்டுத் தொடர்ந்தார்.

''பெரிய பொண்ணு வேணாம்னு சொல்லிடுச்சா? அப்ப சின்னப் பொண்ணைப் பேசலாமேனு அபிப்பிராயப்பட்டாங்க. அவங்களுக்கு நம்ப குடும்பத்தைப் பிடிச்சுப் போச்சு. நம்மளை விட மனசு இல்லை. ஹேமாவோட ஜாதகமும் நல்லா பொருந்திப் போச்சு. இன்னிக்கு வர்றேன்னு சொல்லியிருக்காங்க. பேசி முடிக்க.''

கவிதாவுக்கு என்னவோ போல் இருந்தது. அது என்னவென்று தெரியவில்லை.

''ஹேமா என்னப்பா சொன்னா?'' தயக்கத்துடன் கேட்டாள்.

''உன் தங்கைக்கு இதுல பூரண சம்மதம்'' என்றார் அப்பா. ○

பூவரச வீட்டின் முன்பு டிராக்டர் ஒன்று வந்து நின்றது. டிராக்டரது டிரெய்லரின் ஒரு பாதியில் சாமான்கள் குவிந்திருக்க, மறு பாதியில் பாய் விரித்து அந்தக் குடும்பத்தினர் அமர்ந்திருந்தனர். வெயிலுக்காக ஒரு போர்வையைத் தலைக்குமேல் கூடாரம் போல் பிடித்து, தலைமறைவாக அவர்கள் ஊருக்குள் நுழைந்த காட்சியை சரவணனும் சகாக்களும் ஊரெல்லைப் பாலத்திலேயே பார்த்து விட்டனர். அவர்களுக்குள் கிளர்ச்சிக் கூடிப் போனது. ஆனால் 'மிட்லாங் ஷாட்'டில் டிராக்டர், அதன் பின்புறம், அதில் ஒருபுறம் சாமான்கள், மறுபுறம் சாதுவாய்ப் படர்ந்த ஒரு போர்வை, அதில் அங்கங்கே முட்டைக்கோஸ் போன்று புடைத்த தலைகள் என்று இன்பம் குறைவான காட்சி அது.

உடனே கிளம்ப எத்தனித்தவர்களை மணி தடுத்தான். "வேணாம்டா. கொஞ்சம் அவங்க போயி செட்டிலாகட்டும். பறக்க வேணாம்" என்று சொன்னான். கிளம்ப எத்தனித்தவர்கள் மீண்டும் பாலத்தில் அமர்ந்து பேச ஆரம்பித்தார்கள். வேறென்ன பேச்சு அங்கே எழ முடியும்? வந்துள்ள குடும்பம் பற்றியே பேச்சு சுத்திச் சுத்தி வந்தது.

மணிதான் தகவல்கள் சேகரித்தவன். வீரையன் சொன்னவற்றை முழுதும் நம்ப முடியாது என்று எண்ணி தன்னால் முடிந்த சாத்தியப் பாடுகளில் விசாரித்திருந்தான்.

"அந்த அம்மா புருசன் மிலட்ரிக்காரன், சண்டையில செத்துட்டான்டா. அதுனால என்னாச்சுன்னா, அந்த அம்மா விதவை ஆயிட்டா."

சரவணன் தலையில் கைவைத்தான். மணி இப்படித்தான் எளிய உண்மைகளைக்கூட விரிவாக விளக்கி, சலிப்பூட்டுவான். சுச்சிதமாகவே பேசத் தெரியாது.

"புருசன் செத்தா விதவைதான்டா, என் அறிவு... மணி."

"சொல்றதைக் கேளு" - இது மணி.

"மூணு பொண்ணுக. மூணுக்கும் அம்சமான பேரு. என்னாங்கறே? முதல்ல அம்சவேணி அப்புறம் கிருஷ்ணவேணி, நீலவேணி எப்படி?

"திரிவேணி சங்கமம்தான். வீட்ல தண்ணிப் பஞ்சமே இருக்காதே!"

"ஆனா காசுக்குக் கஷ்டப்படுற குடும்பம்."

## பாஸ்கர் சக்தி

# 3



அந்தக் குடும்பத்தில் கண்ணீர்ப் பஞ்சமும் இருக்காது எனத் தோன்றியது சரவணனுக்கு.

''பத்தாக்குறைக்கு ஆம்பளையாப் பொறந்தவன் ஒரு குள்ளப் பையன், இருபது வயசுக்குமேல ஆகுதாம். ஆளு, நம்ம முழங்கால் அம்புட்டுத்தான் இருப்பானாம்.''

"நிஜமாவா...? அடப்பாவமே!"

***

குள்ளப் பையனான 'அழகு' என்ற அழகர்சாமி குதித்து இறங்கினான். சுமாரான ரோட்டில் டிராக்டர் பயணம் எலும்பு இணைப்புகளுக்கு எதிரான சதி. வேணிகளும் அவனைத் தொடர்ந்து கவர்ச்சிகரமாகக் குதித்தார்கள். ஆனால் இவ்வரிய காட்சியைக் காண வாய்க்காமல் நண்பர்கள் குழாம், ஊரெல்லையில் இந்த வீட்டைப் பற்றி பந்தி பரிமாறிக் கொண்டு, பசியாறிக் கொண்டிருந்தது.

லீலா கடைசியாக இறங்கினாள். நாற்பது வயது இருக்கலாம். ஆனால் முப்பத்தைந்துக்கு மேல் மதிக்க முடியாதொரு அழகுடனிருந்தாள். இன்னும் நரை பரவாத தலை.

***

"அம்மாவே, அழகாயிருப்பாடா. பொண்ணுக அதுக்கும் மேலடா.. அவங்க மட்டும் சினிமாவுல நடிக்கப் போனா பத்மினி சிஸ்டர்ஸ் மாதிரி கலக்கிருவாங்கன்னு வீரையன் சொன்னாப்ல."

"படிக்கலியாடா அவங்க?"

"கடைசிப்பொண்ணு நீல வேணி மட்டும் ஸ்கூல் போகுது. அம்சவேணியும், கிருஷ்ண வேணியும் படிச்சு முடிச்சிட்டாப்ல."

"என்ன படிச்சிருக்காங்க?"

"ஆளுக்குப் பத்தாவது படிச்சிருக்காங்க." இது மணி.

"ரெண்டு பேரும் சேத்து இருபதாவது படிச்சிருக்காங்களாக்கும். இந்த மணிப்பய எப்பதான் கரெக்டா பேசிப் பழகுவான்னே தெரியலடா'' என்ற சுந்தர் ஆவலுடன் மேலும் சொன்னான்.

"சரிடா கெளம்புவோமா?'' என்று.

***

எல்லாம் இறக்கியாயிற்று. பித்தளை மற்றும் அலுமினியப் பாத்திரங்களடங்கிய சாக்கு, ஸ்டவ் அடுப்பு, மளிகைச் சாமான்கள், துணிமணி மூட்டைகள் எல்லாம் தரையில் பரப்பிவிட்டு டிராக்டர்காரன் கிளம்பிப் போய்விட்டான்.

அழகு பூட்டைத் திறந்தான். சரியாக அந்தத் தாழ்ப்பாள் அளவு உயரம். பூட்டைத் திறக்கையில் அவனது கண் நேராக சாவித் துவாரத்துக்குச் சமமான மட்டத்தில்



இருந்தது. நெற்றிக்கு நேராக கை வைத்து சாவியைச் செலுத்தி பூட்டைத் திறந்தான்.

அந்த ஒற்றைக் கதவைத் திறந்ததும் மூக்கில் ஒரு வாசனை நிரடியது. நெடுநாளாய்ப் பூட்டிக் கிடந்த புழுங்கிய வாசனையோடு சுண்ணாம்பு வாசனையும் சேர்ந்து வினோதமாய் மூக்கை உசுப்ப, அழகு தும்மினான். அழகு தும்முவதே ஒரு வினோதமாய்த் தெரிந்தது. ஒவ்வொரு தும்மலுக்கும் நுனிக் காலால் எம்பித் தும்மி விட்டு பழைய நிலைக்கு மீண்டான்.

அவனோடு சேர்ந்து இரண்டு சகோதரிகளுக்கும் தும்மல் வந்துவிட்டது.

சற்றுத் தள்ளி வந்து நின்றிருந்த சகாக்களில் சுந்தர் சொன்னான், "அம்சவேணி தான்டா அழகாத் தும்முறா."

தும்மல் முடிந்த அழகு சட்டென்று சுறுசுறுப்பானான். கொண்டு வந்திருந்த சாமான்களில் தேடித் துடைப்பத்தை எடுத்தான். வீட்டுக்குள் நுழைந்து பரபரவென்று பெருக்க ஆரம்பித்தான். அசாத்திய வேகத்துடன் சிலம்பமாடுவது போல் அவன் பெருக்குவதைப் பார்த்தால் முதலில் சிரிப்புதான் வரும். வீட்டினுள் புழுதியினூடே அவன் அவ்வப்போது தெரிந்தான். பெண்கள் வெளி வாசலில் கிடந்த சாமான்களைச் சுற்றுச் சுவர் தாண்டி எடுத்துப் போய் ஓட்டுச் சரிவு முன்பு இறங்கியிருந்த திண்ணையின் அருகே வைத்தனர்.

கிருஷ்ணவேணி வீட்டின் இடப்புறமாகச் சென்றாள். அங்கிருந்து நேராக இருநூறு மீட்டர் தள்ளி சரவணன் குழு நின்றிருந்தது. இப்போது அவர்களின் நேர்ப் பார்வைக்கு கிருஷ்ணவேணி தெரிந்தாள்.

"மூணு பேரில முதல் மார்க் இவளுக்குத் தான்டா."

---

**"நீ அதிகமா குடிக்கறதுக்கு உன்னோட கெட்ட ஃபரண்ட்ஸ்தான் காரணமா..! உன் ஃபரண்ட்ஸ்தான் குடிக்கவே மாட்டாங்களே?"**

**"அதனாலதான், எல்லாத்தையும் நானே குடிக்க வேண்டியதாயிருக்கு!"**

***- ஜி.வி.பிரியா***




வீட்டின் இடதுபுறமாக நடந்தால் மூலையில் பூவரச மரம் இருந்தது.

கிருஷ்ணவேணி மரத்தைப் பார்த்தாள். சாம்பல் வண்ண மரத்தின் உடல், மழையின் ஈரத்தால் கருநிறம் கூடியிருந்தது. விரிந்த மஞ்சள் நிறப் பூக்கள் அடர்ந்து கிடந்த மரம் அவளுக்கு வெகு அன்யோன்யமாய்ப் பட்டது. பம்பரம் பம்பரமாய் மொட்டுகள்.

மரத்தைத் தொட்டுத் தடவினாள். அந்த மரத்தின் வாசனை அவளுக்குப் பிடித்திருந்தது. இந்த வீட்டுக்கு அழகே இந்த மரம்தான் என்று அவளுக்குத் தோன்றியது. மரத்துக்கும் வீட்டுச் சுவருக்குமிடையே உட்கார வசதியாக ஒரு நீண்ட கருங்கல். மரத்திலிருந்து வலப்புறம் நகர்ந்தால் அது வீட்டின் பின்புறம். அதில் கிணறு இருந்தது. எட்டிப் பார்த்தாள். தண்ணீர் கலங்கலாயிருந்தது. சேறு அடியில் மண்டிக் கிடந்த நீரில் கிருஷ்ணவேணியின் முகம் தெரிந்தது. இருண்டு கிடந்த கிணற்றினுள்ளே, கைப்பிடிச் சுவர்மீதான வானமும், நீண்டிருக்கும் ஓரிரு கிளைகளும் பின்னணியாய்க் கொண்டு தெரிந்த கிருஷ்ணவேணியின் முகம் வெளிச்சமாய், வெகு அழகாய் இருந்தது.

உள்ளே பெருக்கி முடித்துவிட்ட அழகு, சாமான்களை உள்ளே கொண்டு வரச் சொல்லி குரல் கொடுத்துக் கொண்டிருந்தான். கிருஷ்ணவேணி தானும் சென்று சாமான்களை எடுத்து வைத்து ஒத்தாசை பண்ண எண்ணித் திரும்புகையில் இயல்பாக அவர்களின் மீது பார்வை படிந்தது.

மைதானத்தின் கோடி மரத்தடியில் நாலு இளைஞர்கள். இங்கேதான் பார்க்கிறார்கள். 'சட்'டென்று கிருஷ்ணவேணியின் உடலில் ஒரு வித விரைப்புத்தன்மையும் மனத்தில் ஒருபரபரப்பும் கூடியது. தாவணியின் பின்புறத்தைச் 'சட்'டென்று ஒருமுறை இழுத்து விட்டுக் கொண்டாள். மேலேயும் சரி செய்து கொண்டாள்.

"இங்கேயிருந்து பாக்கையில என்ன தெரிஞ்சுடப் போகுதுன்னு இப்பிடி 'கரெக்ட்' பண்ணிக்குது அது?" என்றான் சுந்தர்.

சரவணன் சிரித்தான், "அது அனிச்சைச் செயல்ரா."

கிருஷ்ணவேணி வீட்டின் முன்புறத்துக்கு வந்தாள். சாமான்களை ஏற்கெனவே எடுத்து வைக்கத் துவங்கியிருந்த குடும்பத்தினருடன் இணைந்து கொண்டாள்.

"போவமாடா?" என்றான்.

"எங்க போறது? எங்க போயி எந்த வேலையைத்தான் வெட்டி முறிக்கப் போறம்? இர்றா கொஞ்ச நேரம்."

வெறுமனே வீட்டை மட்டும் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

சரவணனுக்குச் சற்று அலுப்பாக இருந்தது.

"ஏண்டா இத்தனை நாளும் அந்தவீடு அங்கதான் இருந்தது. நாம அதைச் சட்டை பண்ணினமா? இப்ப வெட்டியா எதுக்கு அதையே பாத்துக்கிட்டு இருக்கோம்?"

"போடா... இப்பதான்டா அந்த வீட்டுக்கே அம்சம் வந்துருக்கு. யோகலட்சுமி, தனலட்சுமி, சுபலட்சுமின்னு மூணு லாட்டரி சீட்டுலயும் மொத்தமா ப்ரைஸ் அடிச்சாப்ல அந்த வீட்டுக்கே ஒரு யோகம் வந்திருக்கு!"

"சரி, நான் போறேன்."

"இதென்னடா புதுப் பழக்கம்?"

"பசிக்குதுடா சாமி... ஏதாவது சாப்பிடணும்... ஆக்கி வச்ச சோத்தை நேரத்துக்குத் திங்கக்கூட வர முடியலையா ஒனக்குன்னு அப்பப்ப வீட்ல சவுண்டு விடுறாங்க."

"இத்தனை நாளாகியும், இவ்வளவு எக்ஸ்பீரியன்ஸ் கெடைச்சும் வீட்ல வய்யிறதையெல்லாம் போயி கணக்குல வச்சுக்கிட்டு.. அதையெல்லாம் சாய்ஸ்ல அழுறா."

வீட்டிலிருந்து இப்போது அழகு வெளியே வந்தான். இவர்கள் பக்கமாக நடந்து வந்தான்.

என்னதான் படிப்பிருந்தாலும்,'பாவம்' என்று ஓர் எண்ணம் ஓரத்தில் ஓடினாலும் இவர்களது உதட்டில் ஒரு சிரிப்புத் தவழ்வதைத் தவிர்க்கவே முடியவில்லை.

"குள்ளன் நம்மகிட்டத்தான் வர்றானாடா?"

அவன் இவர்களைக் கடந்து செல்ல வேண்டியவன்தான். இவர்கள் தன்னையே பார்த்துக் கொண்டிருப்பதைத் தனது இயல்பின் காரணமாகத் தொலைவிலேயே உணர்ந்துவிட்டான். இத்தனை ஆண்டுகளில் அவன் இதற்கெல்லாம் சகஜமானவனாக ஆகிவிட்டிருந்தான். யாராவது அவனைக் கவனிக்காமலிருந்தால்தான் வியப்பே.

அவர்களைச் சமீபித்ததும் நின்றான். முகத்திலொரு சிரிப்புடன் ஒரு கையை உயர்த்தி 'விஷ்' பண்ணினான்.

"வணக்கம் சார்."



**"கமலா, எதிர்த்த வீட்டுக்குக் குடி வந்திருக்கறவங்க ரொம்ப பணக்காரங்க போலிருக்கு."**

**"எப்படிச் சொல்ற?"**

**"வாசல்ல 'தண்ணி' தெளிச்சுக் கோலம் போடுறாங்களே!"**

**- ஆரூர் சரோ**

---

இந்த நேரடி அறிமுகத்தை இவர்கள் எதிர்பார்க்கவில்லை. சற்றுக் குழப்பமாகிப் போனார்கள. பிறகு அழகுவைப் பார்த்துச் சிரித்தார்கள்.

"புதுசா குடிவந்திருக்கீங்களா?"

"ஆமாங்க சார். நீங்க எல்லாம் இந்தாருதானா?"

"ஆமா. நீங்க வந்திருக்கிற வீடு இவங்களதுதான்." என்று சரவணனைச் சுட்டிக் காட்டினான் சுந்தர்.

"அப்படிங்களா. வணக்கம் சார்." என்று சரவணனுக்கு ஒரு பிரத்யேக வணக்கம் வைத்தான் அழகு. சரவணனுக்குச் சற்றுப் பெருமையாக இருந்தது.

"வீடெல்லாம் சௌரியமாயிருக்கா?" என்றான் ஒரு உடனடி பெரிய மனிதத் தோரணையுடன்.

அழகு அவனை உடனடியாகக் கவிழ்த்து விட்டான்.

"நல்ல வீடுதான் சார். ஆனா சுத்தமா கவனிக்காம போட்டு வச்சிட்டீங்க... ஏகப்பட்ட ரிப்பேர் செய்யணும்."

"அதெல்லாம் அப்பா பண்ணிருவார்."

அழகு புன்னகையுடன் தலையாட்டினான்.

"கொஞ்சம் ஆணி, கயிறு எல்லாம் வாங்கணும். சமையல் சாமான்லாம் வாங்கணும். ஊருக்குள்ள பெரிய கடைகள் இருந்தா.."

"ம்... இருக்கு. இந்தப் பாதை வழியாவே போங்க."

சரவணன் சொன்னான்.

"எங்கூட வர்றீங்களா சைக்கிள்ல?



"ஏன் சார் அவர் லீவை சாங்ஷன் பண்ணமாட்டேன்னுட்டீங்க."

"பல் வலியாம். போன வாரம் பிறந்த அவர் குழந்தைக்கு!"

- எம். சிதம்பரம்

---

கடையைக் காமிச்சு விடுறேன்."

அழகு உடனே சம்மதித்தான்.

"போயிட்டு வந்திருவியாடா சரவணா?"

"இல்ல சாப்டுட்டு படுத்துருவேன். சாயங்காலம் பார்ப்போம்."

சரவணன் சைக்கிள் ஸ்டாண்டை எடுத்து விட்டான், "ஏறிக்கங்க."

அழகு சொன்னான். "நீங்க ஓட்டுங்க சார், குதிச்சு ஏறிக்கிடுறேன்."

அனைவரும் சிரித்தார்கள், "வேணாம் பிரதர். கீழே விழுந்துருவிங்க." என்றான் சரவணன்.

"நமக்கு நிறைய எக்ஸ்பீரியன்ஸ் உண்டுங்க. வீட்ல எல்லா வேலையும் செய்வேன். இந்த சைக்கிள் உயரம் ஜாஸ்தி. இல்லாட்டி நானே 'ஜம்'முனு ஓட்டிருவேன்."

இவர்கள் ஒருவரையொருவர் தமக்குள் பார்த்துக் கொண்டார்கள்.

சுந்தர், சரவணனின் காதில் முணுமுணுத்தான்.

"குள்ளன், சரியான கிறுக்கன் போலிருக்குடா."

அழகு வெகு இயல்பாகச் சொன்னான், "காதில என்ன சொல்றாரு? குள்ளன் இன்னிக்குக் கீழ வுழாம ஓய மாட்டான் போலருக்கேன்னு கிண்டல் பண்றாரா?"

சரவணன், "அதெல்லாமில்லை. எதுக்கு 'ரிஸ்க்'குங்கிறாப்ல."

மணி கேலியாக, "இன்னிக்குத்தான் முதமுதல்ல ஊருக்கு வந்திருக்கீங்க. இதுக்கெல்லாம் இன்னம் நாளு கெடக்கே" என்றான்.

"இல்ல, சார். நான் ஏறிருவேன். நீங்க கெளம்புங்க சார்." என்றான் சரவணனைப் பார்த்து.

"சரி" என்ற சரவணன், சைக்கிளில் ஏறி பெடலை மிதித்தான் சைக்கிள் மெதுவாக உருண்டது.

சீராக ஓடிய சைக்கிளைப் பற்றியவாறே அதன் கூடவே ஓடினான் அழகு. அவனது இடக்கை கேரியரைப் பற்றி இருந்தது. வெகு சீரான சிறு குழந்தை போன்றதொரு ஓட்டம். ஒரு கச்சிதமான வினாடியில் அவனது இடது முன் பாதம், சைக்கிள் பின் சக்கரத்தின் நடுவிலுள்ள கம்பி இணைப்பில் பதிந்தது. அதே சீரான வேகத்தில், பந்து போல் மேலெழும்பினான். உயரம் தாண்டும் விளையாட்டுக்காரன் போல அவனது குள்ள உடல் காற்றின் வழியே, மேலேறி கேரியரில் வெகு பக்குவமாக அமர்ந்தது.

ஆச்சரியம் சூழ இவர்கள் பார்த்துக் கொண்டிருந்தனர்.

கிருஷ்ணவேணி மீண்டும் பூவரச மரத்தடிக்கு வந்து இவர்களறியாமல் இவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

(தொடரும்)

## போதுமா?



இருப்பதை
வைத்துக் கொண்டு
திருப்தியாக
இருக்க வேண்டுமாம்
எப்படி முடியும்?
என்னிடம்
இருப்பது
வறுமை மட்டுமே!

– ஆர். ரகோத்தமன்

# கூத்தல்ல; வழிபாடு!



• பிள்ளையாருக்குப் பூஜை செய்வதில் போட்டி

**வி**வஸ்தையில்லாத வில்லன்கள் நிறைந்த தமிழ்சினிமா, மீறிப்போனால் ஹைடெக் வில்லன்கள் உலவும் ஹாலிவுட் சினிமா, அதைவிட்டால் சகிப்புத் தன்மை தேவைப்படுகிற சபாநாடகங்கள், மெல்லிசை நிகழ்ச்சிகள் என்று ஞாயிற்று கிழமைகளை 'விதியே' என்று போக்கி வந்த சென்னை வாசிகளில் ஒரு இருநூறுபேருக்கு, கடந்த வாரம் அதிர்ஷ்டம் அடித்தது.

காலை பத்துமணி தொடங்கி, இரவு பத்து மணி வரை சுமார் பன்னிரண்டு மணி நேரம் நடந்த ஒரு கிராமியக் கூத்து நிகழ்ச்சியைப் பட்டப்பகலில் கொட்டக் கொட்டப் பார்த்து, சாதனை படைத்து விட்டார்கள்.





**கூ**த்துப்பட்டறையும், 'ஒளஃப்டி ஆர்ட்' என்ற ஆய்வு மையத்தை நடத்தி வரும் டாக்டர் எஸ். வெங்கட்ராமனும் இணைந்து, சென்னை பிரெஞ்சுக் கலாசார மையத்தில் 'அரவான்பலி' என்ற தஞ்சைபாணி கிராமியக் கூத்து நிகழ்ச்சியை ஏற்பாடு செய்திருந்தனர்.

தஞ்சை அருகேயுள்ள கரம்பை என்ற கிராமத்தில் பரம்பரையாக இந்த கூத்தை வெட்ட வெளியில், நட்ட நடு நிசியில் நிகழ்த்தி வரும் கிராமியக் கலைஞர்கள், சென்னை வந்து, வேடம் தரித்து, ஏசி அரங்கில் கூத்து தொடங்கினார்கள். ஆர்மோனியக் கலைஞர், தாளக் கலைஞர், கூத்து வாத்தியார், பின்பாட்டுக் கலைஞர்கள் என்று அரங்கின் இடது ஓரத்தில் இசை கோஷ்டி அமர்ந்திருந்தது. முழுமுதற் கடவுள் பிள்ளையாரை முதலில் துதிக்க வேண்டி, எல்லோரும் கோரஸாக உச்ச ஸ்தாயியில், தொண்டை கிழிய கத்திப்பாட, எங்கோ ஒரு கிராம கூத்துமேடை முன்பு அமர்ந்திருப்பது போன்ற உணர்வு.

• திரௌபதி மறுக்கிறாள்





பிள்ளையார் துதி முடிந்த கையோடு, ஒரு நான்கு முழ வேஷ்டியை இருவர் மறைத்துப்பிடிக்க, முகத்தைக் காட்டாமல் அதில் ஒளிந்தபடி மேடைக்கு வந்த முதல் பாத்திரம் கோணங்கி. (எல்லா பாத்திரங்களுமே இப்படித் தான் அறிமுகமாகின்றன) ஸ்ரீஹரியின் அருள்பெற்ற இந்த நகைச்சுவைப் பாத்திரம், கூத்து சிறப்பாக நடைபெற பாடி, ஆடி, வாழ்த்தி விட்டுப் போகிறது. அடுத்து இரண்டு குருக்கள்மார் வருகிறார்கள். தாளகதியோடு நொண்டியபடி வந்து, 'நானே பிள்ளையாருக்குப் பூஜை செய்வேன்' என்று ஒருத்தரோடு ஒருத்தர் சண்டை பிடிக்கிறார்கள். தஞ்சைப் பகுதியில் இன்றளவும் பெரும் நிலச்சுவான்தார்களாக விளங்கக் கூடிய சமுதாயத்தைச் சேர்ந்த இவர்களின் நடவடிக்கைகளைக் கிண்டல் செய்வதன் மூலம், கூத்தை, கால் நீட்டி அமர்ந்து கண்டுகளிக்கும் கூலி மற்றும் குத்தகை விவசாயிகளை, நகைச்சுவையில் திளைக்க வைப்பதுதான் இந்தப் பாத்திரங்களின் வேலை. இதன் மூலம் தஞ்சைப் பகுதியில் தொன்றுதொட்டு நிலவி வரும் ஜாதிபேதங்களையும் இந்த நகைச்சுவை பாத்திரங்கள் கேலி செய்கின்றன.

மூன்றாவது பாத்திரம் முக்கியமில்லாதது போல் தோன்றும் முக்கிய பாத்திரமான கட்டியக்காரன். கூத்து நிகழ்வின் கதைப் போக்கை, சாதாரணப் பேச்சுமொழியில் நகைச்சுவை கலந்து, அவ்வப்போது அறிவிக்க வேண்டும். முதலில் அறிமுகமான கட்டியக்காரன், தாய்மார்கள் வீட்டுக் கதையை இங்கே பேசக் கூடாதென்று வேண்டுகோள் விடுக்க, ஜீன்ஸ், சுடிதார் அணிந்த சென்னை தாய்க்குலத்திடம் - ஒரே கலகலப்பு. கட்டியக்காரன் கூத்தின் துவக்கத்தை மட்டுமே சொல்லிப் போய்விட்டாலும், வாசகர்களின் வசதிக்காக அரவான்பலி கூத்தின் மைக்ரோ கதைச் சுருக்கம்:

கௌரவர், பாண்டவர் இடையே மகாபாரதப் போர் தவிர்க்க முடியாத ஒன்றாகிவிடுகிறது. போருக்கு முன் போர்க்கள காவல் தெய்வமான ரணபத்திரகாளிக்கு, குற்றம் புரியாத வீரனொருவன் பலிகொடுக்கப்பட வேண்டும். அர்ஜுனனுக்கும் நாக கன்னிகைக்கும் பிறந்த 'அரவான்' அதற்குத் தகுதியுடையவனாக இருக்கிறான். அவனைப் பலியிட சம்மதிக்குமாறு, பாண்டவர்களிடம், ஸ்ரீ கிருஷ்ணன் கேட்கிறார். முதலில் மறுத்தாலும் பலிகொடுத்தால் போரில் வெற்றி நிச்சயம் என்பதற்காகச் சம்மதிக்கிறார்கள். ஆனால் அரவானின் வளர்ப்புத் தாயாகிய திரௌபதை அடியோடு மறுத்துக் கதறுகிறாள். இறுதியில் அரவானே முன் வந்து தன்னைப் பலியிடச் சம்மதம் தந்து, பாரதப் போர் நடக்க வழிவகை செய்கிறான்.

பரிச்சயப்பட்ட மகாபாரதத்தில் இது ஒரு உபகதை தான் என்றாலும், கூத்தின் மையப்பகுதியாக, சிசுவதை எதிர்ப்பும், இழப்பின் சோகமும், தாய்மைப் பாசமும் இருப்பதால், பார்வையாளன் தன்னைக் கூத்திலிருந்துத் துண்டித்துக் கொள்ள முடியாத வசியத்தை ஏற்படுத்தி விடுகின்றன. திரௌபதி தோன்றி சிசுபலியைத் தடுக்க, கண்ணனிடம் கெஞ்சிக் கதறும் பகுதியில் கூத்து உச்சத்தை அடைகிறது. அதன் பிறகு கூத்தின் முடிவில் வரப்போகும் அரவான்பலி எப்படியிருக்குமோ என்பது குறித்து பார்வையாளனின் ஆவல் தூண்டப்படுகிறது. இதன் மூலம், ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு இசைப் பாடல்களாக எழுதப்பட்ட இந்த நாடகத்தின் அமைப்பு அந்த கால கட்டத்தில் ஒரு சோதனை முயற்சியாகத் தான் இருந்திருக்க முடியும் எனத் தெரிகிறது.

தஞ்சையை ஆட்சி செய்த மராட்டிய மரபின் தாக்கம் கூத்தில் இருப்பது வெளிப்படை. அதற்கு சாட்சியாகப் பாத்திரங்களின் நடன அசைவுகளைக் குறிப்பிடலாம். கர்நாடக இசை, மராட்டிய இசை, கிராமிய இசை ஆகியவற்றின் கூட்டுக் கலவையாக விளங்கும் இசை, கூத்தை நடத்திச் செல்வதில் முக்கிய பங்கு வகிக்கிறது. பாத்திரங்களுக்கு இடையிலான உரையாடல்

எளிய தமிழ்நடையில் இருந்தாலும் எல்லாமே பாடல்கள். கதையின் முக்கியத் திருப்பத்தைக் குறிப்பிடும் உரையாடலை, பாத்திரங்கள் பாடலாகப் பாடுகிறபோது, பார்வையாளனுக்குப் புரியும் வகையில், பின்னணி இசையை நிறுத்தி விடுகிறார்கள்.

கிராமியக் கூத்து, பொதுவாக பார்வையாளனுக்கு அதிக சுதந்தரத்தை வழங்கக்கூடியது. கூத்தைப் படுத்துக்கொண்டு அல்லது பக்கத்திலிருப்பவருடன் உரையாடிக் கொண்டு, பார்க்க முடியும். கட்டியக்காரன் வந்து போகிற இடைவெளியில் அருகிலிருக்கும் வீடுவரை கூட ஓர் எட்டுப் போய் வர முடியும். அதைப் போலவே கூத்துக் கலைஞனும் அதிக சுதந்தரம் எடுத்துக் கொள்ளலாம் என்பதற்கு சாட்சியாக இருந்தது இந்தப் பகல் நேரக் கூத்து. நடித்துக் கொண்டிருக்கும்போதே மினரல் வாட்டர் குடிப்பது, மேடையிலேயே களைத்துப்போன கட்டியக்காரன் பீடி குடித்தது எல்லாம் சென்னை பார்வையாளர்களுக்குச் சிரிப்பூட்டியதில் ஆச்சர்யம் ஏதுமில்லை. ஆனால் கலைஞர்களுக்கோ இது இயல்பு.



• கோணங்கி ரெடி

அரவான் களபலி கூத்து நிகழ்வின் உச்சமாக, காளி பாத்திரத்தில் தோன்றியவருக்கும், கிருஷ்ணர் வேடத்தில் இருந்தவருக்கும் நிஜமாகவே 'அருள்' வந்து விடுகிறது. தஞ்சை மாவட்ட திரௌபதை அம்மன் கோவில்களில் ஆண்டுதோறும் நடத்தப்படும் வழிப்பாட்டுச் சடங்காகவே, இந்தக் கூத்து தொன்றுதொட்டு விளங்கி வருவதால் இதை ஒரு கலை என்பதைவிட கலாசார அடையாளம் என்று ஒரு படி உயர்த்திக் கூறலாம். கூத்தில் வேடமேற்ற அத்தனை பேரும் கரம்பை கிராமத்தின் பரம்பரை விவசாயிகள். இந்த கூத்து, சடங்காக, ஆண்டுதோறும் நடந்தால்தான் விவசாயம் செழிக்கும் என்பது நம்பிக்கை. அதனால்தான் அவர்கள் எப்படி நடிக்கிறோம் என்பதற்கு முக்கியத்துவம் தராமல், எப்படியாவது நடித்து ஆக வேண்டும் என்பதற்கே முக்கியத்துவம் தருகிறார்கள்.

இந்தக் கலைஞர்களுக்கு முறையான இசைப் பயிற்சி கொடுக்கப்பட்டால், மரபு மாறாமல் 'அரவான் களபலி' போன்ற கிராமிய கூத்துகளுக்குப் புனர்வாழ்வு தர முடியும்.

'தியேட்டர்' என்ற சொல்லுக்கு அப்பால் ஓர் அனுபவத்தைக் கொடுக்கும் கலை வடிவம் என்பதை உணர்ந்து, கிராமியக் கூத்தை நகரவாசிகளுக்கும் படைத்த கூத்துப் பட்டறையைப் பாராட்ட வேண்டும்.

— ஜெயந்தன்

படங்கள்: மோகன்தாஸ் படகரா

## காஸ்ட்லி

'RADO ROYAL DREAM' என்ற பெயரில் ஸ்விஸ்ராடோ நிறுவனம் 17 கைக்கடிகாரங்கள் தயாரித்தது. அதில் 16 விற்றுத் தீர்ந்தன. ஒரு வாட்ச் மட்டும் உலகம் சுற்றி, கடந்த ஜூன் மாதம் கோவையில் தங்கி மக்களிடம் முகம் காட்டிச் சென்றது. (ஏற்பாடு: பிரபல 'ஜிம்ஸன் வாட்ச் வோர்ல்ட், ஆர்.எஸ்.புரம்) அப்படி அந்த வாட்சில் என்ன ஸ்பெஷாலிட்டி? விலை சார் விலை! ரூ. 32 லட்சம். தாராளமாகத் தரலாம்!

டயலில் மட்டும் 194 வைரக்கற்கள்



வாட்ச் கேஸில் 288 வைரக் கற்கள்

கேஸ் (கூடு) 18 காரட் தங்கத்தாலானது

வெளிச்சத்தில் பளிச்சிடும் வர்ண ஜாலங்கள். பார்த்தால் கண்ணைக் கூச வைக்கிறது.

நேரில்பார்த்து ஏக்கப் பெருமூச்சு விட்டவர்

— கமலா மாரியப்பன்.

# மெமரிக்கு மரியாதை!

மெகா சைஸ் டில்லி அப்பளம், பஞ்சு மிட்டாய், விலை குறைப்பு ஆஃபர், இலவசம் என்று எக்ஸிபிஷன்களுக்குரிய எந்த வித லட்சணங்களும் இல்லாமல், லயோலா கல்லூரி வளாகத்தில் ஒரு கண்காட்சி நடந்தது. எண்ணி முப்பது ஸ்டால்கள். ஒவ்வொன்றிலும் கூட்டம் மொய்த்தது. மாண்புமிகு 'மெமரி ஃபேர்!

அண்மையில் பல்வேறு ஆசிய நாடுகளும் பங்கேற்க, மெமரி ஏசியாடை 'ஜாம் ஜாம்' என நடத்திய டாக்டர் ரெட்டிதான் இதையும் நடத்தினார்.



• மோகனபிரியா, ஆதித்யன்

★ ஒரு ஸ்டாலில் மோகன பிரியா, ஆதித்யன் என்று இரண்டு குட்டீஸ், சாக்லேட் சாப்பிட்டுக் கொண்டு இருந்தன. எதிரே நின்றிருந்தவர், ஒரு பெரிய பட்டியலைப் பார்த்தபடி, உலக நாடுகள் ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டே வர, வாண்டுகள் மாற்றி, மாற்றி, அந்த நாடுகளின் தலைநகரங்களை 'பட்... பட்...' என்று சொல்லி அனைவரையும் அசத்திக் கொண்டு இருந்தார்கள்.

★ பார்வையாளர்களின் நினைவாற்றலைப் பரிசோதிக்க டெஸ்ட் வைத்தார்கள். நீல நிறத்தில் 'வெள்ளை' என்றும் பச்சை நிறத்தில் சிவப்பு, சிவப்பு நிறத்தில் மஞ்சள் இப்படி ஒவ்வொரு வண்ணத்தின் பெயரையும், வேறு நிறத்தில் எழுதி வைத்திருந்தனர். அதை முப்பது விநாடிகள் பார்த்து விட்டு, எந்த நிறத்தின் பெயர். எந்த வண்ணத்தில் எழுதப்பட்டுள்ளது என்று சரியாகச் சொல்ல வேண்டும். பார்க்க எளிதாக இருந்தாலும், பலரும் திணறி விட்டார்கள்.

★ ஐம்பது வெவ்வேறு பொருட்களை ஐந்து நிமிட நேரம் மட்டுமே பார்த்துவிட்டு, மறுபடி நினைவுபடுத்தி எழுதும் வழக்கமான போட்டியும் உண்டு. 45 ஐட்டங்களை நினைவுபடுத்தினதுதான் அதிகபட்ச ஸ்கோராம்.

★ சீட்டுக் கட்டும் கையுமாய், உட்கார்ந்திருந்தார் ஒரு பெண்மணி. சீட்டைக் கலைத்து அவரிடம் கொடுத்தவுடன், எல்லா சீட்டுகளையும் இரண்டு ரவுண்டு நன்கு பார்த்துக் கொள்ளுகிறார். அப்புறம் கடகடவென, மொத்த சீட்டுகளையும் வரிசைப்படி மிகச் சரியாகச் சொல்கிறார்.

"என் பிள்ளைகளை டாக்டர் ரெட்டி நடத்தும் நினைவாற்றல் அபிவிருத்தி வகுப்பில் சேர்ப்பதற்காகப் போன போது, அவரது அறிமுக உரை என்னை ரொம்பவே ஈர்த்துவிட்டது. நானும் வகுப்பில் சேர்ந்து, கற்றுக் கொண்ட பல விஷயங்களில் இந்த சீட்டுக் கட்டு நினைவாற்றல் ஐட்டமும் ஒன்று" என்கிறார் குடும்பத்தலைவி ஹம்சா.

★ "இங்கே நீங்கள் பலரைச் சந்தித்தபோது, 'அடேயப்பா! என்னே அபார நினைவாற்றல்' என்று ஆச்சரியப்பட்டிருப்பீர்கள். உங்களுக்கு ஒரு ரகசியம் சொல்கிறேன். இவர்கள் அனைவரும் உங்களைப்போல சாதாரணமானவர்கள் தான். முறையாக நினைவாற்றல் அபிவிருத்தி பயிற்சியைப் பெற்றதன் மூலம்தான் இப்படிச் செய்து காட்ட முடிகிறது. இது உங்களாலும் முடியும்." என்றார் டாக்டர் ரெட்டி.

- கௌதம் ராம்

படம் : மௌலி

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)


கல்கி
19.8.2001
இதழுடன்
இணைப்பு
கம்ப்யூட்டர் குவிஸ்

நித்தம் ஒரு புதிய தொழில்நுட்பம், கம்ப்யூட்டர் துறையில் நுழைந்து கொண்டிருக்கிறது. கணினி மொழியில் பயன்படுத்தப்படும் பொதுவான சொற்களுக்குப் பொருள் விளக்கம் தரும் வகையிலும், கம்ப்யூட்டரின் லேட்டஸ்ட் தகவல்கள் பற்றியும் 32 பக்கங்களுக்குள் சுருக்கமாய்த் தர முயற்சி செய்திருக்கிறோம். உங்கள் மனத்தில் எழும் சந்தேகங்களுக்கு எளிய முறையில் விடை தரும் பயனுள்ள கம்ப்யூட்டர் குவிஸ் இது.



கம்ப்யூட்டர் சயன்ஸ் இன்று மிகவும் பிரபலமான ஒரு துறை. ஆளாளுக்கு அதில் புலமை பெற

வேண்டும் என்று நினைக்கிறார்கள். காரணம் இந்தத் துறையில் வேலை வாய்ப்பு அதிகம்.

ப்ளஸ் ஒன்னில் கம்ப்யூட்டர் சயன்ஸ் பாடத்தைத் தேர்வு செய்வது, பிறகு ஏதாவது பொறியியல் கல்லூரியில் கம்ப்யூட்டர் என்ஜினியரிங் படிப்பது, படித்து முடித்த கையோடு வெளிநாட்டில் (முக்கியமாக அமெரிக்காவில்) ஒரு நல்ல வேலையில் சேருவது, இப்படி ஆசைப்படுபவர்களின் எண்ணிக்கை மிக வேகமாகப் பெருகி வருகிறது.




ப்ரொக்ராமராக விளங்கத்தான் என்றில்லை. எல்லாத் துறைகளிலுமே கம்ப்யூட்டர் இன்று இன்றியமையாததாகி விட்டது. ஐந்து வருடங்களுக்கு முன்பு வரை உயர்மட்டப் பிரிவினரின் வீடுகளில் மட்டுமே இருந்துவந்த கம்ப்யூட்டர் இப்போது நடுத்தர மக்களின் வீடுகளிலும் இடம் பிடிக்கத் தொடங்கி விட்டது.

மென்பொருள் மற்றும் வன்பொருள் தயாரிப்பு நிறுவனங்கள்தான் என்றில்லை. எந்தவொரு நிறுவனத்திலுமே, (சிறு ஹோட்டல் மற்றும் கடை உள்பட) கம்ப்யூட்டர் இடம்பெறத் தொடங்கி விட்டது. மிகவும் உற்சாகமாகச் செயல்பட்ட கம்ப்யூட்டர் கல்வித்துறையில் சமீப காலமாகச் சில




குழப்பங்கள் ஏற்பட்டு விட்டதான தோற்றமும் உள்ளது. ஜாவா படித்தவர்களுக்கு நிச்சயம் அற்புதமான வெளி நாட்டு வேலை காத்திருக்கிறது என்ற நிலை மாறி விட்டதாகச் சொல்லப்படுகிறது. சில அப்ளி கேஷன்ஸில் மட்டுமே அதில் பின்னடைவு ஏற்பட்டி ருக்கிறது. தவிர, அவ்வப்போது அறிமுகமாகும் புதிய மென் பொருள் மொழிகளைக் (இப்போது C# மொழி யின் காலம்) கைவசப்படுத்திக் கொள்ள வேண்டியது காலத்தின் கட்டாயம்.

என்ஜினியரிங் படித்தவர்களுக்குத்தான் மேல்நாட்டு (அமெரிக்க) வேலை கிடைக்கிறது. மற்றும் அந்தப் பல்கலைக் கழகங்களில் மேல்படிப்பு படிக்க முடிகிறது, அது ஏன்? தனிப்பட்ட முறையில் பல்வேறு கம்ப்யூட்டர் கோர்ஸ்களைப் படித்துத் தேர்ச்சி பெற்றாலும் அந்த வாய்ப்பு ஏன் இருப்பதில்லை? இந்தக் கேள்விக்கான பதில் இதுதான்: அமெரிக்காவில் வேலை கிடைக்க வேண்டுமென்றால் பதினாறு வருடங்கள் முறையான (formal) கல்வி தேவை. நம் நாட்டில் பட்டப் படிப்பு மட்டுமே முடித்திருந்தால் (ப்ளஸ் டூ வரை–12 மற்றும் கல்லூரியில் 3 என்கிற வகையில்) மொத்தம் 15 வருடங்கள்தான் முடிந்திருக்கிறது. பொறியியல் படிப்பு என்றால் மொத்தம் 16 வருடங்கள் கணக்காகி விடுகிறது. ஆனால் இந்த நிலையில் சில மாற்றங்கள் நடந்து கொண்டிருக்கின்றன.

இந்தியாவிலேயே உள்ள தரமிக்க கம்ப்யூட்டர் நிறுவனங்களில் ஒரு வருடம் நல்ல கம்ப்யூட்டர் கோர்ஸைப் படித்தால் சில அமெரிக்கப் பல்கலைக்கழகங்கள் மேற்படிப்புக்கு அனுமதிக்கின்றன. வேலை வாய்ப்புக்கும் வழிபிறக்கிறது.

கம்ப்யூட்டர் பிரிவில் மேலே மேலே வருவதற்கு, கம்ப்யூட்டர் ஞானம் மட்டும் போதாது. தகவல் தொடர்பிலும் சிறந்து விளங்க வேண்டும். பள்ளியில் தமிழ் மீடியத்தில் படித்திருந்து ஆங்கிலத்தைச் சரளமாகப் பேச வரவில்லையென்றாலும் கூட, ஏதாவது 'ஆங்கிலம் பேசும் பயிற்சி' நிலையத்தில் சேர்ந்து பயனடைவது நல்லது. அல்லது தினமும் கண்ணாடி முன் நின்று கொண்டு கையில் ஆங்கில நாளிதழை வைத்துக் கொண்டு ஒரு மணி நேரம் பார்த்துப் படிப்பது கூடப் பலன் தரும். பேசும் போது இலக்கணப் பிழை வந்தால் பரவாயில்லை. ஆனால் அதை மறைக்கும் வகையில் சாதுர்யமும், வேகமும் மொழியில் இருக்க வேண்டும். திக்குவாய்க் குறை கொண்டவர்கள் கூட பயிற்சியின் மூலம் சரளமாக ஆங்கிலத்தில் பேச முடியும். எனவே விடாமுயற்சி தேவை.



இது இன்டர்நெட் யுகம். எனவே அந்த வசதியின் மூலமே பல புதிய விஷயங்களை மட்டுமல்ல, புதிய கல்வித் தகவல்களையும் பெற்று இந்தத் துறையில்

தேர்ச்சியடையலாம்.

அமெரிக்காவிலிருந்து சில இந்திய இளைஞர்கள் வேலை வாய்ப்பை இழந்து திரும்பிக் கொண்டிருப்பது உண்மைதான். ஆனால் அதற்குக் காரணம் கம்ப்யூட்டர் துறை மவுசு இழந்துவிட்டது என்பதில்லை. Y2K பிரச்னைக்குத் தீர்வு காணும் விதமாகப் பல இந்திய கம்ப்யூட்டர் என்ஜினீயர் இளைஞர்கள் அங்கு படையெடுத்தார்கள். பிரச்னை தீர்ந்து போனவுடன் அவர்களின் தேவை சிறிது சிறிதாகக் குறைந்து விட்டது.



இது ஓர் இளமையான துறை. கம்ப்யூட்டர் பிரிவில் வேலை செய்யும் எவருமே ஐந்து அல்லது அதிகபட்சம் பத்து வருடங்களுக்கு மேல் அதே நிறுவனத்தில் பணியாற்ற மாட்டார்கள். மாறிக் கொண்டே இருப்பார்கள். ஒரே இடத்தில் தங்கியிருந்தால் தேய்ந்து விடுவோம்; 'அவுட்டேடட்' ஆகி விடுவோம் என்ற பயம்தான் அவர்களைப் பல புதிய சவால்களை ஏற்றுக் கொள்ளச் செய்கிறது. ஆக, இந்தத் துறைக்குச் சிலர் கூறுவது போல அழிவு இல்லை.

## ‘ஜாவா’வுக்கு ஏன் கொஞ்சம் இறங்குமுகம்?

எதிர்பார்த்த அளவுக்குத் திறம்பட எல்லாவிதங்களிலும் ஜாவா செயல்படவில்லை என்பது ஒரு காரணம். வலைத்தளங்களை வடிவமைப்பதற்கு ஜாவா மிகவும் வாகாக இருந்தது. ஆனால் யாஹூ, யு.எஸ்.ஏ. டாட்நெட் போன்ற பிரபல வலைத் தளங்களுக்குக்கூட போதிய விளம்பர வருமானம் கிடைக்காததால், இலவசமாக அவர்கள் இதுவரை அளித்து வந்த சேவைகளை இனி கட்டண சேவையாக்கப் போகிறார்கள்.



அதே சமயத்தில் ஸி-ஷார்ப் (C#) போன்றவை ஆங்கிலம் மட்டுமின்றிப் பல உலக மொழிகளில் இயக்கக் கூடியதாகவும் மைக்ரோஸாப்ட் மென்பொருளோடு ஒத்துழைக்கத் தயாராகவும் இருப்பதால், இவற்றிற்கு டிமாண்ட் அதிகமாகி வருகிறது.

## மெடிகல் டிரான்ஸ்கிரிப்ஷன்

சில மாதங்களுக்கு முன் பரபரப்பாக அறிமுகமான விஷயம் இது. முன்னேற்றம்




அடைந்த மேலைநாடுகளில் உள்ள மருத்துவர்கள் அன்றன்று அவர்கள் சிகிச்சை செய்த நோயாளிகளின் விவரங்களை இங்கிருப்பவர்களுக்கு அனுப்ப, அதை இவர்கள் தேவைப்படும் வடிவத்தில் அழகான முறையில் உருவாக்கி மீண்டும் அந்த மருத்துவர்களுக்கே அனுப்புவார்கள். அமெரிக்காவிலும் இந்தியாவிலும் இரவு பகல் கிட்டத்தட்ட நேரெதிராக இருப்பதால், மருத்துவர்களுக்கு இது மிக வசதியான முறை. இரவு விவரங்களை அனுப்பிவிட்டு வீட்டுக்குப் போனால், மறுநாள் காலை ஈ–மெயிலில் தேவைப்பட்ட மருத்துவ அறிக்கைகள் தயாராக இருக்கும்.

ஆனால் வாய்ஸ் மெயில் தொழில்நுட்பம் சமீபத்தில் பரபரப்பாக அறிமுகமாகியுள்ளது. இந்த முறையில் நீங்கள் கீபோர்ட் எதையும் இயக்காமலேயே, நீங்கள் சொல்லச் சொல்ல அந்த ஆணைகளை கணினி தானாக நிறைவேற்றும். உங்கள் குரல் கணிணிக்குப் பழக ஓரிரு நாட்கள் ஆகலாம். அதற்குப் பிறகு சிக்கல் இருக்காது என்கிறார்கள். இந்த வாய்ஸ் மெயில் முறையை அமெரிக்க மருத்துவர்கள் முழுமையாகப் பயன்படுத்தத் தொடங்கினால், மெடிக்கல் டிரான்ஸ்கிரிப்ஷனுக்கான வேலை வாய்ப்புகள் கணிசமாகக் குறையக்கூடும்.

## வாய்ஸ் மெயில்

இடைத்தட்ட தொலைபேசி போல கணினியைப் பயன்படுத்தி வசதிகள் பெறலாம். மின்னணு வணிகம் (e-business) இந்த வசதியால் செழித்தோங்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## விண்டோஸ் எக்ஸ்

விண்டோஸ் 2000க்குப் பிறகு, இப்போது 'Exchange 2000' அறிமுகமாகியிருக்கிறது. வலை மூலமாக நடைபெறும் வணிகத்துக்கு இது பெரிதும் உதவும் என்கிறார்கள்.



## அடோனிஸ் (ADONIS)

பிரிட்டிஷ் நூலக மையம் துவக்கிய புதிய திட்டம் இது. ஆறு புகழ்பெற்ற நூல் வெளியீட்டு நிறுவனங்களின் பல நூல்களும் பருவ இதழ்களும் கணிப்பொறி

யில் வெளியிடப்படும். சிடி ரோம் தட்டுகளாக இவை 13 மையங்களுக்கு அனுப்பப்படுகின்றன. அவை அமெரிக்கா, ஆஸ்திரேலியா, மெக்ஸிகோ மற்றும் ஐரோப்பிய நாடுகளில் உண்டு. Article Delivery Over Online Information System என்பதன் சுருக்கமே இது.




## அல்கால் (ALGOL)

பன்னாட்டு கணித நிபுணர்கள் குழு ஒன்று உருவாக்கிய உயர்நிலை மொழி இது. கணிதம் மற்றும் அறிவியல் ஆராய்ச்சிகளில் ஈடுபடுபவர்களுக்கு இது மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

## பகுப்பாளர் (ANALYST)

சிக்கல் எது என்பதைத் தீர்மானம் செய்வதோடு, கணிப்பொறி மூலம் அதற்குத் தீர்வு காண்பதற்கான நடைமுறைகளை உண்டாக்குபவர்.

## கட்டுமானம் (ARCHITECTURE)

வீடுகள்தான் என்றில்லை. கணினியின் மென்பொருள் மற்றும் வன்பொருள்களைக் கூட நமது உபயோகத்திற்கு ஏற்ப வடிவமைக்கலாம். அதைத்தான் ஆர்க்கிடெக்சர் என்கிறார்கள்.



## முதல் தலைமுறைக் கணிப்பொறிகள் (FIRST GENERATION COMPUTERS)

1942ல் உருவாக்கப்பட்டது ஈனியாக் என்ற இந்த வகைக் கணிப்பொறிகள். இவற்றில் வெற்றிடக் குழாய்கள் பொருத்தப்பட்டதால் அவை மிகப் பெரியதாகவும் செயல் வேகம் குறைந்தவையாகவும் இருந்தன.

## இரண்டாம் தலைமுறைக் கணிப்பொறிகள் (SECOND GENERATION COMPUTERS)

வெற்றிடக் குழாய்களுக்குப் பதிலாக 'ட்ரான்சிஸ்டர்கள்' பொருத்தப்பட்ட



கணிப்பொறிகள். முதல் தலைமுறையை விட பல நூறு மடங்கு செயல் வேகம் கொண்டவை.

## மூன்றாம் தலைமுறைக் கணிப்பொறிகள் (THIRD GENERATION COMPUTERS)

ஒரு சிறிய தகட்டில் ட்ரான்சிஸ்டர்கள் போன்ற பிற உறுப்புக்கள் ஒன்று சேர்த்து இணைக்கப்பட்டு, ஒருங்கிணைக்கப்பட்ட மின்சுற்று அமைக்கப்பட்டது இந்த வகைக் கணினிகளில். இதன் காரணமாக இவ்வகைக் கணினிகளில் ஒரே ஆணைத் தொடரை வேறு கணிப்பொறிகளுக்கு அளிக்க முடிந்தது.

## நான்காம் தலைமுறைக் கணிப்பொறிகள் (FOURTH GENERATION COMPUTERS)

இப்போது நடைமுறையில் உள்ளவை நான்காம் தலைமுறைக் கணினிகள். மின்சுற்றுக்கள் அவற்றில் மிக நெருக்கமாக அமைக்கப்பட்டவை. ஒரு சிறிய சிலிக்கான் சில்லில் பத்து லட்சம் மின்சுற்றுக்கள் அமைக்கிறார்கள். இதற்கு 'மெட்டர்

ஆக்ஸிடைஸர் செமிகண்டக்டர்' என்ற தொழில் நுணுக்கத்தைக் கடைபிடிக்கிறார்கள்.

## ஐந்தாம் தலைமுறைக் கணிப்பொறிகள் (FIFTH GENERATION COMPUTERS)

மனித அறிவாற்றலால் செய்யப்படும் காரியங்களை, கணினியின் மூலம் எப்படிச் செயல்பட வைப்பது என்பதற்கான தொழில்நுட்பங்களையும் ஆலோசனைகளையும் அளிப்பதுதான் செயற்கை அறிவு (ARTIFICIAL INTELLIGENCE) என்ற பிரிவின் வேலை. ஐந்தாவது தலைமுறை கணினிகள் என்று கூறப்படுபவை இது போன்ற செயற்கை அறிவின் வளர்ச்சியைப் பொறுத்தே வடிவமைக்கப்படுகின்றன. விரைவிலேயே இந்த வகைக் கணினிகளும் உருவாகிவிடும் என்கிறார்கள்.




## பின் ஆதரவு (BACKUP)

ஒரு ஆவணத்துக்கு இரண்டு பிரதிகள் இருப்பது

நல்லதில்லையா? அப்படியிருந்தாலும் அவை வெவ்வேறு இடத்தில் இருப்பதுதானே பாதுகாப்பு? அதுபோல கணினியில் நாம் உருவாக்கும் முக்கிய கோப்புகள் 'பாக்கப்' எனப்படும் இயக்கத்தின் காரணமாக கணினியின் வேறொரு இடத்தில் பாதுகாத்து வைக்கப்படும். நாம் உருவாக்கிய கோப்பு, ஏதோ சிக்கலின் காரணமாக அழிந்து விட்டால் இந்த பாக்கப் அப்போது கை கொடுக்கும்.



## வரிப்பட்டை அகலம் (BANDWIDTH)

பாண்ட்விட்தை அதிகப்படுத்தினால்தான் இன்டர்நெட்டில் சுலபமாகத் தொடர்பு கொள்ள முடியும் என்பதை அடிக்கடி கேள்விப்பட்டிருப்பீர்கள். ஒரு குறிப்பிட்ட வரிப்பட்டையின் மிக உயரமான அலைவரிசைக்கும், மிகக் குறைந்த அலைவரிசைக்கும் உள்ள வேறுபாடுதான் 'பாண்ட்விட்த்'. இதை ஹெர்ட்ஸ் (Hertz) என்ற கணக்கில் அளவிடுவார்கள்.

## பட்டைக் குறியீடு (BARCODE)

பல பிரபலமான பதிப்பகங்கள் வெளியிடும் புத்தகங்களின் பின்னே கோடுகள் அச்சிடப்பட்டிருப்பதைக் காணலாம். பல்வேறு அகலங்களில் அமைந்துள்ள இக் கோடுகள் ஒவ்வொன்றும் ஒரு குறிப்பிட்ட எண்ணைக் குறிக்கிறது. 'பார்கோட் ரீடர்' எனப்படும் கருவியில் இதை வைக்கும்போது வரிகளின் அமைப்பையும் அளவையும் பொறுத்து, அந்தப் பொருளின் விலை என்ன என்பது தானாக உணரப் பட்டு 'பில்'லில் சேர்த்துக் கொள்ளப்படும்.




## பிழை (BUG)

கணினியில் உள்ள மென்பொருள் சரியாக இயங்காமல் அதனால் அதன் சிஸ்டத்திலோ, திட்ட நிரலிலோ தவறு ஏற்பட்டால் அதுதான் 'பக்'. இந்தச் சொல்லுக்கு 'மூட்டைப் பூச்சி' என்ற பொருளும் உண்டு. இது ஒரு காரணப் பெயர். 1945ல் ஒரு கணினியில் பல தவறுகள் ஏற்பட்ட போதிலும் அதற்கான காரணம் என்னவென்றே விஞ்ஞானிகளால் கண்டுபிடிக்க முடியவில்லை. கடைசியில் அதன் வன்பொருளில் ஒரு மூட்டைப்பூச்சி



ஒட்டிக் கொண்டதால்தான், கணினி சரியாக இயங்காமல் பல தவறுகளைச் செய்தது என்பது கண்டறியப்பட்டது. இதனால்தான் கணினியில் வன்பொருளில் உள்ள தவறைக் கண்டுபிடித்து நீக்குவதை 'Debugging' என்கிறார்கள்.

## ஸி–டாக் (C-DAC)

Centre for Development of Advanced Computing என்ற அமைப்பின் சுருக்கப் பெயர் இது. இந்திய அரசால் புனேவில் தொடங்கப்பட்ட அமைப்பு இது. இந்த அமைப்பு 'பரம்' என்ற பெயரில் நம் நாட்டின் முதல் சூப்பர் கணினியை உருவாக்கி விட்டது. இதன் செயல் வேகம் ஒரு நொடிக்கு 100 மில்லியன் ஃப்ளோட்டிங் பாயிண்ட்டுகள்.

## ஸி.ஐ.எம். (CIM)

Computer Input Microfilm என்பதன் சுருக்கம் இது. காகிதத்தில் அச்சிடுவதற்குப் பதிலாக மைக்ரோபிலிம் தொழில்நுட்பம் பயன்படுத்தப்படுகிறது.

## டாட் மாட்ரிக்ஸ் அச்சுப் பொறி (DOT MATRIX PRINTER)

எளிய, சிக்கனமான அச்சுப் பொறி இது. அச்சு ரிப்பனில் ஊசிகளைக் குத்துவதன் மூலம் சிறு புள்ளிகளை உருவாக்கி எழுத்துக்கள் மற்றும் உருவங்களை அமைக்கும் வகையிலானது இது.

## ஈ—மெயில் (E-MAIL)

எலக்ட்ரானிக் மெயில் என்பதன் சுருக்கம். பொதுவாகத் தொலைபேசிக் கம்பிகள் அல்லது வானொலி ஒலிபரப்பு மூலம் இந்தத் தகவல் பரிமாற்றம் நடைபெறுகிறது. இதனால்தான் தொலைபேசி வேலை செய்யவில்லையென்றால் மெயில்களை அனுப்பவோ, பெறவோ முடியாமல் போகிறது.




## ஹாக்கர் (HACKER)

கணினியில் மிக ஆழ்ந்த ஆர்வமும் அறிவும்

கொண்ட நபர்.



## கடினப்படி
## (HARD COPY)

கணினியில் உள்ள விவரத்தை நிரந்தரமான வடிவத்தில் வெளியீடாகக் கொள்வது. உதாரணமாக கணினியில் உள்ள விவரத்தைப் பேப்பரில் ப்ரிண்ட் எடுத்தால் அது ஹார்ட் காப்பி. திரையில் அந்த விவரங்கள் தெரிந்தால் அது ஹார்ட் காப்பி அல்ல.

## இருதரப்புப் பரிமாறல்
## (INTERFACE)

கணினியில் உள்ள ஒரு கட்டளை அல்லது கருவி. இதன் மூலம் இருதரப்பினருக்குத் தங்களுக்குள் தகவல் தொடர்பு ஏற்பட உதவி கிடைக்கிறது.

## மொழிமாற்றி (INTERPRETER)

அந்தக் காலத்தில் துபாஷி இருந்தார்களல்லவா, அது போலச் செயல்படுவது. உயர்நிலை மொழியில் உள்ள ஆணைகளை இயந்திர மொழியில் மாற்றித் தருகிறது. உதாரணம் பேசிக்.



## லேசர் ப்ரிண்டர் (LASER PRINTER)

Light Amplification by the Stimulated Emission of Radiation என்பதன் சுருக்கப் பெயரே லேசர். லேசர் அச்சுப்பொறியின் செய்முறை நல்ல ஜெராக்ஸ் எடுப்பதைப் போன்றே சிறந்த விளைவைத் தருகிறது.

## ஒளிப் பேனா (LIGHT PEN)

கணினியின் திரையில் எழுதவோ அல்லது படங்களை வரையவோ



பயன்படுத்தக்கூடிய கருவி. இதனால் எழுதினால் அதை உள்ளீட்டு விவரமாகவே கணினி ஏற்றுக் கொள்கிறது. ஒளிப்பேனாக்கள் திரையை ஒரு மின்னணுக் காகிதமாகவே ஆக்கி விடுகிறது.

## லின்டாப் குழ (LINDOP COMMITTEE)

இங்கிலாந்தில் 1978ல் அமைக்கப்பட்ட இந்தக் குழு, கணினியில் உள்ள தகவல்களைப் பாதுகாப்பதற்கான வழிமுறைகளைப் பரிந்துரை செய்தது. இவையே 'Data Protection Act' என்ற பெயரில் இங்கிலாந்து அரசால் சட்டமாக்கப்பட்டன. இந்தச் சட்டம் நாளடைவில் பல நாடுகளிலும் சட்டமாக அடித்தளமாக அமைந்தது.

## உள்ளூர்ப் பகுதி கட்டமைப்பு (LOCAL AREA NETWORK)

ஒரு அலுவலகத்தில் உள்ள பல்வேறு கணிப்பொறிகளை இணைக்கும் அடிப்படைத் தொடர்புக் கட்டமைப்பு என்று இதனைச் சொல்லலாம். அதாவது

ஒரு டெர்மினலில் தகவல்களைச் செலுத்தினால் மற்றொரு டெர்மினலிலும் அந்தத் தகவல்கள் பதிவாகும்.

## காந்த உரு மை கண்டறிதல் (MAGNETIC INK CHARACTER RECOGNITION)

பல வங்கிகளில் இப்போது MICR காசோலைகள்தான் வழங்கப்படுகின்றன. சிறப்பு காந்த மையினால் அச்சிடப்பட்டிருப்பதால் ஏமாற்று வேலைகளைச் செய்வது மிகக் கடினம்.

## மோடம் (MODEM)



கணினியிலிருந்து தொலைபேசிக் கம்பிகள் வழியாக விவரம் அனுப்பவும், தகவல் பெறவும் மோடம் கருவி தேவை. (அதாவது இன்டர்நெட் வசதிக்கு இது தேவை). மாடுலேடர், டிமாடுலேடர் என்ற சொற்களின் சுருக்கப் பெயர்.

## சூப்பர் கம்ப்யூட்டர் (SUPER COMPUTER)

ஒரு வினாடி நேரத்தில் மூன்று ட்ரில்லியன் கணக்கீடுகளைச் செய்யக்கூடியவை. ஒரு கோடி டிரான்ஸிஸ்டர்களை உள்ளடக்கியவை இவை.



## ப்ரௌஸர் (BROWSER)

உலக வலைத்தளத்தில் என்னவெல்லாம் உள்ளன என்பதைத் துருவி ஆராய உதவுகிறது இந்த மென்பொருள் நமக்குப் பயன்படக்கூடிய தகவலைத் தேடிப் பிடிக்கவும், இன்டர்நெட்டை எளிதாகப் பயன்படுத்தவும் இது உதவுகிறது. மொஸைக் என்ற ப்ரௌஸர் முன்பு பிரபலமாக இருந்தது. இப்போது நெட்ஸ்கேப் நாவிகேடர் மற்றும் மைக்ரோஸாஃப்ட் இன்டர்நெட் எக்ஸ்ப்ளோரர் ஆகிய ப்ரௌஸர்கள் பிரபலமாக உள்ளன.

## என்க்ரிப்ஷன் (ENCRYPTION)

இது ஒரு சங்கேத முறை கொண்ட தகவல் பரிமாற்றம். செய்தியை ஒருவித

ரகசிய முறையில் குறியீடாகக் கொடுக்கும் முறை இது. DECRYPTION என்பது அந்த சங்கேத மொழிகளை நமக்குத் தெரிந்த மொழியில் மாற்றுவது.

## மனிதனும் கணினியும்



நம்மைப் போல கணினிக்கு ஆறாவது அறிவு கிடையாது. ஆனால் உலகின் தலைசிறந்த செஸ் ஆட்டக்காரரான காஸ்பரோவை எளிதில் தோற்கடிக்க ஒரு கணினியால் முடிந்திருக்கிறது. செஸ்ஸை உதாரணமாய் நாம் எடுத்துக் கொண்டதற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு. பெரிதும் மூளை சம்பந்தப்பட்ட விளையாட்டு இது. மனித மூளையோடு ஒப்பிடும் போது அந்த அளவுக்கு ஒரு கணினியால் இப்போதைக்கு வளர முடியாது என்கிறார்கள். ஆனால் சில குறிப்பிட்ட கோணங்களில் மனிதனைத் தூக்கிச் சாப்பிட்டு விடுகிறது அவனது படைப்பான கணினி. 2467432 என்ற எண்ணை 889233421 என்ற எண்ணால் பெருக்கினால் விடை என்ன வரும்? "கால்குலேட்டர் இல்லாமல் இதை எப்படிச் செய்ய?" எனும் அளவுக்கு




கணினியின் சின்னத் தம்பியான கால்குலேட்டர் இதற்கெல்லாம் நமக்கு இன்றியமையாததாகி விட்டது. சகாதேவனே இப்படி என்றால் தருமன் எப்படி யிருப்பான்? கணினி இதுபோன்ற பல தர்க்கரீதியான பிரச்னைகளுக்கு உடனடியாக விடையளிக்கும். எத்தனை முறை எத்தனை விதமாக இதே கேள்வியைக் கேட்டாலும் சலிக்காமல் அதே விடையைக் காட்டும். ''உங்களுக்கு வேற வேலையில்லையா?'' என்று கோபப்படாது. காரணம் அதற்கென சிந்திக்கும் திறன் கிடையாது. களைப்பே இல்லாமல் நமது கட்டளைகளை நிறைவேற்றும் சேவகன் கணினி. அதைப் பற்றிய சில அடிப்படை விவரங்களை அறிந்து கொள்ளாவிட்டால் எப்படி?

## விண்டோஸ்

**வ**ன்பொருள் (Hardware) என்றால் கணினியின் பல்வேறு பாகங்களைக் குறிக்கும். மென்பொருள் (Software) எனப்படுவது, அந்த வன்பொருள் என்ன செய்ய வேண்டும்

என்று நாம் இடும் கட்டளைகளைக் குறிக்கும். பல்வேறு மென்பொருள்கள் உண்டு என்றாலும் மிகப் பரவலாகப் பயன்படுத்தப்படுவது 'ஆபரேடிங் ஸிஸ்டம்' (அதாவது செயல்பாட்டுத்தளம்) எனப்படும் மென்பொருள்தான். நமக்கும் வன்பொருளுக்கு மிடையே ஒரு அழகான பாலமாக விளங்குகிறது இந்த மென்பொருள். வழக்கமான செயல்கள் பலவற்றையும் இதுவே செய்து விடுவதால் நமது வேலை மிகவும் எளிதாகி விடுகிறது. சில பயனுள்ள திட்ட நிரல்களை (Programmes) நம்மைப் பயன்படுத்த அனுமதிப்பதோடு வேறு பல மென்பொருள்களைப் பயன்படுத்தக்கூடிய ஒரு மேடையாகவும் இந்த ஆபரேடிங் ஸிஸ்டம் விளங்குகிறது.



MS-DOS, யுனிக்ஸ், லினக்ஸ், OS2 என்று இதில் பலவிதங்கள் இருந்தாலும் மிகவும் பிரபலமாக விளங்குவது 'விண்டோஸ்'தான். பில்கேட்ஸின் மைக்ரோஸாப்ட் நிறுவனம் நாட்டிய மாபெரும் வெற்றிக்கொடி இது. அறிமுகமான சில வருடங்களிலேயே வீடுகள், அலுவலகங்கள், வியாபார கேந்திரங்கள் என்று பல இடங்களிலும் இடம்பெறத் தொடங்கியது விண்டோஸ். 1995 வரை MS-DOS என்ற ஆபரேடிங் ஸிஸ்டத்தில்தான் விண்டோஸின் திட்ட நிரல்கள்

இயங்கின.

ஆனால் விண்டோஸ் - 95 ஒரு புரட்சியை உருவாக்கியது. இதற்கு முன் இருந்ததைப் போல் அல்லாமல் அந்த ஆண்டில் அறிமுகமான விண்டோஸ், ஒரு முழுமையான (MS - DOS ஐச் சார்ந்திராத) ஆபரேடிங் சிஸ்டமாக விளங்கத் தொடங்கியது. புதிதாக அறிமுகப்படுத்தப்பட்ட சுருக்கு வழிகள், இயல்பான கவர்ச்சிகரமான வழிமுறைகள் இவையெல்லாம் விண்டோஸ் 95-வை வெற்றிபெறச் செய்தன.




அதற்குப் பிறகு அறிமுகமான விண்டோஸ் 98 மேலும் பல சாதகமான அம்சங்களைக் கொண்டிருந்தது. வழக்கமான விஷயங்களோடு, ஒரு கால்கு லேட்டராகவும், நமக்குப் பிடித்த உருவங்களை நமக்குப் பிடித்த வண்ணங்களில் வரைய அனுமதிக்கும் ஒரு தளமாகவும் இது அமைந்தது. தவிர ரெடிமேடாக பலவித சிறு சிறு ஓவியங்களையும் (Clipart) தயாராக அது கொடுத்தது. அவை தாள்களிலும் தாள்களின் ஓரங்களிலும் 'ஒட்டுவதற்குப்' பயன்படுகின்றன.

விண்டோஸ் 98ன் ஒரு முக்கியமான விந்தை என்னவென்றால் அதிலுள்ள பல பயன்பாடுகளை (Applications) ஒரே சமயத்தில் பயன்படுத்தலாம். அது மட்டு

மல்ல ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு விவரங்களை மாற்றிக் கொள்வதும் வெகு எளிதாக அமைந்தது.

உதாரணமாக MS word உதவியுடன் ஒரு நீண்ட அறிக்கையைத் தயார் செய்ய லாம். அதன் முடிவில் MS Excel சென்று ஒரு Graph ஐத் தயார் செய்து அதை மேற்படி அறிக்கையில் சேர்க்கலாம். நடுவே போரடிக்கும்போது கணினியிலேயே சீட்டுக்கட்டு உள்பட சில விளையாட்டுகளை விளையாடிவிட்டு பின் மீண்டும் அறிக்கையைத் தொடரலாம்.



விண்டோஸ் 2000 அறிமுகமாகி, அதிகப்படியாக சில அம்சங்கள் அதில் சேர்க்கப்பட்டன.

## கம்ப்யூட்டர் ஷூக்கள்

விளையாட்டு வீரர்கள் அணியும் ஷூக்களில் கூட கணினி பெரும் அற்புதங்களைச் செய்து வருகிறது. உடலின் எடை, பாத அளவு, தேவைப்படும் வேகம் ஆகியவற்றிற்கேற்ப கம்ப்யூட்டர்கள் ஷூக்களைத் தயாரிக்கின்றன. அடிடாஸ், ப்யூமா ஆகிய பிரபல விளையாட்டுக் கருவிகள் தயாரிப்பு



நிறுவனங்கள் இதுபோன்ற புதுவித ஷூக்களைத் தயாரிக்கின்றன. அது மட்டுமல்ல, அணிபவர் ஓடிய நேரம், கடக்கும் தூரம், இழக்கும் கலோரிகள் ஆகிய வற்றைக் கூட இந்த ஷூக்கள் பதிவு செய்கின் றன.

## பின்லாந்திலிருந்து வந்த நன்கொடை

அனைவரும் இலவசமாகப் பயன்படுத்தக்கூடிய செயல்தளத்தை பின்லாந்தைச் சேர்ந்த லினக்ஸ் டார்வல்ட் என்பவர் அளித்துள்ளார். லினக்ஸ் என்ற பெயரில் இவர் வெளியிட்ட இந்த செயல்தளத்தை யார் வேண்டுமானாலும் இன்டர்நெட்டிலிருந்து இறக்கி (download) வைத்துக் கொள்ள அனுமதி தந்து விட்டார் இந்த வள்ளல்! சொந்த உபயோகத்துக்காக மென்பொருள்களை உருவாக்குபவர்களுக்கும், ஏழை நாடுகளுக்கும் லினக்ஸின் இலவச சேவை ஒரு வரப்பிரசாதம்.

**வேலை தேடுவோருக்கு உதவக்கூடிய சில வலைத்தளங்கள்:**

computerjobs.com
y-axis.com
searchitjobs.com
softwaredeveloperjobs.com
cioljobs.com
h l jobs.com
h l bsponsors.com
jobcurry.com
itcareers.com
jobs4it.com
dice.com
techies.com
justtechjobs.com
information-technology-jobs.com
softcareers.com
people-softemployment.com



surf4jobs.com
itmoonlighter.com
computerwork.com



swiftjobs.com
ishunter.com
skillsvillage.com
webprogrammerjobs.com
webdesignerjobs.com
softwaredeveloper.com
javajobsonline.com
javajobsonline.com
webmasteremployment.com
ecommerceemployment.com
visualbasicjobs.com
ustechjobs.com
powerbuilderjobs.com
sap-resources.com
developers.net
hotlinuxjobs.com
cplusplusjobs.com

coboljobs.com
systemsnaallyst.com
webjobssusa.com
clickitjobs.com
Timesjobsandcareers.com
naukri.com
jobkhoj.com
naukri2000.com
jobtrove.com
headstartexpress.com
placementindia.com
indianparttimejobs.com
alltimejobs.com
career1000.com
careerage.com
jobszillion.com

aidnjobs.com
prizedjobs.com
jobspoint.com



3pjobs.com

தொகுப்பு: **ஜி.எஸ்.எஸ்.**

அட்டைப் படம், படங்கள்: **நடனம்**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2001 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka. Supplement to the Kalki issue Dated 19.8.2001

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2001 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka